# சைவ சித்தாந்தமும், விஞ்ஞான உலகமும்



தனபாக்கியம் - குணபாலசிங்கம் எம்.ஏ.,



# சைவ சித்தாந்தமும் விஞ்ஞான உலகமும்


திருமதி தனபாக்கியம் – குணபாலசிங்கம்

B.A.Hons. (Cey.), M.A. (Madras)

*(கொழும்புப் பல்கலைக்கழக முன்னைநாள்*

*இந்துக் கலாசார விரிவுரையாளர்)*





**மணிமேகலைப் பிரசுரம்**

தபால் பெட்டி எண் : 1447

7, (ப.எண்.4) தணிகாசலம் சாலை.

தியாகராய நகர். சென்னை - 600 017,

தொலைபேசி : 2434 2926

தொலை நகல் : 0091 044 - 2434 6082

மின் அஞ்சல் : manimekalai@eth.nett

www.manimekalaiprasuram.com

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | ➢ | சைவ சித்தாந்தமும், விஞ்ஞான உலகமும் |
| ஆசிரியர் | ➢ | தனபாக்கியம் - குணபாலசிங்கம் |
| மொழி | ➢ | தமிழ் |
| முதல் பதிப்பு | ➢ | 1990 |
| இரண்டாம் பதிப்பு | ➢ | 2004 |
| உரிமை | ➢ | ஆசிரியர்க்கே |
| தாளின் தன்மை | ➢ | 11.6 கி.கி |
| நூலின் அளவு | ➢ | கிரௌன் சைஸ் (12 ½ X 18 ½ செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | ➢ | 11 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | ➢ | XIV + 334 = 348 |
| நூலின் விலை | ➢ | ரூ.75.00 |
| அட்டைப்பட ஓவியம் | ➢ | சாய் |
| லேசர் வடிவமைப்பு | ➢ | எக்ஸ்பிரஸ் கம்ப்யூட்டர் சென்னை - 24. |
| அச்சிட்டோர் | ➢ | பி.வி.ஆர் ஆப்ஸெட் சென்னை-14. |
| நூல் கட்டுமானம் | ➢ | தையல் |
| வெளியிட்டோர் | ➢ | மணிமேகலைப் பிரசுரம், சென்னை - 17 |






**தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்**
**சாற்றிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமாய்**
**ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்முத்தி**
**நான்ற மலர்ப்பதத்தே நாடு.**

***(உண்மை விளக்கம் 35)***




எம் சைவ மதத்தில் இறைவன் புகழையும், உயிர்களின் சிறுமையையும், சிற்றின்பங்களின் நிலையாமையையும் எடுத்துரைத்த மறைமொழி மாந்தர்கள், பலதரப்பட்ட மக்கள் தேவைகளையும், அபிலாசைகளையும் நிறைவேற்றும் வகையிற் தெரிவித்த மறை மொழிகள் பலதரப்பட்டனவாம். ஆயினும் இவற்றிடையே ஒரு பொதுத் தன்மை யாதெனில், இவை யாவும் தென்னகத்தில் இறைவனால் அருளப்பட்ட சிவாகமங்களினின்றும் விரிந்தவை என்பதாம். எனவே, இவ்வெவ்வேறு தரப்பட்ட மறைமொழி மாந்தர் சிந்தையிற் தெளிந்தவைகளையெல்லாம், ஓரிடத்திலே சேர்த்துத் தொகுத்தளிக்கும் எம் முயற்சியை, இந்நூலின் முதற் பாகத்திற் கண்டு தெளியலாம். மிக அளப்பரிய விடயத்தை நாம் தனியனாக முயன்றது இறைவன் திருவுள்ளமேயாம். எனினும் ஏகதேச அறிவுடைய எம் சிற்றறிவிற்கு எட்டாத நிலையில், சைவத் திறனை உலகுக்கு எடுத்துரைத்த பெரியார்களைத் தவறவிட்டிருப்பேனானால், சைவ சித்தாந்த அன்பர்கள் பொறுமையுடன் எமக்கு அறிவிப்பார்களாக. இந்நூலை முடியுமான அளவிற்குக் கால அடிப்படையிலேயே வகுத்தும், தொகுத்தும் தர முயன்றுள்ளேன். எனினும் மாணிக்கவாசக சுவாமிகள் காலம் பற்றி அறிஞர்களிடையே இரு வகைக் கருத்துக்கள் உள. எமது சிற்றறிவைத் துணைக்கொண்டு ஆராய்ந்தபொழுது மாணிக்கவாசகர் காலத்தால் முற்பட்டவர் என்ற கருத்தினையே நாம் ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இருக்கின்றது. எனினும், இதனை ஒரு குற்றமற்ற வைப்புமுறை என்ற யாம் வற்புறுத்துவதற்கில்லை.



இந்நூலின் இரண்டாம் பகுதியில், இன்றைய விஞ்ஞான ஆய்வுகள் மூலம் உயிரின் இயல்புகளைப்பற்றியோ, அன்றேல் பிரபஞ்சத்தின் எல்லைகளைப் பற்றியோ நாம் நன்கு புரிந்துகொள்ள முடியாதிருக்கும் நிலைகளைச் சுட்டிக்காட்டியிருக்கின்றோம். எனவே, இந்நிலையில் யாவற்றிலும் உடனாயும் வேறாகியும் நிற்கும் இறைவனைப்பற்றி இன்றைய விஞ்ஞானம் ஆய்வுகளை நடத்தமுடியுமா? முடியவே முடியாது. அதனாலேதான் சிலர் நாத்தழும்ப நாத்திகம் பேசுவர். இந்நிலையில் சைவ சித்தாந்தமே எமக்குறுதுணையாக இருந்து, இப்பூமி, இவ்வுடற்கருவிகள், போகங்கள் யாவும் எமையுய்யக் கருதி இறைவனாற் தரப்பட்டவை என்ற உண்மையை உணர்த்தி வருகின்றது.

மேலும், விஞ்ஞான ஆய்வுகள் எல்லைப்படுத்தப்பட்ட நிலையில், எமது நூலின்கண் ஆராயப்பட்ட சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை, ஞானக்கண்கொண்டு நோக்கி, ஆசியுரைகளை வழங்கிய நல்லை ஞானசம்பந்தர் ஆதின சுவாமிகள், எம்மை இறையின்பத்தில் வழிபடுத்துகின்ற இறையடியாரே ஆவர். நாம் என்றைக்கும் அவர் நெறி நிற்போமாக.

கிழக்கிலங்கைப் பல்கலைக் கழக விலக்கியற்துறைப் பேராசிரியையான மனோ. சபாரத்தினம் அவர்கள் மனமுவந்தளித்த அணிந்துரை எமது நூலின் குற்றமும், குணமும் நாடிய அளவுகோலாக அமைந்துள்ளது. எம் நூலைப் பொறுமையுடன் கண்ணோட்டமிட்டு வழங்கிய இவ்வுரைகளுக் கெல்லாம் எனது உளங்கனிந்த நன்றிகள்.

மற்று, யாம் கொழும்புப் பல்கலைக் கழகத்தில் இந்துக் கலாசாரத் துறை விரிவுரையாளராகக் கடமை யாற்றிய காலத்தில், கிடைத்தற்கரிய பல சைவ சித்தாந்த நூல்களை எம் பார்வைக்குத் தந்துதவிய காலஞ்சென்ற பௌதிகவியற் பேராசிரியர் ஆ.வி.மயில்வாகனம் (கி.பி.11-11-1906 - 23-3-1987) அவர்களையும், என் மாமனார் ஏ.தில்லையம்பலம் (ஒய்வுபெற்ற அதிபர், ஏகாம்பர வித்தியாசாலை, கப்புது) அவர்களையும் இத்தருணத்தில் நினைவுகூர்தலும் அவசியமே.

இறுதியாக மட்டுநகர்ப் பொது நூலகத்தாருக்கும் எம் நன்றி உரித்தாகுக. எப்பொழுதும் எம் தேவைகளைக் கருத்திற் கொண்டு, எமது நூல்களைக் குறுகிய காலங்களில் அச்சேற்றி தருகின்ற சென் ஜோசப் கத்தோலிக்க அச்சகத்தாரின் தமிழ் வளர்க்கும் பணிகளை நாம் என்றைக்கும் மறப்பதற்கில்லை.

Mrs. DHANAPACKIAM GUNABALA SINGAM
திருமதி தனபாக்கியம் – குணபாலசிங்கம்
6, SHELLY AVENUE
LONDON E12 6SW
21-03-2004





## பதிப்புரை

தமிழ்மக்கள் வாழ்வில் சமயம் முழுமைபெற்றுத் திகழ்கின்றது. எனினும் இன்று உலகெங்கும் சிதறுண்டு வாழும் நிலையில் சமயம் தழும்பாவிடினும், இவர்களுக்குத் தமது வாழ்வியலுக்கான சைவநெறிகளை அறிந்து கொள்ள நூல்கள் கிடைப்பது அரிது.

அதோடு சைவத்தைப் போற்றி வருகின்ற தமிழ்மொழி அறிவற்ற ஒரு சந்ததியினர் இந்நாடுகளிலெல்லாம் உருவாகிக் கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்குத் திருக்குறள், தேவார, திருவாசகங்கள், திருப்புகழ், அபிராமி அந்தாதி முதலான சைவ சமய நூல்களிலும், போற்றிப் பாடல்களிலும் கூறப்பட்டுள்ள அருமை பெருமையான தத்துவங்களை அறியும் வகையோ அல்லது இவற்றை நெஞ்சுருகப் பாடி அழும் வாய்ப்புகளோ இல்லை எனலாம். இக்குறையினை நிவர்த்திக்க சைவப் பெரியாரிடையே அதிகமுயற்சிகளுமில்லை. எனினும் தமிழறிவும், சைவ அறிவும் பெற்றவர்களான பெரியவர்கள் தமது சமயத்தைச் சென்றவிடமெல்லாம் கட்டிக், காத்துப் பேணி வருகின்றார்கள். இவர்கள் ஆலயங்களை அமைத்து, ஆகம வழிபாட்டுப் பூசைகளில் தம்மைப் பக்குவப்படுத்தி வருகின்றார்கள். ஆயினும் சமய வழி பாடுகளில் ஈடுபட்டு, இறையனுபவங்களைப் பெற்ற எம் அடியார்கள் வரலாறுகளையோ, அன்றேல் சைவசித்தாந்தத்தின் உண்மைப் பொருள்கள் பற்றிய கோட்பாடுகளையோ அறிய வல்ல சமயநூல்களைப் பெறுவதில் அதிக சிரமங்களை அனுபவிக்கின்றார்கள்.

இச்சூழ்நிலையில், மணிமேகலைப் பிரசுரத்தார் சென்னையிலிருந்து பலதரப்பட்ட நூல்களையும் பிரசுரித்து, உலக நாடுகளுக்கு எடுத்துச்சென்று விற்பனை செய்யும் முயற்சியானது, தமிழ்மக்களுக்குக் கிடைத்த வரப்பிரசாதமாகும். இவ்வரிய பணியை மேற்கொண்டுவரும் மணிமேகலைப் பிரசுரத்தார் இந்நூலை மறுபதிப்புச் செய்ய முன்வந்த பொழுது, நானும் அதுவொரு நற்பணியென்றே கருதினேன், ஏனெனில் இந்நூலில் சைவத்தின் அருமை, பெருமையெல்லாம் ஆராய்ந்து, வரலாற்றடிபடையில் தொகுக்கப்பட்டுள்ளது. இதன் முதற்பதிப்பு வெளியாகிய பொழுது கொழும்பு இந்துக்கலாசாரத் துறையினரும், வட - கிழக்கு மாகாணக் கல்வி - விளையாட்டுத் துறையினரும், இந்நூலினைச் சிறந்த மெய்ஞ்ஞான நூலாகக் கொண்டு பரிசில்களை வழங்கியிருந்தனர். அதனால் இந்நூலை உலகளாவிய அளவில் பரந்துவாழும் தமிழ்மக்கள் யாவரும் வாசித்துப் பயனடைய வேண்டுமென்பது என் அவா. இம்மறுபதிப்பின் விற்பனை நிதியானது இலங்கையில் உள்ள எனது சைவத்திருக் கோவிற் திருப்பணிகளுக்குப் பயன்படுத்தப்படும். இந்நூலை அழகாக அச்சேற்றித்தந்த மணிமேகலைப் பிரசுரத்தார் அனைவருக்கும் என் நன்றிகள்.

மேன்மைகொள் சைவநீதி
விளங்குக உலகமெலாம்

6, SHELLY AVENUE
LONDON E12 6SW
01-06-2004



ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத தேசிக ஞானசம்பந்த பரமாசார்ய ஸ்வாமிகள்
குருமஹா சந்நிதானம் - ஆதிமுதல்வர், ஸ்தாபகர்

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக ஞானசம்பந்த
பரமாசார்ய ஸ்வாமிகள்
இரண்டாவது குருமஹா சந்நிதானம் - ஆதீன முதல்வர்

நல்லை திருஞானசம்பந்தர் ஆதீனம்
பருத்தித்துறை வீதி, நல்லூர், யாழ்ப்பாணம், இலங்கை.

தொலைபேசி : 24018

**சித்தாந்தப் பற்றுடைச் செம்மல்களே,**

எந்தவொரு புறச் சமயத்திலும் அமைவுறாத அரிய தத்துவமே சைவ சித்தாந்தம். இதனைச் சில அன்பர்கள் ஒரு சிக்கலான விஷயம். அது காஷாயம் தரிக்கும் சந்நியாசிகளுக்கே பொருந்தும்; இது எமக்கு விளங்காது என்று எண்ணுவதுண்டு. அது தவறு, சித்தத்தின் முடிபு, அல்லது மனத்தின் முடிபு - சித்தாந்தம். பெறுதற்கரிதான மானுடப் பிறப்பின் நோக்கம், குறிக்கோள் பற்றற்ற நிலையில் பரம்பொருளை அடைவதே, அதுவே முடிபு. 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' அந்தக்கரணங்கள் யாவும் ஒடுங்கிய நிலை. அவனே நான் என்று கூறுகிறது வேதாந்தம். நானும், அவனும் என்கிறது சித்தாந்தம். சைவ சித்தாந்தத்திற்கு பிரமாண நூல்கள், நால்வேதம் 28. சிவாகமங்கள் 14. தமிழ்ச் சித்தாந்த சாஸ்திரங்கள். இவற்றைத் துறைபோகக் கற்றுணர்ந்தவர்கள் மிகச் சிலரே. அல்லது ஒருவருமிலரெனலாம்.

வினை, வினை செய்தவன், வினைப்பயன், வினையைக் காலம், இடம் அறிந்து ஊட்டுபவன் இறைவன். இவற்றை - 'சைவ சித்தாந்தமும், விஞ்ஞான உலகமும்' என்னும் நூலின் பிரதியிற் கண்ணுற்றோம். இதனை யாத்த திருமதி தனபாக்கியம் குணபாலசிங்கம் இத்தத்துவத்தை விளக்க அரும்பெரும் முயற்சி எடுத்துப் பல தத்துவ நூல்களை ஆய்ந்து, இலகு தமிழில் இந்நூலினை உருவாக்கியுள்ளார். மிகவும் பாராட்ட வேண்டியதொன்று.

சைவ மக்கள் எல்லோரும் விருப்போடு கற்றுணர்ந்து, அறிந்துகொள்ளவேண்டிய உண்மைப் பொருள்கள் இந்நூலில் நிறையவுண்டு.

நூல் ஆசிரியை நலமே நீடுவாழ்ந்து, இன்னோரன்ன அரிய நூல்களை யாத்துச் சைவ உலகுய்ய அளிக்க வேண்டுமென எல்லாம் வல்ல பரம்பொருளின் பாதார விந்தங்களைத் தியானித்து எமது உளமார்ந்த நல்லாசிகளை வழங்குகிறோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

**ஸ்ரீலஸ்ரீ ஸ்வாமிகள்**






தமிழரின் வாழ்க்கையோடிணைந்த மதம் சைவமாகும். அதனால் சைவத்தையும், தமிழையும் பிரித்துப் பார்க்க முடியாதிருக்கின்றது. இம்மதத்திலிருந்து உருவெடுத்த மதத்தத்துவம் சைவசித்தாந்தமாகும். எனவே, தமிழரின் மத தத்தவம் சைவசித்தாந்தமென நாம் பெருமையடைகின்றோம். இந்நெறியினை மையமாகக் கொண்டுருவாகிய "சைவ சித்தாந்தமும், விஞ்ஞான உலகமும்" எனும் நூலினைப் பார்க்க முடிந்ததையிட்டு நான் மகிழ்ச்சியடைகின்றேன்.

இந்நூலாசிரியை முதல் இயலிற் பொதுவாக இந்தியாவிலும், சிறப்பாகத் தமிழகத்திலும் சைவமும், சைவ சித்தாந்தக் கோட்பாடுகளும் உருவாகி வளர்ந்த வரலாற்றினைத் தற்கால ஆய்வுத்திகளைத் துணைக்கொண்டு ஆராய்ந்துள்ளார். இவ்வரலாற்றுப் பகுதி சைவ மக்களின் இன்றைய காலகட்டத் தேவையாகும். சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை எளிமை யாகவும், அனுபவ அடிப்படையிலும் விபரித்தவரான மாணிக்க சுவாமிகளின் பங்கினைக், கால அடிப்படையிற் காலஞ்சென்ற பேராசிரியர்களான மறைமலையடிகள், கா.சுப்பிரமணிய பிள்ளையவர்கள் முதலானோரைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றாமல், தாமும் சான்றுகளைக் காட்டி நிறுவியுள்ளார். ஆய்வுப்படிப்புகள் ஒரு தொடரோட்டம் போன்றவை. ஆகையால் ஆய்வுப்படிப்புகளை மேற்கொள்வோர் இவ்விடயத்தை இன்னும் ஆய்வுப் பொருளாகக் கொள்ளலாம் என்பது என் கருத்து.

இரண்டாம் இயல்பான ஈழத்துச் சைவசித்தாந்த வரலாற்றினைத் தொகுத்தும், வகுத்தும் ஆராய்ந்து காட்டுகின்ற

இவ்வாசிரியரின் முயற்சி, இத்துறையில் முதல் முயற்சியாகும். இத்துறையில் இன்னும் ஆய்வுகள் விரிவடைய வேண்டும் என எதிர்பார்க்கின்றேன்.

மூன்றாம் இயலில், விஞ்ஞானிகள் பிரபஞ்ச ஆய்வில் மேற்கொண்டு வருகின்ற ஆய்வுகள் விரிந்துகொண்டே போவதனால், பிரபஞ்சவியலில் விஞ்ஞானம் நெருங்கமுடியாத பகுதிகள் எல்லையில்லாதவையென்றும், பிரபஞ்சம் பற்றிச் சைவசித்தாந்தம் கொடுக்கின்ற விளக்கங்களே திருப்தி கரமானவையென்றும், ஆராய்ந்து காட்டித் தம் கோட்பாட்டினை நிறுவியுள்ளார்.

நான்காமியலான உயிரியல் ஆய்விலும் சைவசித்தாந்தக் கோட்பாடுகள் விஞ்ஞான ஆய்வுகளை விஞ்சி நிற்பதாக ஆசிரியர் ஆணித்தரமாக நிறுவுகின்றார். மேலும் உயிரின் குறிக்கோளையும், ஈடேற்றத்தையும் வற்புறுத்துவது சைவ சித்தாந்தமேயொழிய, விஞ்ஞானமல்ல என்பதனையும் வற்புறுத்துகின்றார்.

இறுதியிலான ''சைவசித்தாந்திகள் பேணிய ஆலய விஞ்ஞானம்'' எனும் பகுதியைச் சைவப்பெருமக்கள் படித்துப் பயன்பெறுவர் என்பதில் ஐயமேயில்லை. இந்நூலாசிரியர் "தேவாரத் திருமுறைகள் காட்டும் வழிபாட்டு முறைகள்'' எனும் ஆய்வுக் கட்டுரையில், இவ்வியலில் அடக்கியுள்ள கருத்துக்களைத் தொகுத்து அனுப்பியவிடத்துக் கொழும்புத் தமிழ்ச் சங்கம், இக்கட்டுரைக்கு ''சிவசுப்பிரமணியம் நினைவுப் பரிசினை'' வழங்கியிருந்தது என்பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

இறுதியாக இந்நூலில் இணைக்கப்பட்டுள்ள பிற் சேர்க்கைகள், பிரபஞ்சதத்துவ விளக்கப் படம் என்பன இந்நூலினை இனிது நிறைவுபடுத்தும் கூறுகளாக அமைந்துள்ளன.



"குணம் நாடிக் குற்றம் நாடுதல்" எனும் தமிழ் மரபிற்கிணங்க, இந்நூலிற் காணப்படும் சில குறைபாடுகளையும் இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். சைவசித்தாந்தத்தின் "இறையியல்" பற்றி ஆசிரியர் தனி இயலொன்றில் விரிவாக ஆராயாது விட்டமைக் குரிய காரணங்களை வினவியபொழுது, இந்நூல் விரிந்துவிடுமென்ற அச்சத்தினால், அவ்வாய்வினைத் தனி நூலொன்றிற் தாம் மேற்கொள்ள விருப்பதாகத் தெரிவித்தார். மேலும் இந்நூலில் மேற்கோளாகக் காட்டப்பெற்ற பத்திரிகை விடயங்களை எந்த அளவிற்கு ஆதாரமாகக் கொள்ளமுடிந்தது என்றும் வினவிய விடத்துத், தாம் தொல்லியற் களஆய்வுச் சான்றுகளைக் கையாள் வதில் நேரடியனுபவங்களைப் பெற்றவரென்றும், அதனாற் சைவ சித்தாந்தக் கருத்துக்களை உறுதிப்படுத்தும் வகையாக அமைந்த பத்திரிகைக் குறிப்புகளைத் தாம் நம்பகரமானவையா? அன்றா? என்று ஆராய்ந்த பின்னரே கவனமாகத் தேர்ந்தெடுத்தார் என்றும் கூறினர். மற்றும் இந்நூலில் மலிந்திருக்கும் அச்சுப் பிழைகள், இலக்கணவழுக்கள் என்பனவற்றைக் களைய, ஆசிரியர் இந்நூலின் இரண்டாம் பதிப்பில் முயற்சியெடுப்பார் என எதிர்பார்க்கின்றேன். இத்தகைய சிறு குற்றங்களை நாம் அதிகம் சீர்தூக்கி, ஆன்மீக விடாய், மற்றும் அறிவியல், சமய வரலாற்றியற் தாகங்களைத் தணிக்கக்கூடிய பல நன்மைகளை இழந்துவிடக்கூடாது. இத்துறையில் ஈடுபாடுடைய சைவமக்கள் யாவரும் படித்துப் பயனடையக் கூடிய நூலிதுவெனில் மிகையாகாது.

**''மேன்மை கொள் சைவநீதி**
**விளங்குக உலகமெலாம்''**

**பேராசிரியை மனோ. சபாரத்தினம்**
விலங்கியற் துறை, (இந்து மன்றப்பெருந் தலைவர்)
கிழக்கிலங்கைப் பல்கலைக் கழகம், செங்கலடி.

## உள்ளடக்கம்

பகுதி I



பகுதி II



# சைவசித்தாந்த வரலாற்றறிமுகம்

## தொல்லியலாய்வுகளும், சங்க இலக்கியக் குறிப்புகளும்:

**நா**ம் வாழ்கின்ற இவ்வண்டத்தைப்பற்றியும், பிண்டத்தை இயக்கித்திரிகின்ற உயிரிகள்பற்றியும், இவ்வற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டதான ஆக்க அறிவுச் சக்திபற்றியும், உலகின் பல பாகங்களிலும் பல்வேறு காலங்களிற் தோன்றிய ஞானிகளால் மிகப்பழையகாலம் முதலாகவே ஆராயப்பட்டுள்ளன. இவர்களுற் சிறப்பாக இந்தியாவில் வெவ்வேறு மதக்கோட்பாடுகளைப் பேணிய தத்துவ ஆசிரியர்கள் பல்வேறு கோட்பாடுகளை வெளிப்படுத்தியிருந்தனர். இவர்களுட் சைவ சித்தாந்திகள் கி.மு.4ம், 3ம் நூற்றாண்டுகள் முதலாகத் தத்துவ ஆய்வுகளில்

ஈடுபட்டு வந்துள்ளனர் என்பதற்குக் கடைச்சங்க இலக்கியங்களே சான்றுகளாக உள. சைவமதம் இந்துவெளி - ஹராப்பா நாகரிக மக்கள் கலாசாரத்துடன் பின்னிப்பிணைந்து உருவாகி, வளர்ச்சிபெற்ற மதம் என்பதனைத் தொல்லியலாய்வுகள், வடமொழி இலக்கியங்கள், கடைச் சங்க இலக்கியங்கள் என்பன உறுதிப்படுத்தியுள்ளன. இந்துவெளி - ஹராப்பாத் தொல்லியல் ஆய்வுகள், சைவ மக்கள் இப்பிரபஞ்சத்தை விரித்துக், காத்து, ஒடுக்குகின்ற சக்தியை இலிங்கவடிவிலும், யோகமூர்த்தி வடிவிலும் (தியானத்திலிருப்பவர்) வழிபட்டு வந்தனர் என்பதனை வெளிப்படுத்தியிருந்தன. பின் ஆரியப்படையெடுப்பாளர்கள், இலிங்க வழிபாட்டைப் பேணிய தாசர்களுக்கும், பிறருக்கும் (ஆதிதிராவிடர்களுக்கு) தீங்குகள் விளைவிக்கவே, இவர்களுட் பெரும்பாலானோர் குசராட், கேம்பே குடாவூடாகத் தெற்குநோக்கிப் பரவுகையிற், தமது சிவவழிபாட்டின் முக்கிய சின்னமாகிய இலிங்க வழிபாட்டினைத் தாம் குடிபெயர்ந்து சென்றவிடமெல்லாம் பேணியிருந்தனர். இவ்வாறு ஆரியப்படையெடுப்புகளுக்கு முகம்கொடுக்க விரும்பாத மக்கள், தம் சிவவழிபாட்டுக் கூறுகளைத் தெற்கே துங்கபத்திரை, கிருஷ்ணாநதிப்பள்ளத்தாக்கு, கோதாவரிக்கரையில் நிவேசா, டயமவாத் முதலான பகுதிகளிலும், இன்னும் தெற்கே மைசூரிற் பெல்லரி மாவட்டத்திற் தெக்கலகோட முதலான பகுதிகளிலும், புதிய கற்காலத்தின் இறுதிக்கட்டத்தில் வாழ்ந்த மக்களுக்கு கி.மு.1700 ஆம் ஆண்டளவில் அறிமுகப்படுத்தியிருந்தனர் என்பதனைத் தொல்லியலாய்வுகள் உணர்த்தியுள்ளன. பெல்லாரி மாவட்டத்தில் நிகழ்ந்த அகழ்வாய்வுகள், இலிங்கக் கற்கள்,



எருதின்சிற்பம் முதலான சிவ சின்னங்களை வெளிப்படுத்தின. எனவே சைவத்துடன் தொடர்புடைய திரிசூலம், எருது, இலிங்கம், யோகமூர்த்தம், பைரவர் மூர்த்தம் முதலான சமயக்கூறுகள் ஆரியக்கலாசாரத்திற்கு முற்பட்டனவாம்[2] எனினும் வடமேற்கிந்தியத் தொல்லியலாய்வுகளின்படி, இந்தோ-சீதியர் (Indo - Scythians) அல்லது குசான் மன்னன் வீமகட்பைசிஸின் (Vima Kadphisis கி.பி. 55-78) காசுகள், இந்துநதிப் பள்ளத்தாக்குமுதல், மேற்குப் பஞ்சாப், காபுல் பள்ளத்தாக்குவரை கிடைக்கப் பெற்றுள்ளன. இவற்றில் ஒருபுறத்திற் சிவன்முடியிற் தரித்த பிறைச்சந்திரன், வலது கையிற் திரிசூலம், இடதுகையிற் புலித்தோலும், நீர்ப்பாத்திரமும் கொண்டவராய்க் காணப்படுவர். மறுபுறத்தில் நந்தியுடன் நிற்பர். வாசுதேவனின் காசுகளிற் சிவன் மூன்று தலைகளுடனும், நான்கு கைகளுடனும் காணப் படுகின்றார். இக்காசுகளிலிருந்து, சைவமதம் தான் தோன்றியவிடத்திலே எதிர்ப்புக்களைச் சமாளித்துக்கொண்டு வளர்ச்சிபெற்றிருந்தது என்பதனை நாம், உணரக்கூடியதாக விருக்கின்றது. அதனாலேயேதான் பிற்காலத்திற் பிறநாட்டினரான குசானர்களையும் தன்பக்கம் ஈர்த்தெடுக்கலாயிற்று. இனித், தமிழகத்திற் சைவத்தின் வளர்ச்சிகளையாராய எமக்குச் சங்க இலக்கியங்கள் உதவுவனவாம். எமக்குக் கிடைத்துள்ள தமிழ்ச் சங்க இலக்கியங்களின் காலத்தை கி.மு. 1ஆம் நூற்றாண்டென நாம் அரிக்கமேட்டுத் தொல்லியற் தடயங்களுடன் தொடர்புபடுத்திக் கணித்தாலும், தமிழகத்தின் கடற்பெருக்குகளையும், முதற்சங்க இலக்கிய அழிவுகளையும், மற்று ஒரு சமுதாய இலக்கிய வளர்ச்சிகளுக்குத் தேவைப்படுகின்ற கால அளவுகளையும், கருத்திற்கொண்டு இவற்றிற் சில கி.மு. 4ம், 3ம் நூற்றாண்டுக்

காலத்தை அண்டியவை எனக்கணிக்க முயல்வது அறிவியலடிப்படைச் சிந்தனைக்கு முரணாகாதாம். சங்க இலக்கியங்களிற் பல்வகையான சமயக்கருத்துக்கள் மக்களிடையே பரவலாக இருந்தன என்பதனை நாம் அவதானித்த பொழுதும், சிவ வழிபாடே மேலானதொன்றாக வற்புறுத்தப்பட்டுள்ளது. எட்டுத் தொகை நூல்களுள் அகநானூறு, புறநானூறு, ஐங்குநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை என்பன வாழ்த்துப்பாவிற் சிவனையே துதிக்கின்றன. இவனையே உலகை இயற்றிக், காத்து, ஒடுக்குபவன் என்னும் இயல்புகளைக் கொண்டவன் என வர்ணித்துள்ளன. மேலும் தமிழகத்தில் மரநிழல்களிற் சிவலிங்கங்கள் அல்லது அருள் தறிகள் வைத்து வ்ணங்கப்பட்டன என்ற உருவ வழிபாட்டு நிலைகளையும் விபரித்துள்ளன. ஆய் அண்டிரன் என்னும் வேந்தன் ஆலமர் செல்வற்கு நீலநாகம் நல்கிய கலிங்கத்தை அளித்தனன் என்பதனை "நீலநாகம் நல்கிய கலிங்கம் ஆலமர் செல்வர்க்கமர்ந்தனன் கொடுத்த" எனச் சிறுபாணாற்றுப் படை (வரி 96-97) குறிப்பிடும். புறநானூற்றில் முக்கட் செல்வரின் அருள்வடிவுகொண்ட திருமேனியைப் பற்றி வாழ்த்துப்பாடல் விரித்துரைக்கும். அஃதாவது, கொன்றைமலரைச் சூடியவர், ஏற்றினை ஊர்தியாகக் கொண்டவன்; நஞ்சுண்டகண்டன்: பெண்ணுருப் பாதியுடையவனாயினும், அதனைத் தன்னுள் மறைப்பினும் மறைப்பன்; பிறையைச் சூடியவன்; பதினென்கணங் களாலும், வேதமுணர்ந்தோராலும் போற்றப்படுபவன்; உயிர்களுக்குக் காவலாக நீர்வற்றாத குண்டிகையும், திருச்சடையும் தாங்கியிருத்தலால், செய்தற்கரிய தவத்தோன் எனப் போற்றப் படுபவன் (புறம் : வாழ்த்துப்பா - செய் 56). மேலும் சிவனுக்குரிய கோவில்கள்பற்றிப் புறநானூறு குறிப்பிடுகையில் ''கடவுள்



ஆலத்து" (புறம் 199) என்றும், "ஆலமர் கடவுளன்ன" (புறம் 198) என்றும், ''கள்ளி நீழற் கடவுள்'' (புறம் 260) என்றும் குறிப்பிடுகின்றது. திருமுருகாற்றுப்படை "ஆல்கெழுகடவுள்" (256) என்றும், சிலப்பதிகாரம் "நுதல்விழி நாட்டத்து இமையோன் கோயில் (14:7-10) என்றும், பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலும் (சிலம்பு: 5:169-172) என்றும், மணிமேகலை "நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலா" (1:54) என்றும் குறிப்பிடுகின்றன[3]. சிவன் நெற்றிக் கண்ணன் என்பதனைப் புறநானூறு,

**கறைமிடற் றண்ணல் காமர்சென்னிப்**
**பிறைநுதல் விளங்கும் ஒருகண்போல** (55)

எனக்குறிப்பிடும். இவ்வாறு இந்துவெளி ஹாரப்பா மக்கள் பேணிய சிவவழிபாட்டின் பரவுகையைத் தென்னோக்கி ஆராயும் பொழுது, அதன் ஆதிக்கம் தமிழகத்திலேயே மேலோங்கியிருந்தது என்பதனைத் தொல்லியல், வரலாற்றியற் குறிப்புகள் மட்டுமன்றி, இன்றும் இந்தியாவின் வேறெந்தப்பாகத்திலுமில்லாதவகையிற் தமிழகத்திற் பல்கிப்பெருகிக் காணப்படும் சிவலிங்க வழிபாட்டினையுடைய தலங்களே சான்றுகளாக உள்ளன. இதனாலன்றோ மணிவாசகரும் "தென்னாடுடைய சிவனே போற்றி" என்றும் ''தென்பாண்டி நாட்டைச் சிவலோகமாக்குவித்த'' என்றும் உரைக்கலாயினர். அதனாலே சைவநெறியுடன் தொடர்பான மெய்கண்ட ஆய்வுகளுக்கெல்லாம் தமிழகமே சிறந்தகளமாக அமையலாயிற்று. இவற்றுட் தமிழ்நாட்டிலே வேர்விட்டுத் தழைத்த சைவ சித்தாந்தம் தனியியல்புடைத்தாம். இதன் வரலாற்றை ஆராய்கையில் வடநாட்டுத் தத்துவவழிநின்றதன்று என்பது தெளிவாம்.

சில ஆய்வாளர் தொல்காப்பியத்தை கி.மு. 4ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட நூல் என ஊகிப்பர். வேறு சிலர் இக்கருத்தினை ஆதாரமற்றதாகக் கருதுவர். எனினும் தொல்காப்பியம், பிற சங்க இலக்கியங்களைக் காட்டிலும் காலத்தால் சிறிது முற்பட்டதாகலாம் எனிற் தவறாகாது. ஏனெனிற் சிவவழிபாட்டின் வளர்ச்சியைப் பிற சங்க இலக்கியங்கள் விபரித்துக் குறிப்பிட்டதுபோற், தொல்காப்பியம் குறிப்பிடுவதாக இல்லை. ஆனால் சிவவழிபாட்டின் இயல்புகளையும், தன்மைகளையும் உயர்ந்த கருத்தடிப்படைகளினடிப்படையிலே உணர்த்தி நிற்கின்றது எனலாம். தொல்காப்பியர் ஐவகை நிலங்களுக்குரிய தெய்வங்களாக மாயோன், சேயோன், வேந்தன், வருணன், கொற்றவை (பொருள் 5) எனும் தெய்வங்களை, மக்களின் அன்றாட வாழ்க்கை முறைகளுடன் தொடர்பு படுத்திக்காட்டிய விடத்தும், பின்

**வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**
**முனைவன் கண்டது முதல் நூல் ஆகும் (தொல் 649)**

எனுமிடத்துச் சைவசித்தாந்திகளின் இறையின் தன்மைகளையே குறிப்பிட்டு, அவர் உயிர்கள் உய்திபெற அருளிய நூல்களே முதனூல் என்றனர். மேலும், தொல்காப்பியம், கடவுள், கந்தழி என்ற பதங்கள் மூலம் "எல்லாவற்றையும் கடந்தவன்" (பொருள் 81, 85) "சுட்டிறந்தவன்" என்ற பொருளிலே இறைவனைக் குறித்தனராயினர். அதாவது சுட்டிறந்து, எல்லாவற்றையும் கடந்து நிற்கும் இறைவன் தோற்றக் கேடில்லாதவன் என்பதனை இச்சொற்கள் குறித்து நின்றதாம். மேலும், தொல்காப்பியர்



**நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த**
**மறைமொழி தானே மந்திரம் என்ப (தொல் செய் 188)**

என்பதனால், இறை உரைத்த மொழியை, அவனுடனாய் நின்றுணர்ந்து வழிமொழிவதே மறைமொழியென்றும், வடமொழியில் மந்திரம்போலத் தமிழில் மறைமொழிகள் இருந்தன என்பதனையும் உணர்த்தினர். இதனையே திருவள்ளுவரும்,

**நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும் (குறள் - 28)**

என்றனர்.

இனிப், பொதுமறை எனச் சிறப்புப்பெயர் கொண்ட திருக்குறளே தமிழிற் பண்டைய நான்மறைகளின் நெறிகளை உலகோர்க்கு உணர்த்தியதாகும். அறம், பொருள் இன்பம், வீடு எனும் நாற்பொருள்களை உணர்த்துவதே இதன் பொதுவியல் பாயினும், இதன் உட்கிடக்கை சைவ சித்தாந்தநெறியாம். இதனை

**அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே யுலகு (குறள் - 1)**

எனத் தொடங்கி,

**கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை (குறள் 9)**
**பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா**
**ரிறைவ னடிசேரா தார். (குறள் 10)**

என முடிகின்ற கடவுள் வாழ்த்துப் பகுதியினை ஆராய்வார். எவ்வளவுதூரம் பிற்காலத் தேவாராசிரியரும், பிறரும் தமது சைவசித்தாந்தக் கருத்துக்களைத் தெளிவுறுத்த, திருக்குறளை முதனூலாகக் கொண்டனர் என்பதனை உணர முடியும். (இதனைச் ச.தண்டபாணி தேசிகர் உரையிற் கண்டு தெளிக.)

திருக்குறளின் அறக்கருத்துக்களை ஆராய்ந்த ஆ.ச.ஆனந்தநாதன் "அறம் என்பது இறைவனின் உயரிய பண்பு. அறமென்பதுவே இறைவனின் உருவம். அறத்தினது இயக்கமே இறைவனது இயக்கம். அறத்தின் வடிவோடுகூடிய அழகிய தன்மையே இறைவனின் அந்தண்மையாகும்.. இறைவனின் இயக்கமாக இயங்குவது அறம்" என இறைவனுக்கு அறக்கோட்பாட்டு நெறியில் ஒரு வடிவத்தைக் கற்பிப்பதை நாம் அவதானிக்கலாம். இந்தக் கோட்பாட்டை மையமாகக் கொண்டதே சைவசித்தாந்த இறையின் கோட்பாடாகும். எனவே சைவசித்தாந்த இறையியல் தத்துவத்தினையும், உயிர்த் தத்துவத்தினையும் விளக்கும் பகுதியே கடவுள் வாழ்த்துப் பகுதியாம்.

மேலும் கடைச்சங்க காலத்திற்குப் பின் தோன்றிய பௌத்த காவியமாகிய மணிமேகலையிற் சமயக்கணக்கர் தந்திறங்கேட்ட காதையிற் சைவத்திறனுட்படப் பத்து வகைச் சமயங்களின் கோட்பாடுகள் தமிழகத்திற் பேணப்பட்டிருந்தன எனத் தெரிகின்றது, எனினும் மணிமேகலை காலத்திற்கு முன்னரே ஆகமநெறிச் சிவவழிபாட்டு முறைகள் தமிழ்நாட்டிற் பேணப் பட்டிருந்தன என்பதனைப் பரிபாடல்



..................................ஆதிரை
விரிநூ லந்தணர் விழவு தொடங்கப்
புரிநூ லந்தணர் பொலங்கல மேற்ப (பரிபாடல்)

எனக்கூறும். இந்நூலுக்கு உரை எழுதிய பரிமேலழகர், ஆகமங்களையுணர்ந்த பூசகர் அத்திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறைவனுக்கு விழாவைத் தொடங்க எனக் கூறுவர். எனவே பரிபாடற் காலத்தே சிவனுக்கு ஆகம முறைப்படி நித்திய பூசைகளும், விசேட விழாக்களும் நடை பெற்றுவந்தன என்பது தெளிவாம்.

மேலும், தமிழகத்திற் சைவத்திறனை உணர்த்தியவன், இறைவனே என மணிமேகலை எடுத்துரைக்கும். தென்னாட்டுச் சைவத்திற்கு மூலநூலாக அமைந்த ஆகமங்களை இறைவனே உரைத்தனன் என்பதனை மணிமேகலை,

அகம அளவை அறிவன் நூலால்
போக புவனம் உண்டு (மணி 27:43-44)

என்றுரைக்கும். மேலும் சைவசித்தாந்த தத்துவங்களை எமக்குத் தொகுத்தளிக்கும் முதல் நூலும் மணிமேகலையே எனில் மிகையாகாது.

இரு சுடரோடு இயமானன், ஐம்பூதம் என்று
எட்டுவகையும், உயிரும் யாக்கையு மாய்க்
கட்டிநிற்போனும், கலை உருவினோனும்
படைத்து விளையாடும் பண்பினோனும்
துடைத்துத் துயர்தீர் தோற்றத்தோனும்
தன்னில்வேறு - தான் ஒன்று இலோனும்
அன்னோன் - இறைவன் ஆகும் (மணி : 27:86-95)

எனவே சைவசித்தாந்தம் கூறுகின்ற மெய்ப்பொருள்கள் யாவற்றையும், தமிழ்மக்கள் அறிவன் நூலாகிய ஆகமத்திலிருந்து, தொல்காப்பியர் காலம் முதலாகவே உணர்ந்து வந்தனர் என்பதும், மணிமேகலை ஆசிரியர் தேரவாதப் பௌத்தமத தத்துவங்களைத் தமிழ்மக்களுக்குப் போதிக்க முற்பட்ட காலத்திற், சைவாகமவாதிகள் தம் ஆகம தத்துவங்களைப் பௌத்தமத வாதிகளுக்கு விளக்கித் தம் கோட்பாடுகளை நிலைநிறுத்தி யிருந்தனர் என்பதும் தெளிவாம். மணிமேகலையின் காலத்தை ஆராய்ந்த அறிஞர்கள் இந்நூல் கி.பி. 2க்கும் - கி.பி. 5க்கும் இடைப்பட்ட காலத்தில் எழுந்திருக்கலாம் என்பதற்கான சான்றுகளை முன்வைப்பர். எனினும் கடைச் சங்க இலக்கியங்களின் காலத்துடன் தொடர்பான தொல்லியற் சான்றுகளைக் கருத்திற் கொண்டும், சேரன் செங்குட்டுவன் காலத்து இலங்கையையாண்ட கஜபாகு I (கி.பி.174 - 196) மன்னனைப்பற்றிச் சிலப்பதிகாரம் குறிப்பிடுவதைக் கொண்டும், மணிமேகலை கி.பி.3ம் நூற்றாண்டின் முற்பகுதியில் எழுந்த நூல் எனிற் தவறாகாது.

மற்று,

ஆரம்பத்தில் இந்துவெளி - ஹாரப்ப மக்களின் இலிங்க வழிபாட்டை, "இலிங்க வழிபாட்டையுடையோர் எமது வேள்வியை வெல்லமுடியாதவர்களாகட்டும்"

(இ.வேதம் VII 21-5)



நூறு வாயில்களையுடையவரும், இலிங்க வழிபாட்டை யுடையவருமான சுதேச மக்களை இந்திரன் கொன்று, அவர்களின் பொருள்களையும் சூறையாடினான்

(இ.வேதம் X 99-3)

என்று எள்ளிநகையாடிய இருக்கு வேத ஆரியர்கள், காலப் போக்கில் இப்பகுதிகளிற் குடியமர்ந்தபொழுது, சுதேச வழிபாடுகளைத் தேவ பயபக்தியினால் ஏற்றுக்கொண்டனர் என்பதனை, இருக்கு வேதத்தில் இடம்பெற்ற மூன்று சூக்தங்களி லிருந்து (துதிப்பாடல்கள்) நாம் உணரக்கூடியதாக விருக்கின்றது. இப்பாடல்களில் (இருவேதம் I-85; II - 35) உருத்திரனை உலகத்தின் தந்தையெனவும், எல்லாமறிபவனெனவும், சடைமுடியை யுடையவனெனவும், வைத்தீசுவரன் எனவும், பிரகாசமான சூரியனைப்போல் பிரகாசிப்பவன் எனவும், இடியேறாகிய ஆயுதத்தைத் தாங்கிக்கொண்டு மின்னலாகிய அம்புகளை யெய்பவன் எனவும் வருணிக்கப்பட்டுள்ளான். மேலும் ஓ! உருத்திர! ஓ! எருதுவே மற்றத் தெய்வங்களுடன் இணைத்து உன்னை நாம் துதிப்பதனாற் கோபமடையாதே. உன்னை வைத்தியர்களுக்கெல்லாம் வைத்தியன் என்று கேள்விப் படுகின்றேன், எங்கள் வீரர்களை உன் மருந்துகளினாற் காப்பாற்றிவிடு (இ வேதம் II 33-4) எனவும் துதித்தனர். மேலும் உருத்திரன் கோபம் கொள்கையிற், தீங்கு விளைவிப்பவனாயினும், தன்னை வழிபடுவோருக்கு அருள்புரிபவன் என்றும், அதனாற் 'சிவன்' எனவும் அழைக்கப்பட்டான்4. தென்னாட்டிற் சிவனின் கோபமூர்த்தமாக பைரவர் அல்லது வீரபத்திரர் வடிவம், இந்த

உருத்திர மூர்த்த மரபையொட்டி வளர்ந்ததாம். சுடலைகளில் இறந்தோரின் எலும்புகளையும், பிரம்மாவின் தலையோடொன்றினையும் கழுத்தணியாக அணிந்துகொண்டு, சுடலைப் பொடியைப் பூசிக்கொண்டு ஆடும் தாண்டவம் சிவவழிவாட்டின் தொடக்க நிலையை சுட்டுவதாம். ஹெரஸ் பாதிரியார் இந்துவெளி ஹாரப்ப முத்திரைகளை ஆராய்ந்தபின், அம்முத்திரைகளிற் கடவுள் (பக் 68) தாண்டவன் (பக் 69) கோவில் (பக் 73) வேலன் (பக் 93) முதலான மூலத் தமிழ்ச்சொற்கள் உள என்று கூறுவதையும் ஈண்டு நினைவுகூரத்தக்கது.[4A] இந்த இயல்பினைக்கொண்ட உருத்திர வழிபாட்டின் வளர்ச்சி நிலைகளையே மாணிக்க வாசகரும்;

**''நள்ளிருள் நட்டம் பயின்றாடும் நாதனே''**
**(சிவபுராணம் வரி - 39)**

**''கழுதொடு காட்டிடை நாடகம் ஆடிக் கதியிலியாய்**
**உழுவையின் றோல் உடுத்துன்மத்த மேற்**
**கொண்டுழி தருமே'' (திருச்சதகம் வரி 27 - 28)**
**''கோயில் சுடுகாடு, கொல்புலித் தோலல் ஆக''**
**(திருச்சாழல் 9)**
**''இரவு நின்றெரி ஆடிய எம்மிறை**
**எரிசடைமிளிர்கின்ற அரவன்'' (அதிசயப்பத்து 19 - 20)**

என்றெல்லாம் எமக்கறிவுறுத்துகின்றனர் எனலாம்.

இனி வடநாட்டு உருத்திர - சிவவழிபாட்டின் வளர்ச்சியை அவதானிக்கையில், யசுர்வேதத்திற் தெய்வங்களுக்குப் பல பெயர்களைக்கூறி, வழிபடும்முறை உருவாகிய பொழுது,



யசுர்வேதத்தின் சதருத்திரியம் எனும் பகுதியில் உருத்திரனுக்கு நூறு பெயர்கள் கூறப்பட்டுள்ளன. எனினும் சிவனின் முக்கண்கள் பற்றிய குறிப்புகள், இவற்றில் இடம் பெறவில்லை. (ஹெரஸ் பாதிரியார் ஆய்வுகளின்படி இந்துவெளி - ஹாரப்ப முத்திரைகளிலுள்ள 'மூன்கண்' என்ற பதம் முக்கண்களையுடைய சிவனைக் குறித்தது எனத் தெரிகின்றது) ஆனால் வைதிக மத வளர்ச்சியில் உருத்திர - சிவவழிபாடு உயரிய நிலையை எய்துகின்ற நிலைகளையே நாம் அவதானிக்கக் கூடியதாவிருக்கின்றது. பிற்கால வேத இலக்கியங்களிற் தைத்திரிய ஆரணியகம், அதர்வசிரஸ் உபநிடதம், சுவேதாசுவர உபநிடதம் முதலானவை சிவனையே பரமேசுவரர் என்றும், மேலான தெய்வம் என்றும் போற்றுகின்றன. வைதிகமத வளர்ச்சியில் இதிகாசங்களும், புராணங்களும் மேலும் திருப்பங்களை ஏற்படுத்தின. இவ்விலக்கியங்களிற் பயங்கரமான பண்புகளைக்கொண்ட வேதகால உருத்திரன், சாந்தகுணமுடைய சிவனாகக் கருதப்பட்டான். அதனால் இதிகாசங்களிற் (மகாபாரதம், இராமாயணம்) சிவவழிபாடும், சிவலிங்க பூசையும் சமய வழிபாடாக மிளிரலாயிற்று. சிவன் காமனை எரித்தது, முப்புரங்களை எரித்தது, அர்ச்சுனன் சிவனை நினைத்து கடும் தபமியற்றிப் பாசுபதாஸ்திரத்தைப்பெற்றது, பகீரதன் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவரத் தவமியற்றியது, சிவன் கங்கையைச் சடையில் வைத்து, அதன் வேகத்தைக் குறைத்தது, தேவாசுரர்கள் பாற்கடலைக் கடைந்தபோது ஆதிசேடனாற் கக்கப்பட்ட விடத்தைச் சிவனுண்டு அவர்களைக் காப்பாற்றியது, இராவணன் சிவலிங்கத்தைத் தான் போகுமிடமெல்லாம் கொண்டு திரிபவன்

என்றும் சிவனை வணங்கி வரங்களைப் பெற்றவன் என்பது, இராமர் இலிங்க வழிபாட்டையுடையவர் என்பதுபோன்ற வரலாறுகள் யாவும் சிவனை முழுமுதற் கடவுளாகக் காட்ட இடம்பெற்ற வரலாறுகளாகும். இவ்வாறு சைவ மதம் வளர்ச்சி பெறுகையிற், சைவமத தத்துவங்களும், ஆராய்ச்சிகளும் உருவெடுக்கலாயின. இவற்றின் வளர்ச்சி நிலையிற் பல பிரிவுகளாக வளரலாயின. அவையாவன, மாவிரதர், பாசுபதர், காபாலிகர், வாம மதத்தவர், ஐக்கியவாத சைவர் முதலான அகப்புறச் சமயத்தாரும், பாடாணவாத சைவர், பேதவாத சைவர், சிவசமவாத சைவர், சிவசங்கிராந்தவாத சைவர், ஈசுவர விகாரவாத சைவர், சிவாத்துவித சைவர் முதலான அகச் சமயத்தார் அறுவருமாம். இவற்றிற் சைவர், மாவிரதர், பாசுபதர், காலாமுகர், காபாலிகர் என்போர் தமிழகத்தில் ஒருங்கே காணப்பட்டவர் என அப்பர் குறிப்பிடுவர். எனினும் பாசுபத மத தத்துவத்தின் தோற்றம்பற்றியும், அதன் பரவுகை பற்றியும் குறிப்பிடுகையிற் பி.டி.ஸ்ரீநிவாச ஐயங்கார் சிவதந்திரங்களின் (ஆகமங்களின்) கோட்பாடுகள் தென்னாட்டிலேதான் முதன்முதலில் ஒரு ஒழுங்கான கோட்பாடுகளாகக் கிறித்து சகாப்தத்தின் தொடக்க நிலையில் நெறிப்படுத்தப்பட்டன என்றும், பின் இத்தத்துவமே குசராட்டிற் இலகுலீச பாசுபதமெனவும், பின் காஸ்மீரில் பிரத்தியபிஞ்ஞானதரிசனமாகவும் பரிணமிக்கலாயின என்பர்[5]. எனவே கி.பி.முதலாம் நூற்றாண்டிலேயே இது குஜராட், இராஜஸ்தான் பகுதிகளிற் பரவலாயிற்று எனத் தெரிகின்றது. ஆனாற் காஸ்மீரில் இதன் தொடக்க நிலையைப் பற்றியறியப் போதிய சான்றுகள் இல்லை. ஆனால் குசானர்களில் ஒருவனான கனிஷ்க மன்னன் கி.பி.78ல் காஸ்மீரைத் தன்னாட்சிக்



குட்படுத்தினான் என்பதனால் (இவன் பௌத்தத்தை ஆதரித்தவனாயினும் பிற குசான மன்னர்கள் சிவபக்தர்களாக இருந்தனர் என்பதனால்), குசானர் காலத்திலே சைவமதத் தத்துவங்கள் காஸ்மீரிலும் பரவியிருக்கலாமா என்பது ஆராயத்தக்கதாம். குசராட்டில் பாசுபதத்திற்கு மூலநூல் சிவாகமங்களின்றும் தோன்றிய பாசுபத சூத்திரமாகும். காஸ்மீரத்தின் பிரத்தியபிஞ்ஞான தத்துவத்திற்கு, கி.பி.எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த வசுகுப்தரே சிவ சூத்திரங்களைக் கண்டெடுத்து உரை எழுதியபின், இதற்கு மூல நூலாகச் சிவ சூத்திரங்கள் கருதப்படலாயின. இக்காலம் முதலாகவே இது பிரத்தியபிஞ்ஞான தரிசனம் என்னும் கோட்பாடாகப் பரவிப், பின் அபிநவகுப்தர் (கி.பி.10ம்) சேஷமராஜா (கி.பி.11ம்) என்போர் காலங்களிற் பெரும் தத்துவமாகத் திகழ்ந்ததொன்றாம். எனவே இச் சிவ சூத்திரங்களுக்கும் மூல நூல்கள் தென்னாட்டுச் சிவாகமங்களேயாம் என்பதிற் தவறில்லை.

## மாணிக்கவாசகர் :

இனி, மாணிக்கவாசகர் வரலாற்றை ஆராய்கையில், இவர் ஆமாத்தியப் பிராமணர் குலத்தவர் என்றும், சிறு வயதிலே பிராமணப் பிள்ளைகளுக்குரிய வேத மோதலை விரும்பாது, சைவாகமங்களைக் கற்க விரும்பினர் என்றும், பின் இவருடைய இயல்பான ஆற்றலைக் கேள்வியுற்ற வரகுண பாண்டியன் தனது அவை அமைச்சராக நியமித்த காலையில் இவர் அத்தொழிலில் நாட்டமற்றவராக ஆகமப் பொருளைத் தமக்கு உபதேசிக்கக்கூடிய குருவைத் தேடியிருந்தனர் என்றும் தெரிகின்றது. இவ்வாறு

அமைச்சராக இருந்த காலை, இவர் மன்னனுக்குவேண்டிய குதிரைகளை வாங்கத் திருப்பெருந்துறைக்கு ஏவலாட்களுடன் சென்றுகொண்டிருக்கையிற், திருப்பெருந்துறை எல்லையிலே இறையடியார்கள் ஆகமங்கக்ளை ஓதும் ஒலி இவருக்குக் கேட்க நேரிட்டது. அப்பொழுது மாணிக்கவாசகர் ஒரு தூதுவரை அந்த ஒலி என்ன? என்று அறிந்து வரும்படியனுப்பினார், அத் தூதுவர் மூலம் ஞானகுரு ஒருவர் குருந்த மர நிழலிற் தனது அடியார்களுக்கு உபதேசித்துக் கொண்டிருக்கிறார் என்பதனை அறிந்த இவர் குருவருள் வீழ்ச்சிபெற்ற உணர்வு பெற்றவராய், அக்குரு இருந்த இடத்திற்கு நோக்கி விரைந்தனர். அப்பொழுது சிவஞான போதத்தைக் கையில் வைத்திருந்த அந்த ஞானகுரு சீடர்கள் 999 பேருக்கு சைவ சித்தாந்த நெறியினை உபதேசித்துக் கொண்டிருந்தனர். மாணிக்கவாசகரும் அக்குருவை நெருங்கிச் சிவம் என்றால் என்ன? ஞானம் என்றால் என்ன? போதம் என்றால் என்ன? என்று வினாவினர். குருவும் அவற்றை விளக்கியருளினர். அதனைக் கேட்ட மாத்திரத்தே திருவருள் வீழ்ச்சிபெற்றவராக, அவ்வடியார் கூட்டத்துடன் சேர்ந்துகொண்டு, தன்னைப் பாசமாகிய தளையினின்று விடுவிடுத்து ஏற்றுக்கொள்ளும்படி, அவரது பாதங்களில் வீழ்ந்து மன்றாடினர். ஞானகுரு வடிவிற் தோன்றிய இறைவன், தான் பூமிக்கு எழுந்தருளியது அவரைக் குறிக்கொண்டு ஞானதீக்கை தெய்வதற்காகவே என்பதனைக் கூறியருளி, மற்றைய அடியார்கள் தீக்குண்டம் தோன்றும்வரை தியானத்திலிருந்து, பின் தீக்குண்டத்துத் தீப்பிழப்பிற் கலந்து கொள்ளவேண்டுமென்றும் உணர்த்தினர். அவ்வாறு அடியார் கூட்டம் தீக்குண்டத்தில் மறைந்தருளியபின், மாணிக்கவாசகர் சைவ சித்தாந்தத்தைத் தமிழகம் முழுவதும் பரப்ப வேண்டும்



என்றும் ஞானகுரு அவரிடம் கேட்டுக்கொண்டனர். இறைவன் மாணிக்கவாசகரைப் பிரிகின்ற நாள் வந்ததும், குருந்த மர நிழலிற் தங்கியிருந்த அவரையணுகித் தாமும் இறைவனுடைய விண்ணுலகப்பதமாகிய கைலையில் இறையடியார்களுடன் கலந்திருக்க விரும்புவதாக விண்ணப்பித்தனர். அப்பொழுது இறைவன் தான் எங்கும் வியாபித்திருப்பவன் என்பதனை உணர்த்தித், தாம் அவருக்கு உத்தரகோச மங்கையில் அட்டசித்திகளைப் போதிக்க விரும்புவதாகவும், அதன்பின்னர் அவர் கோவில் கோவிலாகத் தரிசித்துத் தன்னை வழிபட்டுச், சிதம்பரத்திற் புத்தரை வாதில் வெல்லவேண்டும் என்றும், அது முடிந்தபின்னரே அவர் விருப்பம் பூர்த்தியாகும் என்றும் கூறி மறைந்தருளினர். இறைவன் மறைந்தருளியபின் அக் குருந்த மரநிழலில் இலிங்கத்தைச் சமைத்து அடியார் கூட்டத்துடன் வழிபட்டுவரும் நாளிலே மாணிக்கவாசகர் கவிதாசக்தி கைவரப் பெற்றவராக, இறைவனை நினைந்துருகிப் பரவிவரலாயினர்[6]. அவ்வாறு அவர் பரவிப் பாடியுருகிய துதிப்பாக்கள் 51 வகையாம். அவற்றில் 21 வகைப் பாடல்களிற் திருப்பெருந்துறையில் அவருக்கு ஞானோபதேசம் செய்த இறைவனின் பெருமையை நினைந்தும், உருகியும், புகழ்ந்தும் பாடிய பாக்களாம். இவ்வாறு இவர் கசிந்துருகிய பாக்களிற் சில சிவாகம வரலாற்றை எடுத்தியம்புவனாம்.

> மன்னுமாமலை மகேந்திர மதனிற்
> சொன்னவாகமந் தோற்று வித்தருளியும்
> (கீர்த்தித் திருவகல் வரி 9-10)

என்றும்,

கேவேடராகிக் கெளிறது படுத்து
மாவேட்டாகிய வாகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்
துற்ற வைம்முகங்களாற் பணித்தருளியும்
(கீர்த்தித் திருவகவல் வரி 17-20)

என்றும், ஆகமங்களை இறைவனே மகேந்திர மலையிலிருந்து சொல்லியருளினன் என்பதனையும், இறைவனே ஆகமவடிவில் நின்று உயிர்களுக்கு அருளுவன் என்பதனையும்.

''ஆகமமாகி நின் றண்ணிப்பான் றாள் வாழ்க''
(சிவபுராணம் வரி 4)

என்றும் எமக்கும் கூறியருளினர். மேலும் இறைவனின் திருவிளையாடல்களில் ஒன்றான வலைவீசிய பரதவராக இருந்து ஆகமங்களைத் திரும்பவும் தோற்றுவித்ததனால் ஒருழியிற் றோன்றிய ஆகமங்கள் வழக்கிறந்து போகையிற் புதியன தோற்றுவித்தருளுவன் என்பதும், எமக்கு அறிவுறுத்தப் பட்டதாம். (செல்லரித்துப்போன தேவாரங்களும் இம்முறையாலே வழக்கற்றனவாயின என்பதனையும் இங்கு நினைவுகூரல் உகந்ததாம்.) மேலும் "மந்திரமாலை மகேந்திர வெற்பன்" (கீர்தித்திருவகவல் 100) என்றும், "தூவெள்ளை நீறணியும் எம்பெருமான் சோதி மகேந்திர நாதன், தென்னன், பெருந்துறையன்" (திருவார்த்தை 33-34) என்றும், "வேடுருவாகி மகேந்திரத்து மிகு குறைவானவர் வந்து தன்னைத் தேடவிருந்த சிவபெருமான்" (திருவார்த்தை வரி 13-14) என்றும், மகநேந்திர மலையை இவர் பின் விதந்தோதியமையும், சிவாகமங்களை இறைவன் தோற்றுவித்தருளிய இடம் என்பதனாலேயாம் என்பது



தெளிவாம். சிவதருமோத்திரம் மகேந்திர மலையைப் பொதிய மலைக்குத் தெற்கேயமைந்ததெனக் குறிப்பிடும் (மகேந்திரம் என்பது கிழக்குத் தொடர் மலைகளுக்குப் பொதுப் பெயராகவும் இருந்தது.) இம் மகேந்திரம் புராணங்களிற் கூறப்பட்ட வெற்பேழனுள் ஒன்றாம். கலிங்கத்திற் கஞ்சம் மாகாணத்திலுள்ள ஒரு மலைப்பகுதியும் மகேந்திரம் என அழைக்கப்படும். சீதையைத் தேடிய அனுமான் தாமிரபர்ணியாறு, கபாடபுரம் என்பவற்றைக் கடந்து மகேந்திர மலையின் தென்பகுதிக் கடலைக் கடந்து இலங்கையை அடையவேண்டுமென்று இராமாயணம் குறிப்பிடுகின்றது. இந்த மலைத் தொடர் தமிழகத்திலேற்பட்ட மூன்றாவது கடல்கோளிற் (கி.பி.2ம் நூற்றாண்டு) கடலுட் தாண்டியிருக்கலாம் என நம்பப்படுகின்றது. எனவே பிற்காலத்திற் கச்சியப்ப சிவாசாரியாரருளிச் செய்த கந்தபுராணத்தில் வீரவாகு மகேந்திரஞ் செல்லும் படலத்தில், இலங்கை மாபுரத்தை நீத்தெழுந்து பின்னுமாயிரம் யோசனை வானிடைப் பெயர்ந்து மகேந்திர வரைப்பின் முன்னுற்றான் என்று கூறுவது அதன் இருப்பிடத்தின் எல்லையை இன்னும் தெற்கே காட்டுவதாகத் தெரிகின்றது.

மற்றும் சத்நிபாதருக்குரிய ஆகமங்களை மட்டுமன்றி, உலகர்க்குரிய பொது நூலாகிய மறைகள்பற்றி மாணிக்க வாசகர் குறிப்பிடுகையில்

நன்றாக நால்வர்க்கு நான்மறையின் உட்பொருளை
அன்றாலின் கீழிருந்தப் (திருச்சாழல் வரி 64)

என்றும்,

அருந்தவருக் காலின் கீழ் அறமுதலா நான்கினையும்
இருந்தவருக் கருளும் அது எனக்கருளிய
(திருச்சாழல் 80)

என்றும் கூறியருளினார். மேலும் இவர் இளவயதிலே உலகர்க்குரிய வடமொழி வேதக் கல்வியை விரும்பினாரல்லர் என்பதற்குரிய காரணங்களையும், அவரது பாடல்களிலே நாம் காணலாம்.

மூவருமுப்பத்துமூவரு மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான்
(திருவெண்பா 33 - 34)

என்றும்,

இந்திரனும் மால்அயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவன் அவனி வந்தருளி
எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்
(திருஅம்மானை, 13-14)

என்றும் கூறுவதிலிருந்து, இருக்குமுதலான வேதங்களின் முப்பத்தி மூன்று தேவர் வழிபாட்டு முறை இவருக்குத் திருப்தியளிக்க வில்லையென்பது புலனாகின்றது. மற்று, மெய்ஞ்ஞானத்தை அவாவிநின்ற இவருக்கு, வடமொழிப் பொதுமறைகளின் தத்துவங்களும் கவருவனவாக இருக்கவில்லை என்பதனை

விரதமே பரம் ஆகவே தியருஞ்
............................................



............................................
மிண்டிய மாயாவாதம் என்னுஞ்
சண்டமாருதஞ் சுழித்தடித்தனர்
(போற்றித்திருவகவல் 51-55)

என்று கூறுவதிலிருந்தும் தெளிவாம்.

இவர் வேதங்களில் ஈடுபாடில்லாதவராக இருந்தபொழுதும், தில்லையில் வேதியர் இறைவனை வேதமோதி வழிபட்டு இருந்தனர் என்பதனை

வேதங்க டொழுதேத்தும் விளங்கு தில்லை கண்டேனே
(கண்டபத்து 40)

என்றும்,

வேதநான்கும் ஓலமிட்டுணங்கு நின்னை
(திருச்சதகம் வரி 297)

என்றும் உரைத்தருளினர். மற்று இறைவன் திருவிளையாடல் களுக்கு பல்வேறு வடிவங்களை எடுப்போனாயினும், தில்லையில் வேதியர் வடிவிற் தமக்குத் தோன்றியருளினர் என்பதனாற் சிவனின் வேதியர் வடிவையே வருணித்துக் கசிந்துருகினர் என்பதும் நாம் உணரத்தக்கதாம்.

''நந்தம்பாடியி னான்மறையோனாய்
அந்தமிலாரியனாய மர்ந்தருளியும்
வேறு வேற உருவும் வேறு வேற இயற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி

**ஏறுடை ஈசன் இப்புவனியை உய்யக்**
**கூறுடை மங்கையுந் தானும் வந்தருளி''**
**(கீர்த்தித் திருவகவல் வரி 21-27)**

என்பது மேற்கண்ட கருத்தைத் தரும் அடிகளாம்.

இங்கு நந்தம்பாடி என்பதனாற் தில்லை என்று உணர்த்தப் பட்டதாம்.

மாணிக்கவாசகருடைய காலத்தை ஆய்ந்தவர்களான மறைமலையடிகள், கா.சுப்பிரமணியபிள்ளை முதலானோர், இவர் கி.பி.3ம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்பதற்காகிய ஆதாரங்களை எடுத்துக்காட்டியுள்ளனர்[7]. மணிமேகலை (27:வரி 96-97) "பேர் உலகு எல்லாம் பிரமவாதி ஓர் தேவன் இட்ட முட்டை என்றனன்" என்று மாயாவாதத்தைக் கண்டிப்பதனால், மாயாவாதம் சாயனருடைய காலத்திற்கு முற்பட்டதாம் என்பது தெளிவாம். மேலும் மணிமேகலை ஆகம நூலைச் சிவனுடைய தொடர்பு படுத்தி அறிவனூல் என்பதோடு, சைவவாதியை, பிரமவாதி, வேதவாதி எனும் வடமொழித் தத்துவ ஆசிரியர்களினின்றும் வேறுபட்டவர்கள் என்பதனையும் எடுத்துரைக்கின்றது (27:வரி 84-105) வடமொழி வேதங்களை "வடமொழியாட்டி மறை முறை எய்தி" என்றும், வேதங்களை ஓதும் பிராமணக் குருமாரை "நான்மறை மாக்கள்" "மாமறை மாக்கள்" என்றும், வேதங்கள் விதித்த வேள்விகளை, "புலை சூழ் வேள்வி" என்றும் ஆபுத்திரன் திறம் அறிவித்த காதையில் விபரிக்கின்றது. எனவே மாணிக்கவாசகர் குறிப்பிடும் "மிண்டியமாயாவாதம்" என்பதனைச் சாயனருடைய கோட்பாடாகக் கொண்டு மாணிக்கவாசகர் கி.பி.9ம்



நூற்றாண்டைச் சார்ந்தவர் என்போர் கூற்று ஆதாரமற்றதாம் என்பது தெளிவாம். மற்று இவர் பிறப்பால் வீரசைவர் என்று சிலர் கருதுவர். சங்க நூலாகிய திரிகடுகத்தில் வீரசைவர்கள் இலிங்கிகள் எனப்பட்டனர். வேறு சிலர் அடிகள் மூதாதையர் தெலுங்கு நாட்டினின்றும், தமிழகத்திற்கு வந்தனர் என்பர். இவர் வரலாற்றைக் கூறுகின்ற புராணங்கள் இவரை ஆமாத்தியகுலப் பிராமணர் என்று உரைப்பினும், இவர் தன்னை எவ்விடத்திலாவது வேதியன் என்று கூறினாரல்லர். சண்டேசுவரநாயனாரைப்பற்றி குறிப்பிடுகின்றபொழுது

**தீதில்லை மாமணி சிவகருமஞ் சிதைத்தானைச்**
**சாதியும் வேதியன் றாதைதனைத் (திருத்தோணாக்கம் 28)**

குறிப்பிடுகின்ற இவர், தம்மைப்பற்றி குறிப்பிடுகையிற்

**சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்**
**ஆதமிலி நாயேனை அல்லலுறத் தாண்டனை**
**(கண்டபத்து 20)**

**நாயிலாகிய குலத்தினுங் கடைப்படும்**
**என்னைநன் னெறி காட்டி (திருச்சதகம் வரி 154)**
**சாதிவிடாத குணங்க ணம்மோடு சலித்திடும், ஆகாதே**
**(திருப்படையாட்சி வரி 54)**

என்றும் குறிப்பிடுகின்றார். எனவே இவர் தெலுங்கு நாட்டினர் என்பதனாலோ என்னவோ சேரமான் பெருமான் மாணிக்க வாசகரை 63 நாயன்மாருட் குறிப்பிட வில்லை என்பது நாம் சிந்திக்கத்தக்கது. மேலும் இறை அருள் வீழ்ச்சியேற்பட்டபின்னர், இவர் சிவாகம நெறி நின்று இறைவனைச் சிக்கெனப்பிடிக்கும்

சிந்தையிலே இடையறாது முயன்றவராகையால், வடமொழி வேதங்களிலும், தத்துவங்களிலும் சிந்தையைச் செலுத்தமுடியாத நிலையிலும் இருந்தார். இவையெல்லாவற்றையும் புரிந்து கொள்ளாத நிலையிலேயே பிற்காலச் சிவனடியார்கள் இருந்தார்கள் என்பதும் நாம் உணர்ந்துகொள்ளத்தக்கதாம்.

எனவே இறைவன் மகேந்திரமலையிற் தோன்றியருளிய சிவாகமங்களின் உட்பொருளைத் தமிழகத்தில் முதன் முதலில் எடுத்துரைத்தவர் மணிவாசகரே எனிற் தவறாகாது. மணிமேகலை குறிப்பிடுகின்ற சமயத்திறன் அறிகின்ற காலத்தில், ஏறக்குறைய கி.பி.3ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்திருக்கலாம் என்பதற்கு, மாணிக்கவாசகர் தில்லை மூதூரிற் புத்தரை வாதில் வென்ற வரலாறுகள் உறுதி செய்வனவாம். சிவாகமங்களின் நுண்பொருள்களை இறைவனே இவருக்கு உணர்த்தியதனால், சைவசித்தாந்தக் கோட்பாடுகளையே புத்தமதவாதிகளுக்கு எடுத்துரைத்து வாதில் வென்றனர் என்பதும் உறுதியாம். புத்தமதவாதிகள் வினவிய வினாக்களுக்கு இவர் விளக்கம் கொடுக்கையில், உலகத்தார்க்குத் தவம்கற்பிக்கும் பொருட்டே இறைவன் கையிற் செபமாலையை வைத்திருக்கின்றனன் என்றும், இறவைன் நீற்றினை அணிந்திருப்பது ஒடுக்கத்தில் எல்லா வற்றையும் ஒடுக்கவல்லவர் என்பதனையும், மாதொருபாகராய் இருப்பது உயிர்களைப் போகங்களில் ஈடுபடுத்தி, அவற்றில் இறுதியில் உவர்ப்பேற்படுத்தும் பொருட்டு என்றும், உயிர்களுக்கு முத்திகொடுத்தற்பொருட்டே யோகநிட்டையில் எழுந்தருளுவர் என்றும், ஐந்தொழில்களால் (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்) உயிர்களுக்கு உயிராய் நின்று



இயங்குபவனான இறைவனை உயிர்கள் அறியும் வண்ணமே பொன்னம்பலத்திற் (தில்லையில்) திருநடனம் புரிகின்றார் என்றும், சைவசித்தாந்த இறைநெறிகளைப் புத்தமதவாதிகளுக்கு எடுத்துரைத்தனர்[8]. மேலும் சிவபுராணத்திற் கடவுள் வாழ்த்துடன் ஆரம்பித்து, இறைவனின் பெருமை, உயிர்களின் சிறுமை, இறைவனின் திருவருள், ஐந்தொழில்கள், குணவியல்புகள், மற்றும் உயிர்கள் பாசமாகிய இருள்வயப்பட்டு உழலும் நிலைகள், பின் பக்குவமடைந்த உயிர்களை இறைவன் தடுத்தாட்கொண்டு பிறவியறுத்துச் சிவபுரத்திற் கலந்தருளுவன் எனும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை மிக எளிதாக உலகோர்க்கெடுத் துரைத்து, தம்மைப்போற் பிறரும் உய்யவேண்டுமென்று அவாவினர் எனிற் தவறாகாது. பிரபஞ்சவிரிவில் முப்பத்துதாறு தத்துவங்கள் விரிந்து, பின் ஒடுக்கத்திற் தோன்றிய முறையே ஒடுங்குவதைப் பிற்கால மெய்கண்ட சாத்திரங்கள் விரித்துரைத்தது போல் இவர் விபரிக்கா விடினும், திருவண்டப் பகுதியிற் பிரபஞ்சப் பகுதிகள் யாவையும் உள்ளடக்கிய பகுதியினை அண்டமெனவும், அவற்றின் நுண்ணிய பிரிவுகளைக் கதிரணுவெனவும் பொதுப்படக் குறிப்பிடுவர். மேலும் இப்பிரபஞ்சத்தின் அண்டப் பகுதியின் விரிவு எல்லையில்லா வகையின் நூற்றொருகோடியின் மேற்படவிரிந்தன என்றும், இந்த அண்டமெலாம் வியாபித்து நிற்பவனாகிய இறைவனே, வீட்டினுள் நுழையும் சூரியக் கதிரின் அணுக் கூட்டங்களிலும் வியாபித்திருப்பன் என்பதனால், இறைவன் பிரபஞ்சத்துடன் நீக்கமற நிற்பவன் என்றும், இறைவனின் வியாபகத்தன்மையை பஞ்சபூதங்களின் நியதிதவறாத இயக்கத்திற் கெல்லாம் அவனே காரணனன் என்பதனை

..............நாடொறும்
அருக்கனிற் சோதி அமைத்தோன் திருத்தகு
மதியிற் றண்மை வைத்தோன் திண்டிறற்
றீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலினூக்கங் கண்டோன் நிழறிகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணிற் றிண்மை வைத்தோன்

(திருவண்டப்பகுதி 19-26)

என எடுத்தருளிப்பின் இப்பிரபஞ்சத்தினுள்ளே உயிர்களுக்குத் தனு, கரணங்களையும் வைத்தனன் என்பதனை

............என்றென்
றெனைப்பல கோடி எனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயின் அடைந்தோன்

(திருவண்டப்பகுதி 26-28)

என்றும் கூறியருளுவர்.

மேலும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களைச் செய்கின்ற இறைவனே மறைத்தலையும், அருளினையும் செய்கின்றான் என்பதனை

வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய்போல
இனையனான் என்றுன்னை அறிவித்தென்னை
ஆட்கொண்டெம் பிரான்

(திருச்சதகம் 85-86)

என்றும்,



தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு, பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்ட
இனி என்னே உய்யும் ஆறென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே! முதல் அந்தம் இல்லா மல்லற்
கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே!

(திருச்சதகம் 102 -108)

என்றும் தம் அனுபவவாயிலாக எடுத்துரைப்பதோடு, கீர்த்தித் திருவகவல் எனும் பகுதியில் இறைவன் உயிர்கள் உய்யக் கருதிச் செய்த திருவிளையாடல்கள் பலவற்றையும் எடுத்துக் கூறியருளுவர்.

## திருமந்திரமும், தமிழகத்துச் சிவாகம வரலாறுகளும் :

இனி, இறைவனால் அருளப்பட்ட முதனூல்கள் எவ்விடத்தில், யார், யாருக்கு முதலில் அருளப்பட்டன என்பது குறித்து வடமொழி மரபுகளும், தென்மொழி மரபுகளும் சிறிது முரண்படுவனவாகக் காணப்படுகின்றன. வடமொழி மரபுகளின்படி இறைவன் நந்திதேவருக்குச் சிவாகமங்களை அருளிய வரலாறு பின்வருமாறு :

இறைவன் தம் ஐந்து திருமுகங்களாற் சிவாகமங்களை வகுத்துப் பிரணவர் முதலிய பத்துப்பேருக்கும், மகாருத்திரர் முதலிய பதினெட்டுப் பேருக்கும் முதலில் அருளினார் என்றும், பின் இவையெல்லாவற்றையும் திரட்டி வித்தியேசுவரரில் முதல்வராகிய அநந்ததேவருக்கு அருளிச் செய்தனர் என்றும், பின் அநந்ததேவர் உருத்திரரில் முதல்வராகிய சீகண்டருக்கு அருளிச் செய்தார் என்றும், சீகண்டருத்திரரே நந்திபெருமானுக்கு அருளிச் செய்தார் என்றும், பின் நந்திபெருமான் சநற்குமரருக்கும், சநற்குமரர் சத்தியஞானதர்சினிக்கும், சத்தியஞானதர்சினி பரஞ்சோதி முனிவருக்கும் அருளினர் என்றும் கூறுவதே வடமொழி ஆகமங்களிற் பேணப்பட்டிருக்கும் முறைமையாம். மற்றும் இவற்றை இறைவன் திருக்கைலாயத்திற் கல்லாலின் கீழிருந்து உணர்த்தினன் என்பதே வடமொழி மரபாம். ஆனாற் தென்மொழி மரபுகளின்படி, முன்னர் ஆராயப்பட்ட மாணிக்கவாசகர் கூற்றுக்கள் இங்கு சிந்திக்கத்தக்கவையாம். மற்றுத், திருமூலர் கூறுகின்ற மரபுகளின்படி,

**நந்தி யருள் பெற்ற நாதரை நாடிடில்**
**நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி**
**மன்றுதொழுத பதஞ்சலி வியாக்கிரர்**
**என்று இவர் என்னோடு எண்மரும் ஆமே**

**(திருமந்திரம் 77)**



முதலிற் திருநந்திதேவரின் திருவருளுக்கு இலக்கானவர்கள் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமரர் எனும் நால்வரே. பின் சிவயோகமாமுனி, வியாக்கிரபாதர், பதஞ்சலி, சுந்தரநாதர் (திருமூலர்) என்போரே பிற்பட்ட நால்வர் எனத்தெரிகின்றது[9]. இவர்களுள் ஒருவரான திருமூலர் தென்னாட்டவரே. இவர் இவ்வாறு திருக்கைலாய பரம்பரையினருடன் தொடர்பு கொண்டிருந்தார் என மரபுகள் காட்டுகின்ற பொழுதிலும், திருமூலர், ஆதியில் வேதாகமங்கள் தென்னாட்டிற் பிறந்தனவாம் என்று மாணிக்கவாசகர் அருளியதை, இவரும் உறுதிப்படுத்துவர்.

**ஈறான கன்னி குமரியே காவிரி**
**வேறா நவதீர்த்த மிக்குள்ள வெற்பேழுள்** [10]
**பேறான வேதாகமே பிறத்தலான்**
**மாறாத தென்றிசை வையஞ் சுத்தமே (திருமந்திரம்)**
**சதாசிவந் தத்துவ முத்தமிழ் வேதம் (திருமந்திரம் 76)**
**''செந்தமி ழாதி தெளிந்து வழிபடு**
**நந்தியிதனை நவமுரைத் தானே" (திருமந்திரம்)**
**''விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்தி சூழ்ந்து**
**புரைந்த கல் லாலினிழல் புண்ணியன் சொன்ன**
**பரந்தன் யோராப்பழி மொழியாளர்" (திருமந்திரம்)**
**''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"**

**(திருமந்திரம் 81)**

**''சிந்தை செய்து செப்பலுற்றேன்" (திருமந்திரம் 73)**

என்று கூறுவதோடு திருமந்திரம் ஒன்பதாம் தந்திரத்திற் பொற்றில்லைக் கூத்தினை விபரிக்குமிடத்து 'ஆதியில் வேதாகமங்கள் தென்னாட்டிற்றான் பிறந்தனவாம்' என்பர்.

இதுபோன்ற குறிப்புகள் திருமந்திரத்தில் இடம் பெறுவதாற் செந்தமிழாதி தெளிந்து வழிபடு நந்திதேவர் மூலமாகத் திருமூலர் பெற்ற தமிழ் ஆகமநூல் திருமந்திரமாகும். எனவே இறைவனாற் தோற்றியருளிய பழைய ஆகமநூல்கள் வழக்கிறந்துவிடத், தமிழிற் புதிதாகத் தோன்றிய பொது ஆகமம் திருமந்திரமேயாம்.

பரமான்மாவைச் சீவான்மா என்றும், சீவான்மாவைப் பரமான்மா என்றும் வடமொழி வேதங்கள், உபநிடதங்கள், பிரம்மசூத்திரம் என்பன ஏகான்மவாதத்தைக் கூறுகின்றன எனக்கருதி, உரைவகுத்தோர் வேதப் பொருளின் உண்மைகளையறியாது மயங்கியிருந்த காலகட்டத்தில், இந்த ஏகத்துவ (ஒன்றான) நிலை பரமான்மா, சீவான்மா ஐக்கியத்தினாலே நேர்ந்ததென்பதனை ஆதி ஆகமங்களும், இவை வழிவந்த திருமந்திரமுமே தெளிவுபடுத்தின. முப்பொருளுண்மையை ஆராய்கையில் இறையுண்மையை

"நான்அறிந் தன்றே இருக்கின்ற ஈசனை
வான்அறிந் தார்அறி யாது மயங்கினர்
ஊன் அறிந்துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்
தான்அறி யான்பின்னை யார்அறி வாரே,
(திருமந்திரம் 1797)



பசு, பாசங்களின் உண்மையை" அநாதி பசுவியாத்தி

என்றும்,

யாரும் இவனை அநாதியில் வந்த மலம் ஐந்தால்
ஆட்டி (திருமந்திரம் 2151)

என்றும், விரிவாக எடுத்துரைத்த திருமந்திரத்திற்கும், காஸ்மீரில் எழுந்த பிரத்யபிஞ்ஞான தரிசனத்திற்குமிடையே சிலர் கருத்தொற்றுமைகள் இருப்பதாகக் கருதுவர். காஸ்மீரில் பிரத்யபிஞ்ஞானக் (Pratyabhigana School of Kashmir) கோட்பாட்டை வகுத்த அபிநவகுப்தர் கி.பி.10ம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என எ.எல்.பசாம் கருதுவர்[11]. திரிக எனும் (சிவதிருஷ்டி, சிவசூத்திரம் முதலான மூன்று பிரதான சாத்திர நூல்கள்) தத்துவ நூல்களை ஆதாரமாகக்கொண்டெழுந்த பிரத்யபிஞ்ஞானக் கோட்பாடு சைவசித்தாந்தத்தைப் போலல்லாது, சங்கரரின் ஏகான்ம வாதத்தைப்போல் ஒன்றுதான் உண்மைப்பொருளெனவும், பிரபஞ்சம் நிலையற்றதெனவும், உயிர் தன் உண்மையை உணரா நிலையிலேயே உலகம் நிலைத்திருக்கின்றது என்றும் கூறும். இதன் மூலக் கோட்பாட்டைச் சங்கரரே மாற்றியமைத்தனர் என்ற கருத்துகளும் நிலவுகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது. திருமூலருடைய காலத்தை ஆராய்கையில் இவர் சண்டேசுவரனாரைத் திருமந்திரத்திற் குறிப்பிட்டிருக்கிறார். சண்டேசுவரரை மாணிக்கவாசகரும் திருத்தோணாக்கம் என்ற பகுதியிற் குறிப்பிட்டிருக்கின்றார். மேலும் இவர் தமிழகம் ஐம்மண்டலங்களாக (தொண்டை, சோழ, பாண்டிய, சேர, கொங்கு மண்டலங்கள்) இருந்த காலத்தில் வாழ்ந்தவர் என்பதனை "தமிழ் மண்டலம் ஐந்தும்" என்பதனால் அறியமுடிகின்றது. தமிழில்

ஐம்பத்தொரு உயிர்மெய் எழுத்துக்களின் வட்ட எழுத்துக் காலத்திலே, இவர் வாழ்ந்தவர் என்பதற்காகிய சான்றுகளும் உள. இத்தகைய சான்றுகளைக்கொண்டு திருமூலர் கி,பி.500 - 600க்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்திருக்கலாம் என்று கருதுவது ஏற்புடைத்தாகும். எனவே காஸ்மீர் பிரத்தியபிஞ்ஞான சைவத்திற்கும், திருமந்திரத்திற்குமிடையே தொடர்புகள் பொருளாலும் இல்லை; காலத்தாலும் இல்லை என்பது தெளிவாம்.

## திருமந்திரம் :

திருமூலர் காலத்திலிருந்து ஒன்பது ஆகமங்களிலிருந்து தெளிந்த கருத்துக்களைத் (திருமந்திரம் செய் 63) தெளிந்து, தமது நூலின் ஒன்பது தந்திரங்களையும் முறையே காரணாகமம், காமிகாகமம், வீராகமம், சிந்தாகமம், வாதுளாகமம், வியாமலாகமம், காலோத்தராகமம், சுப்பிரபேதாகமம், மகுடாகமம் என்பவற்றின் பொருளடிப்படையில் வகுத்தனர் என்று டி.சித்தங்கையா கருதுவர். ஆனால் மறைமலையடிகள் வியாமலாகமம், காலோத்தராகமம் என்பன 28 ஆகமங்களுக்குள் இடம்பெறாமையினாலும், காமிகாமம், காரணாகமம் சிவன்கோவிற் கட்டிடக்கலை விதிமுறைகளை மட்டுமே கூறுவனவன்றிச் சைவ சித்தாந்த தத்துவத்தைப் பற்றி விபரிக்காமையினால், மேற்குறிப்பிட்ட செய்யுள் (63) மற்றும் பிறவும் இடைச் செருகல்களாகும் என்பர். திருமூலர் காலத்திற்கு ஏறக்குறைய மூன்று ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ் ஆகமங்கள்



வழக்கிலிருந்தன என்ற குறிப்புகள் மணிமேகலை, திருவாசகம் என்பவற்றிற் காணப்படுவதனால், இவ்வாறு பிற்கால அறிஞர்கள் தெரிவிக்கும் கருத்து வேறுபாடுகளை இவற்றினுதவிகொண்டு நாம் உண்மைகளைச் சீர்தூக்குவது அவசியமாம்.

இனி, முதலாவது தந்திரம், யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, கொல்லாமை, புலான் மறுத்தல், அந்தணர் ஒழுக்கம், அறம் செய்வான் திறம் எனும் முறைமைகளின் கீழ் நால்வகை அறன்களையும் எடுத்தியம்பும்.

இரண்டாம் தந்திரம், புராண வரலாறுகள், இறைவனின் ஐந்தொழில்கள், விஞ்ஞானகலர் ( ஒரு மலமுடையார்), சகலர் (மும் மலமுடையார்), பிரளயாகலர் (இருமலமுடையார்) என்பார் பற்றி விபரிக்கும்.

மூன்றாவது தந்திரம், யோகத்தினாற் கைகூடும் அட்டமாசித்திகள் பற்றியும், பின் சிவயோகத்தினால் உயிரிடம் சிவம் பிரகாசிக்குமாற்றையும் கூறும். (இம்முதல் மூன்று தந்திரங்களும் கன்மபாகத்தை எடுத்தியம்புவனவாம்.)

நான்காவது தந்திரம், உயிர் "சிவாயநம" எனும் மந்திரத்தினை உச்சரிக்கவேண்டிய முறைகள், உபாசனைகள், மறைபொருள் கொண்ட சக்கரங்கள், ஐவகைத் திருக்கூத்துக்களின் தத்து வார்த்தங்கள் என்பனபற்றி விபரிக்கும்.

ஐந்தாவது தந்திரம், சைவத்தின் உட்பிரிவுகள் (சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம்), சீலம் (சரியை), நோன்பு (கிரியை), செறிவு (யோகம்), அறிவு (ஞானம்) முதலான வழிபாட்டு நெறிகள், அடிமை (தாசமார்க்கம்), நற்பிள்ளை (சத்புத்திரர்), தோழமை (சகமார்க்கம்), ஞானநெறி (சன்மார்க்கம்) முதலான வழிபாட்டு உறவுமுறைகள், இவற்றின் பலாபலன்களான முத்திவகை சிவலோகம் (சாலோகம்), சிவனருகில் இருத்தல் (சாமீபம்), சிவன்தனுவுருவம் பெறல் (சாரூபம்), சிவத்துடன் கலந்து இரண்டறக் கலந்து நிற்கும் நிலை (சாயுச்சயம்) என்பன (இவை ஒன்றிற் கொன்று ஏற்றமாகும். அவற்றுள் சாயுச்சயமே முடிவான விடுதலையாம்). நான்கு வகையான அருள்வீழ்ச்சி (சத்நிபாதம்) களான மந்தம், மந்ததரம். தீவிரம், திவீரதரம் என்பவைபற்றிய விளக்கங்களும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

ஆறாவது தந்திரம், சிவகுரு காட்சி, சிவஞானம், திருவருள், திருவடிப்பேறு (காண்பான், காட்சி, காட்சிப் பொருள் என்ற மூன்றினையும் திருவருளால் உள்ளத்தே கொள்கின்ற சிவஞானியே இறைவன் திருக்கூத்தைத் தரிசித்துத் திருவடியை அடைவான்), திருநீற்றின் மகிமை என்பன இந்த தந்திரத்தில் இடம்பெறுவனவாம். (இம்மூன்று தந்திரங்களும் உபாசனை என்ற பிரமாண அளவையை விளக்குவனவாம்)

ஏழாம் தந்திரம், ஆறு அத்துவாக்கள் (மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை முதலான உபசாரத் திருமேனிகள்), ஆறு இலிங்கங்கள், சம்பிரதாயம், திருவருள், வழிபாட்டுமுறைகள், சிவனடியார் பெருமை, உயிரின் இயல்பு, ஐம்புலன்களை அடக்கும் வழிகள் என்பன கூறப்பட்டுள்ளன.



எட்டாம் தந்திரம், தூலம், சூக்குமம், காரணம், மகாகாரணம் முதலான உடல்களின் வேறுபாடுகள், உயிரின் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் முதலான ஐந்தவத்தை நிலைகள், மற்று உயிரின் கேவல, சகல, சுத்த நிலைகள், பதி, பசு, பாசங்களின் இயல்புகள், முப்பதமாகிய 'நீ அது ஆகின்றாய்' என்பதற்குரிய சைவ சித்தாந்த விளக்கங்கள் என்பன தரப்பட்டுள்ளன.

ஒன்பதாவது தந்திரம், குருதரிசனம், சமாதி, திருவைந் தெழுதின் தூல, சூக்கும, அதிசூக்கும உட்பொருள்கள், சிவனின் திருக்கூத்துக்கள், அறிவோதயம், சிவவடிவுக்காட்சி, மோன சமாதி, அணைந்தோர் தன்மை முதலான விடயங்கள் ஆராயப் பட்டுள்ளன.

(இம்மூன்று தந்திரங்களும் ஞானபாகம் எனப்படும்.)

தென்னகத்தில் ஆகம நூல்களைத் தமிழறிஞர்கள் மனப்பாடமாகவே வைத்திருந்தினர். கடல்கோள்கள் காரணமாக இந்த மரபு மறையலாயிற்று. அதனாற் தமிழகத்துச் சைவ சித்தாந்தக் கருத்துக்களை முதலில் இறைவனே மகேந்திர மலையிலிருந்து அருளினன் என்ற பழைய மரபு காலப் போக்கில் வழக்கற்றுப்போக, இறைவன் திருக்கைலாயத்திலிருந்து வடமொழியிலேயே வேதாகமங்களை வகுத்தனன், தொகுத்தனன் என்ற புதிய மரபு தேவாரத் திருமுறைகளில் உருவெடுக்கலாயிற்று. இது தேவாராசிரியர் காலத்திலே சமரச நோக்கத்துடன் புகுத்தப்பட்டிருக்கலாம் எனத் தெரிகின்றது. வடமொழி இதிகாச புராணங்களிற் சிவ வழிபாடும், சிவலிங்க வழிபாடும் முக்கிய மத

வழிபாடாக வளர்ந்த காலத்திற் சைவ மரபொன்று திருக்கையாலத்துடன் தொடர்பு பெறலாயிற்று என்பதனை நாம் அவதானிக்க முடிகின்றது. இந்த மரபினைப் பேணிப் பாதுகாத்ததே காஸ்மீர் சைவ மதமாகிய பிரத்தியபிஞ்ஞான தரிசனமாகும். திருக்கைலையிலேயே இறைவன் உயிர்களுக்கருளு முகமாக யோகத்தில் எழுந்தருளினார் எனவும், பின் இமயமலை அரசன் மகளாகிய பார்வதி (உமா) சிவனைக் கைப்பிடிக்க விரும்பிக் கடுந் தவத்தை மேற்கொண்டதாகவும், அப்பொழுது சிவன் உமையின் தவத்தின் உறுதியைப் பரிசோதித்துத் திருமணம் செய்துகொண்டார் எனவும் கூறுகின்ற வரலாறுகளே, சிவனை முதலில் இமய மலையுடனும், அதன் சிகரங்களின் ஒன்றாகிய கைலையுடனும் தொடர்புபடுத்துகின்ற வரலாறுகளாம். இவ்வரலாறுகளை மகாபாரதம், இராமாயணம், சிவபுராணம், சௌரபுராணம், மத்ஸ்ய புராணம், பிரம்மபுராணம், காலிகா புராணம், காளிதாசனின் குமாரசம்பவம் முதலான நூல்கள் எடுத்துரைக்கின்றன. இதன்பின் சிவபிரதோஷ தோத்திரம் சிவன் திருக்கைலையில் ஆடிய சந்தியாகால நடனத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. இந்த நடனத்தைப்பற்றிக் கதாசரித்சாகரமும் தன் இறைதுதியிற் குறிப்பிடுகின்றது. கைலாய மலையில் மாலைக்காலத்தில் ஆடுகின்றபோது இந்நடனத்தில் இரு கைகளையுடையவராகிய சிவன், உமை பொன்னாசனத்தில் வீற்றிருக்கச் சூலத்தைக் கையிற் கொண்டவராகத், தேவர்கள் சூழ நின்று துதிக்க ஆடுவர் எனக் குறிப்பிடும். எனினும் இந்த நடனம் பற்றிய குறிப்புக்களைத் தென்னாட்டுச் சைவ இலக்கியங்கள் குறிப்பிடுவதாக



இல்லை. எவ்வாறாயினும், இறைவன் உயிர்கள் உய்யக்கருதி திருவிளையாட்டுக்கள் நடத்திய இடங்களில் இமயமலையும் ஒன்றாகும் என்பது தெளிவு. இவ்வாறு சிவ வழிபாட்டையும், சிவலிங்க வழிபாட்டையும் வடமொழி நூல்களும் போற்றித் துதிசெய்யத் தொடங்கிய காலம் முதலாகத், தென்னாட்டுச் சைவ இலக்கியங்களும் இறைவன் திருக்கைலையில் நடத்திய திருவிளையாடல்களைப் போற்றலாயின. அதன் விளைவாகச் சிவ வழிபாட்டையும் சைவ சித்தாந்தக் கோட்பாடுகளையும் திருக்கைலையுடன் தொடர்புபடுத்துவனவாக தென்னாட்டில் உருவாகிய வடமொழி இலக்கியங்களும் அமையலாயின. இந்த மரபினைப் பின்பற்றித் தேவாரங்களும் 'கைலையும் பொதியிலும் இடமென உடையாய்' (சம்பந்தர்) எனச் சிவனைத் துதிசெய்யலாயின. இதனாலன்றோ அகத்திய முனிவரையும் மரபுகள் திருக்கைலையுடனும், பொதியிலுடனும் தொடர்பு காட்டுகின்றன. இராவணன் திருக்கைலையைப் பெயர்க்க நினைத்து, இறைவன் கோபத்திற் குள்ளாகியதும் இதனாலன்றோ. இந்த மரபினடிப்படையிலேதான் உமாபதி சிவசாரியார் திருமூலரைக் 'கைலாயத்தொரு சித்தர்' என்பதும், சேக்கிழார் தமிழ் நாட்டுத் திருத்தொண்டர் வரலாற்றில் முதலிற் திருமலைச் சிறப்பை வருணிப்பதும், "கைலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெய்ப்பயில் வாய்மை மெய்கண்டான் சந்ததிக் கோர்" என மெய்கண்ட தேவரின் குருமரபைச் சிவஞானமுனிவர் காட்டுவதும் அமைகின்றன எனலாம். மேலும் இப்பிரபஞ்சத்தின் மையமெனக் கருதப்படுகின்ற தில்லைமூதூரிற் (சிதம்பரத்தில் அல்லது

பொன்னம்பலத்தில்) சிவன் ஆடிய நாதாந்தத் திருக்கூத்தினைத், திருக்கைலையுடன் தொடர்புபடுத்துகின்ற வரலாறு ஒன்றினையும் இங்கு குறிப்பிடுவது பொருத்தமாகும். இறைவனின் மூன்றாவது நடனமான நாதாந்தத்திருக்கூத்தினை, இறைவன் முதலிற் தாரகா வனத்திலும், பின் சிதம்பரத்தின் பொற்சபையிலும் ஆட நேரிட்டது என்று கூறுகின்ற வரலாற்றின்படி தாரகாவனத்தில் வசித்துவந்த மீமாம்சைக் கோட்பாட்டைப் பின்பற்றிய 10,000 இருடிகளும், மனைவிமாரும், சிவன்முதலிய தெய்வங்கள் உண்மையற்றன என்ற கருத்துடையவர்களாக, வேதத்திற் கூறிய கரும காண்டக் கிரியைகளை இயற்றிவரின், இம்மையிலும், மறுமையிலும் பயனடையலாம் என்ற கோட்பாடுடையவர்களாக இருந்தார்கள். அதனால் அவர்களுக்கு உண்மையைப் புகட்டுமுகமாக இறைவன் பிச்சாடணர் வடிவையெடுத்து, அழகிய பெண்ணாக மாறுவேடம் கொண்ட விஷ்ணுவுடனும், ஆதிசேடனுடனும் இருடிகளிடம் சென்றனர். இவர்கள் அழகில் மோகங்கொண்ட இருடிகளும், மனைவியரும் முதலிற் தமக்குள்ளே முரண்படலாயினர். பின் சிவனே அவ்வேடத்தில் வந்தவரென்ற உண்மையை அறிந்து, தம் வேதமந்திர சக்திமூலம் யாககுண்டத்திலிருந்து உருவாக்கிய கொடூரமான புலியொன்றினை அவர்மீது ஏவினர். சிவன் சிரித்துக் கொண்டே அதனையுரித்துத் தன் அரையாடையாக அணிந்து கொண்டனர். அம்முயற்சியிற் தோல்விகண்ட இருடிகள் பயங்கரமான பாம்பொன்றினைப் பின்னர் ஏவினர். அதனையும் சிவன் தன் கழுத்தணியாகப் போட்டுக்கொண்டு, நடனமாடத் தொடங்கினர். இவ்விதம் முயற்சிகள் பலிதமற்ற நிலையில், இருடிகள்



அசுரனாகிய முயலகனை ஏவினர். அவனைச் சிவன் தன் கால்விரல் நுனியால் நெரித்து; நிலத்திற் புரளவைத்துவிட்டுத், தனது நடனத்தைத் தொடர்ந்து ஆடினார். அந்நடனத்தைத் தேவர்களும், மூர்ச்சை தெளிந்தெழுந்த இருடிகளும், மனைவியரும் கண்டு துதிக்கலாயினர்.

இந்த நடனத்தின் முடிவிற் சிவன் கைலாயத்திற்குத் திரும்பியபின், ஆதிசேடனும் அவரைத் தொடர்ந்து சென்று, மறைபொருளுள்ள அத்திரு நடனத்தைத் தான் இன்னொரு முறை பார்க்க விரும்புவதாக விண்ணப்பித்தது. அப்பொழுது சிவன் பிரபஞ்சத்தின் நடு மையமான தில்லையின் பொற்சபையிற் தான் ஆடும்பொழுது பார்க்கும்படி கூறியருளினர். அதனைப் பார்ப்பதற்காகப் பாம்பும் மனித உருவும் கொண்டவராகத் தென்னாட்டிற்கு வந்தவரே பதஞ்சலி முனிவர் ஆவர். இவ்வரலாற்றினையே மாணிக்கவாசகரும் “பதஞ்சலிக் கருளிய பரம நாடக” என்று தமது கீர்த்தித் திருவகவலில் (138) விதந்தோதினர். மேலும் பதஞ்சலிக்கு முன்னரே, சிவன் எழுந்தருளுகின்ற இடங்களிற் தில்லையின் பொற்சபை மேலானது என்பதனைத் தந்தை வாயிலாக அறிந்து வடநாட்டிலிருந்து வந்து, தில்லையிற் சிவனருளாற்புலிக் கால்களைப்பெற்று, உச்சி மரங்களிலிருந்து பூக்களைப் பறித்து மலரர்ச்சனைசெய்து வழிபட்ட பிராமணராகிய வியாக்கிரபாதரால் பூசிக்கப்பட்ட தில்லையிலுள்ள புலியூரையும் மாணிக்கவாசகர் “இமயத்தியல் புடைய அம்பொற் பொலிதரு புலியூர்ப் பொதுவினி னடநவில்” எனப் (கீர்த்தித்திருவகவல் வரி 140-41) போற்றுவர். இவ்விரு வரையும் திருமூலர் நந்தியருள் பெற்றோர் என்பர். ஜி.யு.போப்

அவர்களும் பதஞ்சலி முனிவர் இவ்வாறு சிவனருளைப் பெற்றவரென்பதனாலேயே, அவரியற்றிய பதஞ்சலி யோகம் சைவ சித்தாந்தத்தின் கருமயோகத்தைப் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளது எனக் கருதுவர்.

மேலும் இமயமலை அரசன் மகளாகிய உமையே, பின் தென்னாட்டில், மலையத்துவச பாண்டியன் செய்த யாகத்திற் தோன்றித் தடாதகைப் பிராட்டியாக வளர்ந்திருக்கையிற், சிவன் அவளைத் திருமணம் செய்துகொண்டார் எனத் திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. மற்றுத் தமிழக அரசியல் வரலாறுகள்கூடத், தாம் இமயம்வரை வைத்திருந்த கலாசாரத் தொடர்புகளைப் பேசுபவனவாகக் காணப்படுகின்றன. இமயமலைவரை சென்று வெற்றிக்கொடிகளை நாட்டிய இமயவரம்பன் குடக்கோச் சேரலாதன், கரிகாற்சோழன் வரலாறுகளைப் பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, புறநானூறு, மணிமேகலை (மணி 28 : வரி 103-104) முதலான நூல்கள் எடுத்துரைக்கின்றன. சிலப்பதிகாரம் சேரன் செங்குட்டுவன் இமயமலையிலிருந்து கொண்டுவரப்பட்ட கல்லிற் கண்ணகி உருவத்தைக் குடைந்தான் எனப் போற்றும்.

இனி திருக்கைலாயத்திற்கும், தென்னகத்துச் சிதம்பரத்திற்கு முள்ள சைவ மரபுத் தொடர்புகள் இவ்வாறிருக்க, இன்று எமக்குக் கிடைக்கின்ற வடமொழி ஆகமங்கள் தென்றிசையினிருக்கும் நாவல்மரம் ஏனைய மூன்றினும் (கடம்பு, அரசு, ஆல்) அதிசயமுடைய கனியைத் தருவதனால், அதன் பெயராலே பரத கண்டம் முழுவதும் நாவலந்தீவு என்ற பெயரைப் பெறலாயிற்று என்றும், இப்பரத கண்டம் ஒன்பது பிரிவுகளையுடைத்தென்றும்,



இவற்றுள் குமரிக் கண்டமொன்றே வேதாகம வழக்கமும், புண்ணிய தலங்களுமுடையது என்றும் கூறுகின்றன.[12] எனவே நாம் முதலில் ஆராய்ந்து காட்டிய தென்னக மரபுகள் யாவும், திருக்கைலாயச் சைவசமய வளர்ச்சியின் தாக்கம் காரணமாகக் காலப்போக்கில் வழக்கற நேரிட்டது என்பதனை, தொடர்ந்து நாம் ஆராய்ந்து காட்டிய சான்றுகளிலிருந்து உய்த்துணரலாம். இந்த மரபுகள் மாறிய பின்னணிகளையறியாத நிலையிலே தான்

**சீரார் கயிலைத் திருவாய் மலர்ந்த சிவாகமங்கற்**
**றாராய் வதுவட சொற்பயின் றார்க்கெளி தம்மொழியைச்**
**சாரா தவருமத் தத்துவ ஞானத் தலைப்படுதற்**
**கேரார் தமிழ்ச்செய்யு ளான் மயல்தீர வெழுதுவனே**
**(தத்துவவிளக்கம் 3)**

எனத் தத்துவவிளக்க ஆசிரியர் கூற நேர்ந்தது என்பதும் தெளிவாம்.

உண்மையில் இறைவனின் திருவிளையாட்டுக்கள் வாயிலாகவே கடவுளுண்மையைப் பௌத்த, சமண மதங்களுக் கெதிராக நிறுவத் திருவாசகம், திருமந்திரம், ஞானாமிர்தம், தேவாரம், சிவஞானபோதம் முதலான நூல்களெல்லாம் கி.பி.முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி.2ம் நூற்றாண்டிற்கிடைப்பட்ட காலத்தில் அடுத்தடுத்துத் தோன்றியனவாம். இவற்றுள் திருமந்திரம், திருவாவடுதுறைக் கோயிற் பலிபீடத்தின்கீழ்ப் புதைத்துவைக்கப்பட்டதனாலும், ஞானாமிர்தம் எனும் தமிழாகம நூல் சைவ மடங்களாற் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்ததாலுமே

இன்று எமக்கு இவை தமிழிலேயே கிடைக்கப் பெற்றுள்ளன. மறைமலையடிகள் மகேந்திர மலையிற் சிவனால் அருளப்பட்ட தமிழ் ஆகமங்களைச் சமணர்கள் அழித்திருக்கலாம் எனக் கருதுவர்[13]. ஆனாற் பல்லவ மன்னர்கள் சைவமத எழுச்சியுடன் ஆகமஞானங்களை அறிய விழைந்தவர்களாக, அவற்றினை வட மொழிப்படுத்தியதனாலே, தமிழில் இருந்த மூலாகமங்கள் கைவிடப்பட்டு அழிய நேரிட்டிருக்கலாம் எனத் தெரிகின்றது. சிறப்பாகப் பல்லவ மன்னன் இராஜசிம்மன் (கி.பி.680-700) தனது காஞ்சிக் கைலாசநாதர் கோவிற் கல்வெட்டிற் தன்னை "ஆகமப்பிரியன்" என்றும், சைவ சித்தாந்தத்தைப் பின்பற்றுபவன் என்றும் கூறுவதனால், இவனுடைய காலத்திலே தமிழாகமங்கள் வடமொழிப்படுத்தப் பட்டிருக்கலாம் என்பதற்கு, வேறு சான்றுகளைக் கொண்டும் நாம் அவதானிக்கலாம்.

இவைதவிர, பழைய ஆகமங்கள் ஆதிதிராவிடருடைய சிவன்கோவில் வழிபாட்டுடன் தொடர்புடையனவாக இருந்தன என்பதனை இந்துக் கோவிற் கட்டிடக்கலை ஆய்வுகளும் தெளிவுபடுத்தியுள்ளன. இந்துக்கோவிற் கட்டிடக் கலையின் வளர்ச்சி நிலைகளை ஆராய்ந்த டி.பட்டாசாரியர் வடஇந்திய இந்துக் கட்டிடக் கலைக்குப் புராணங்களும், பிற வட இந்தியச் சமய நூல்களும் ஆதாரமாக அமைந்திருந்தனவென்றும், தென்னிந்திய இந்துக்கோவிற் கட்டிடக்கலைக்கு தென்னிந்திய ஆகமங்களே ஆதாரமாக அமைந்திருந்தன என்றும் ஆராய்ந்து காட்டுவதோடு, வடநாட்டு விஸ்வகர்மத்தையும், தென்னாட்டு மயமதத்தையும் இருபகுதியினரும் மதித்துப் பின்பற்றியதனால், வடநாட்டுத், தென்னாட்டுக் கோவிற் கட்டிடக் கலைகளிற் கலப்பு



விதிகள் ஏற்படலாயின என்றும் கருதுவர். எனினும் மயனாற் தமிழில் எழுதப்பட்ட மூல நூல் அழிந்துபோக பிற்காலத்திற் கண்மாச்சாரியாரால் எழுதப்பட்ட மயமதமே பேணப்பட்டு இருக்கிறது என்றும், ஆகமங்கள் மற்றும் சில்பரத்தினம், ஈசான சிவகுருதேவ, மானசார முதலான நூல்களைத் தமிழிலிருந்து வடமொழிப்படுத்திய காலத்தில் வழக்கிலிருந்த புதிய மரபுகள் சேர்த்துக் கொள்ளப்பட்டவிடத்தும், பழைய மரபுகளையும் பேணியிருந்தனர் என்றும் கூறுவர்[14]. எனவேதான் வடமொழி யிலுள்ள காமிகம், காரணம் முதலான ஆகமங்கள் இறைவனை யுணர்த்தும் மெய்ப்பொருள் ஆய்வு செய்யாமற் தனியே கோவில் அமைக்கும் முறைகளையும், வழிபாட்டு முறைகளையும் மட்டுமே விபரிப்பதனால், இவை பழைய தமிழ்ச்சிற்ப நூல்களின் மொழிபெயர்ப்பென்றும், மெய்ப் பொருளாராய்ச்சி செய்கின்ற "பௌட்கரம்", "மிருகேந்திரம்" என்பவையே பழைய தமிழ் ஆகம மொழிபெயர்ப்பு என்றும் மறைமலையடிகள் கருதுவர்[15].

சிவனை நடனமூர்த்தராகச் சிறப்பாக வணங்கும்முறை தமிழகத்திற்குரியதாகும். எனவே இறைவனைத் "தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே" என்று போற்றும் பண்பு, தென்னாட்டுச் சைவத்தின் சிறப்பியல்புகளில் ஒன்றாம். சிவனே 108 வகையான நடனங்களைத் தோற்றுவித்தவர் என்றும், இவற்றுள் "தாண்டவம்" என்பது உலக ஒடுக்கத்தின்பின் ஆடப்படுவது என்றும் சைவ சமய வரலாறுகள் குறிப்பிடுகின்றன. இந்துவெளி - ஹரப்பா கலாசாரத்திற் கிடைக்கப்பெற்ற நடனமாதுவின் சிலை ஆதிதிராவிடக் குடியினர் பேணியிருந்த நடனக் கலையைப்பற்றி அறிவுறுத்துவதாகும். மேலும் இருக்குவேதம் குறிப்பிடுகின்ற பரதர்

முதலான குழுக்கள், ஆரியருடன் எதிர்த்துப் போராடிய ஆதிதிராவிடர்கள் (தஸ்யுக்கள்) என்பர் மறைமலையடிகள்[16]. ஆனால் எ.எல்.பசாம் பரதரை ஆரியரின் யாகங்களில் வேத மந்திரங்களை ஓதுவோர் என்பர்[17]. இந்தப் பரதர் வழிவந்த குழுக்கள் பின் வடக்கிலிருந்து தெற்குவரை பரவினர் எனவும், இவர்கள் பேணிக்காத்த நாட்டியக் கலையே கி.பி.3ம் நூற்றாண்டளவிற் தமிழகத்தில் நாட்டிய சாத்திரமெனும் நூலாக உருப்பெற்றதென்றும் தெரிகின்றது. தமிழகத்தில் வடமொழி ஆதிக்கம் இடம்பெற்றிருந்த காலத்தில் இந்நூல் உருவாகியதனால், அது வடமொழியிலேயே எழுதப்படலாயிற்று என்றும் புலனாகின்றது. மேலும் இந்நாட்டிய சாஸ்திரத்திலும், ஆகமங்கள்பற்றிய குறிப்புகள் கிடைக்கப்படுவதனால் ஆதிதிராவிடக் கட்டிடக் கலைக்கு ஆதித் தமிழ் ஆகமங்களே மூலமாக இருந்தன என்பதுவும் மேலும் உறுதியாகின்றது.

மேலும் இறைவனூலாகிய ஆகமநெறிப்பட்ட பழந்தமிழர் வழிபாடுகள் தொடக்கத்திலிருந்தே ஆடல், பாடல், அழுதல் முதலானவைகளைக்கொண்ட பக்தி நெறிப்பட்டதாம். இதனை மாணிக்கவாசகர்,

**''புரள்வார், தொழுவார், புகழ்வாராய்''**
**(யாத்திரைப்பத்து வரி 40)**

என்றும்

**''ஆர்க்கோ, அரற்றுகோ, ஆடுகோ,**
**பாடுகோ, பார்க்கோ''**
**(திருவெண்பா வரி 6)**



என்றும் கூறுவதிலிருந்து உணரற்பாலதாம். மரநிழலிற் கண்ட தான்தோன்றி இலிங்கக் குறிகளையும், தாமேயியற்றிய இலிங்கக் குறிகளையும், அன்புள்ளத்துடன் பூசைகள் இயற்றி வழி பட்ட கண்ணப்பர், சண்டேசுவரர் முதலான மானுட பக்தர்கள் மட்டுமன்றித், திருவானைக்கா நாவல் நிழலிலிருந்த தான்தோன்றி இலிங்கத்தைப் பந்தர் அமைத்தும், பூவும், நீரும் கொண்டு வழிபட்ட சிலந்தியையும், யானையையும் இங்கு நாம் நினைவுகூரத்தக்கதாம். இவையேயன்றி திருமுருகாற்றுப்படை விபரிக்கின்ற "வேலன் ஆடல்" முறை, இந்துவெளி - ஹாரப்ப முத்திரைகள் சித்தரிக்கின்ற காவடியாட்டம் முதலானவையும் தமிழர் வழிபாட்டு முறைகளாம். இந்த வழிபாட்டு முறைகள் யாவும் ஆகமநெறி வகுக்கப்பட்ட கோவில்களிற் தாமாகவே காலப்போக்கில் இடம்பெறலாயின. எனவே தமிழகத்திற் புறநானூறு குறிப்பிடுகின்ற முக்கட் செல்வனுக்கு அமைக்கப் பட்ட கோவில், அகநானூறு குறிப்பிடுகின்ற ''இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்ததென மணிப்புறாத் துறந்த மரஞ்சேர் மாடத்து" எனும் கோவில், மற்றுச் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான நூல்கள் குறிப்பிடுகின்ற ''நுதல்விழி நாட்டத்து இமையோன் கோட்டம்" என்பன யாவும் தமிழ் ஆகம முறைப்படி யமைக்கப்பட்ட கோவில்கள் எனின் தவறாகாது. சங்க இலக்கிய காலத்திலேயே தமிழ் மன்னர்களுள் கரிகாட்சோழன் (கி.பி.2ம் நூற்றாண்டின் முற்பகுதி) காடுகளை அழித்துக், காவிரிக்குக் கரை எடுத்துக் குடிகளை அமர்த்திக் கோயிலும் எடுத்தான் எனப் பட்டினப்பாலை கூறும்.

காடு கொன்று நாடாக்கிக்
குளம் தொட்டு வளம் பெருக்கிப்
பிறங்கு நிலை மாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீ இ

(பட்டினப்பாலை II 277-286)

மற்று, இவனைத்தொடர்ந்து ஆண்ட சோழன் கோச்செங்கணானைத் (கி.பி.2ம் நூற்றாண்டின் பிற்பகுதி) திருவானைக்காவின் நாவல் மரவடியிலிருந்த சிவலிங்கத்திற்குப் பூஜை செய்த சிலந்தியே, பின் இறையருளாற் கோச்செங்கணாகப் பிறந்தான் என்று தேவாரங்களும், சிவஞான சித்தியாரும் விதந்தோதுகின்றன. இக்கோச்செங்கணே சமயக் காழ்ப்பின்றிச் சிவனுக்கும், விஷ்ணுவிற்கும் 70 மாடக் கோயிலைச் கட்டினான் என்பது வரலாற்றுத் தகவல்களாம். எனவே ஆதியில் இறைவனால் உணர்த்தப்பட்ட தமிழ் ஆகமங்கள் பற்றிய தகவல்களை, இக்கோவில்களின் வளர்ச்சிகளின் மூலமும் நாம் உய்த்துணரலாம். மாணிக்கவாசகர் குறிப்பிடும் திருக்கோவில்கள் 54 ஆக இருக்கையில், தேவாரவாசிரியர்கள் குறிப்பிடுபவை 275 ஆவன. இத்தகவல்கள்மூலம் சிவன் கோவில் வளர்ச்சி நிலைகளை நாம் ஆதாரபூர்வமாக அறியக் கூடியதாக இருக்கின்றது.

மேலும் ஜேர்மன் ஆய்வாளராகிய எச். டபிள்யு சொர்மெரஸ் (H.W.Schormerus) என்பாரும் ஆகம இலக்கியங்கள் முதலிற் தமிழில் இருந்தன என்பதனை வற்புறுத்துவதோடு, காலப் போக்கில் ஏற்பட்ட வடமொழிச் செல்வாக்கினால் பழைய தமிழ்ப் பதங்கள் வழக்கிழந்து போகக், காலப்போக்கில் தமிழ் ஆகமங்கள் வடமொழிப் படுத்தப்பட்ட சூழ்நிலையில், இவை வடமொழி



இலக்கியங்களின் பிரிவுகளில் ஒன்றாகக் கருதப்படும் நிலை ஏற்படலாயிற்று என்பர்[18].

இனி, எத்தகைய சூழ்நிலைகளிற் தமிழ் ஆகமங்கள் வடமொழிப்படுத்தப்பட்டன என்பதனை நோக்குகையிற், சில மறைவான கருத்துக்களை நாம் வெளிப்படுத்தலாம். வடநாட்டில் இருந்து வைதிகமதமும், கலாசாரமும், தென்னோக்கிப் பரவியமை சுமுகமான சூழ்நிலைகளின் பாற்பட்டதென்பர் ஆய்வாளர். இவ்வாறு தென்னாட்டுக்கு வருகைதந்த முதல் வடநாட்டு முனிவர் அகத்தியர் எனத் தமிழ் மரபுகள் குறிப்பிடுகின்றன. இக்காலம் முதலாகத் தமிழகத்தில் வைதீகமதத்தின் வேள்விகள், யாகங்கள் என்பன அறிமுகமாயின. தமிழ் மன்னர்களும் செல்வம், வெற்றி, ஆயுள் என்பனவற்றை விரும்பி, வடநாட்டுப் பிரமாணக் குருமார் மூலம் சமயக் கிரியைகளைச் செய்யலாயினர். அதனாலே சங்ககால மன்னர்களுக்கு 'இராசசூயம் வேட்ட' அல்லது 'பல்யாகசாலை' என்ற அடைமொழிகள் இடம் பெறலாயின. வைதிகக் கிரியைகளில் மோகங்கொண்ட மூவேந்தர் காலத்திலேயே தென்னாட்டிற் சமயக்கிரியைகளை அதுவரை நிகழ்த்திவந்த பார்ப்பார் (தெய்வக் காட்சிகளைக் காண்பவர்), அந்தணர் (துறந்தோர்) எனும் தமிழ்ச் சமயக்குருமாரை அகற்றிவிட்டு வடநாட்டு வைதீக மரபில் வந்த பிராமணக் குருமாரை நியமிக்கின்ற முறை ஏற்படலாயிற்று. மூவேந்தர் காலத்தின் பின் இந்நிலை, தமிழ் நாட்டை ஆண்ட, வடநாட்டு மன்னர்களான பல்லவர், ஹொய்சலர், கங்கர், சாளுக்கியர், இராட்டிரகூடர் காலத்தில் இன்னும் அதிகரிக்கலாயிற்று. வடநாட்டினரான இம்மன்னர்கள் தமது வைதீகப் பிராமணக் குருமாரையே அதிகம்

தருவித்துக் குடியமர்த்தலாயினர். இத்தகைய பின்னணியிற் தென்னாட்டுக் கோவில்களிலும், வைதீகப் பிரமாணக் குருமாரின் செல்வாக்கு அதிகரிக்கலாயிற்று. அதனால் ஆகமக்கிரியை நெறிப்படி பூசை நிகழ்த்தப்பட்ட கோவிற்கிரியைகளில், வைதீகப் பிராமணக் குருமார் பயிற்சிபெற வேண்டியவர்களாக இருந்தார்கள். இந்நிலை பல்லவமன்னர் காலத்தில் இன்னும் தீவிரமாகிற்று. ஏனெனிற் பல்லவ மன்னர்களுள் இராஜசிம்மன் (கி.பி.680 - 700) முதலானோர் சைவ சித்தாந்தத்தைப் பின்பற்றுபவர்களாகவும், ஆகம வழிபாட்டில் ஈடுபாடுடையவர் களாகவும் இருந்ததனாற், சைவம் ஆட்சியாளரின் பற்றுமிக்க மதமாக இருந்தது[19]. இத்தகைய பல்லவமன்னரின் ஆட்சியின் பின்னணியில் வடமொழி, ஆட்சியாளரின் அவைமொழியாகவும் இருந்தமையாற், தமிழ் ஆகமங்கள் மன்னர்களுக்காவும், வைதிகக் குருமார்களுக்காகவும் வடமொழியில் மொழிபெயர்க்கவேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. அதனாற் தமிழ் ஆகமங்களை வட மொழிப்படுத்தியோர், பின் தமிழ் ஆகமங்களைத் தேவையற்றனவாகக் கருதி அழித்து விட்டனர் என்பர் ந.சி.கந்தையாபிள்ளை அவர்கள்[20]. இவருடைய கருத்து ஏற்படைத்து என்று நாம் கருதும் அளவிற்கு, இலங்கை வரலாற்றுச் சம்பவம் ஒன்றினையும் நாம் இங்கு நினைவு கூரலாம். இலங்கையில் ஆதிச்சிங்கள மொழியான எழுமொழியிலிருந்த பௌத்த தருமக் கோட்பாடுகளைத், தென்னிந்தியாவைச் சேர்ந்த புத்தகோசர் எனும் தேரர் பாலிமொழியில் மொழிபெயர்த்த பின்னர் எழுமொழியிலிருந்த மூலப் பிரதிகள் காலப்போக்கிற் கைவிடப்பட்டன எனச் சிங்கள மரபுகள் கூறுகின்றன[21]. மேலும் இந்நிகழ்ச்சிகள் உண்மையாக இடம்பெற்றவை என்பதனை நாம் இன்று ஆங்கிலம் உலகளாவிய அளவில் வைத்திருக்கின்ற செல்வாக்கினைக் கொண்டு, அன்று வடமொழி தமிழகத்தில் வைத்திருந்த செல்வாக்கினையும் அதனாலேற்பட்ட பலாபலன் களையும் உய்த்துணர்ந்து கொள்ளலாம்.



இனித், திருமூலராற் குறிக்கப்பட்ட ஆகமங்கள் ஒன்பதும் கி.பி.6ம் நூற்றாண்டிற்கு முன்னரே இயற்றப்பட்டவை என்பது திருமூலர் கால ஆய்வுகளினால் உணர்த்தப்பட்டதாம், ஆனாற் பிற்காலக் கோவிற் குருமாரால் மொழிபெயர்க்கப்பட்ட காமிகம் முதலான வடமொழி ஆகமநூல்களிற் புதிய கருத்துக்கள் புகுத்தப்பட்டிருப்பதனால் இவற்றுற் சில பல்லவர் காலத்திற்குப் பின்னரே மொழி பெயர்க்கப்பட்டன என்பது தெளிவாம். காமிகாகமம் நான்காம் படலத்தின் 437 - 439 சுலோகங்கள் சிவனுக்கு வழிபாடு செய்யும்பொழுது தமிழ் வேதங்கள் (தேவார, திருவாசகங்கள்) ஓதவேண்டும் என்றும், உத்தரகாரணாகமம் சிவனுக்குத் திருவிழா எடுக்கும் காலை, ஏழாம்நாளிற் திருஞான சம்பந்தருடன், போட்டியிட்டுத் தோற்ற சமணர்கள் கழுவில் ஏறிய செய்தி கொண்டாடப்பட வேண்டுமென்றும் கூறுவதனால், இவற்றின் காலத்தை நாம் அறிந்து கொள்ளக்கூடியதாக இருக்கின்றது. மேலும் இதனை உறுதிப்படுத்தும் வகையிற் திவாகர நூல் வடமொழி வேத, புராணங்களுடன், வடமொழி ஆகமங்களைச் சேர்த்துக் குறிப்பிடாமைக்குரிய காரணத்தையும் நாம் இங்கு கருத்திற்கொள்ளல் அவசியமாம்.

இதுவரை நாம் வடநாட்டு வைதீக வழிபாடுகள் தென்னோக்கிப் பரவியமையையும், அதனாற் தென்னாட்டுச் சமயவழிபாடுகளில் ஏற்பட்ட தாக்கங்களையும் சுருக்கமாகக் குறிப்பிட்டோம். இதே காலகட்டத்தில் வடநாட்டிலும் இதிகாச, புராணகாலங்களில் வைதிகமதக் கிரியைகள், புதிய திருப்பங்களுக்கூடாகச் சென்று கொண்டிருந்தன. அதன் விளைவாகப் பழைய பிராமணக் கிரியைகள் ஒன்றன்பின் ஒன்றாகக் கைவிடப்படப், பூசைகள், விரதங்கள், தவங்கள், தியானங்கள், தீர்த்த யாத்திரைகள் என்பன சமய வழிபாடுகளில் முக்கிய அம்சங்களாக இடம்பெறலாயின. வடநாட்டில் இப்படியான திருப்பங்கள் சமய வழிபாட்டில் ஏற்பட்டும்கூடத் தென்னாட்டில் மன்னர்கள் வைதிகக் கிரியைகளில் வைத்த பற்றினைக் கைவிட்டார்களில்லை. ஆனாலும் கோவில்களில் வைதீகக் குருமார் தென்னாட்டு ஆகமங்களைப் பின்பற்றியே பூசைகளை நிகழ்த்தி வரலாயினர். இதனை,

நவிற்று நாள் நன்மலர் தூபங்
கவற்றிய கந்தங் கவர்ந்தெரி திபம்

(திருமந்திரம் 1242)

நித்தலும் நியமம் செய்துநீர் மலர்தூவிச்
சித்தம்ஒன் றவல்லார்க் கருளும் சிவன்கோவில்

(சம்பந்தர்)

......தீப மலி வாய்மை யதனால்
அந்தியமர் சந்திபல அர்ச்சனைகள்
செய்ய அமர்கின்ற அழகன்



எனத் திருமந்திரமும், தேவாரங்களும் குறிப்பதுபோல ஆகம முறைப் பூசைகள் உள்ளன்புடன் நிகழ்த்தப்பட்டன. இப்பூசைகளை நிகழ்த்திவந்த வடநாட்டுப் பிராமணக் குருமாரை வடநாட்டு வேதாந்திகள் கண்டிக்கலாயினர். அதனோடு தென்னாட்டுக் கோவில்களிற் பூசகராகக் கடமையேற்ற பிராமணக் குருமாரைத் தாழ்ந்தவராகவும் வட நாட்டினர் கருதினர். இதற்குமேலாகத், தென்னாட்டுக் கோவில்களில் அண்மைக்காலம் வரை வேதாந்திகள் நுழையாமல் இருந்தனர் என்பதனையும் நாம் மறந்துவிட முடியாது[22]. இவ்வைதிகக் குருமாருக்குத் தமிழகத்துச் சைவரும், சைவ சித்தாந்திகளும்கூட ஆதரவளித்தார்களில்லை. தமிழ் வேந்தர்களும், பிறரும் பழைய தமிழ்ப் பூசகராகிய, அந்தணர்களையும், பார்ப்பார்களையும் நீக்கிவிட்டு, வைதீகப் பிராமணர்களைப் பூசகராக அமர்த்திய சூழ்நிலையில், இவர்கள் எதிர்ப்பு இயல்பானதேயாம். இப்பகைமையின் எதிரொலிகளைக் கீழ்வரும் திருமந்திரப் பாடல்களிலிருந்து நாம் ஓரளவிற்கு உணர்ந்து கொள்ளலாம்.

பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றன்னை யர்ச்சித்தால்
பேர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாமென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்து ரைத்தானே

(திருமந்திரம் 519)

சத்திய மின்றித் தனிஞானந் தானின்றி
ஒத்தவிடயம் விட்டோடு முணர்வின்றி
பத்தியுமின்றிப் பரனுண்மை யின்றியூண்
பித்தேறுமுடர் பிராமணர் தாமன்றே

(திருமந்திரம் 231)

நாலுஞ் சிகையும் நுவலிற் பிரமமோ
நூலது கார்ப்பாச நுண்சிகை கேசமா
நூலது வேதாந்த நுண்சிகை ஞானமா
நூலிடை யந்தணர் காண நுவலினே.

(திருமந்திரம் 230)

வேறோர் சமயங்களில்,

''சிவமாதல் வேதாந்த சித்தாந்தமாகும்'' என்றும்
''வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மையொன்
றாக முடிந்த அருஞ்சுத்த சைவமே''

(திருமந்திரம்) என்றும்

''ஆரிய முந்தமி ழும்உட னேசொலிக்
காரிகையார்க்குங் கருணைசெய் தானே''

(திருமந்திரம்) என்றும்

என வடமொழி, தமிழ்மொழி நூற்தத்துவங்களை நிலை கண்டுணர்ந்து சமரசம் காணும் திருமூலரே, மேற்காட்டிய பாடல் களில் வைதிகக் குருமாரின் பூசை முறைகளை விரும்பினாரில்லை என்பதனை யுணர்த்தினர் என்பதும் தெளிவாம். மற்று, நக்கீரர் தமது கோபப் பிரசாதத்தில் வடமொழிக்கெதிராக "ஆரியப் புத்தகப் பேய் கொண்டு புலம்பிற்று" என்று கூறுவதனையும்,

ஆரியநன்று தமிழ்தீதென வுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் - சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனா ராணையால்
செந்தமிழே தீர்க்க சுவாகா

எனக்கூறும் வெண்பாவினையும் (தொல்காப்பியம் பொருள் 490) ஒப்பிட்டு நோக்கையில் ஆரம்ப கட்டத்தில் வடமொழிப் பிரமாணருக்குத் தமிழகத்தில் இருந்த எதிர்ப்புக்களை



ஓரளவிற்காவது நாம் மதிப்பிடலாம். இந்த எதிர்ப்புப் பிற்காலம் வரையும் நீடித்திருந்தமைக்கு வரலாற்றாதாரங்கள் உள. தென்னாட்டுக் கோவில் நிருவாகங்கள் வைதீகப் பிராமணர் கைகளுக்கு மாறவே, அவர்கள் பழைய பார்ப்பாரையும், அந்தணரையும் கோவில் மடங்களிற் தங்குவதற்கு அருகதை யற்றவர்கள் எனத் தடைவிதிக்கலாயினர். அதனாற் தமிழ்த் துறவிகள் காடுகளிலுள்ள குகைகளிற் தஞ்சமடைந்தனரெனவும், அதனையும் விரும்பாத வைதிகக் குருமார் மன்னர் ஆதரவுபெற்று, அக்குகைகளையும் இடிப்பித்தனர் எனவும் தெரிகின்றது. இச்சம்பவத்தையே "குகை இடிகலகம்" எனக் குலோத்துங்கன் IIIன் கல்வெட்டுக்கள் குறிப்பிடலாயின.

## தேவாரவாசிரியர்கள் :

இத்தகைய பின்னணிகளினூடாகச் சைவமும், சைவ சித்தாந்தக் கோட்பாடுகளும் தமிழ்நாட்டில் வளர்ந்து வருகையில் உதித்தவர்களே சமரசச் செல்வர்களாகிய தேவாரவாசிரியர்கள். இவர்கள் இறைவன் பெயராற் சமயப் பூசல்கள் மக்கள் மத்தியில் ஏற்படுவதை விரும்பவில்லை. அதனோடு "நாம் காண்கின்ற உலகமே உண்மை அதனைக் காக்கின்ற இறைவன் என்று எவருமில்லை" என்று நாத்திகம் பேசி நாத்தழும்பிய ஜைனர், பௌத்தர்களின் மதப்பிரசாரங்களுக்கும் முகங்கொடுக்க வேண்டியவர்களாக இருந்தார்கள். எனவே வடமொழி, தென்மொழி இரண்டிற்கும் இறைவன் பொதுவானவன் என்ற தத்துவத்தினைச் சைவர்களிடையே புகட்டும் முயற்சியில் கவனம் செலுத்தினர். எனவே திருநாவுக்கரசர் "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" "செந்தமிழோடு ஆரியனைச் சீரியானை" "ஆரியந்

தமிழோடிசையானவன்" என்று எடுத்துரைத்து, வடமொழியினருக்கும், தமிழ்மொழியினருக்குமிடையேயிருந்த மொழிவாரியான காழ்ப்புணர்வைக்களைய முனைவதோடு "பல்வேறு சமயங்கள் கருதியானை" "கொண்ட சமயத்தார் தேவனாக" "ஆறொன்றியசம யங்களின் அவ்வவர்க்கப் பொருள்கள்" என்றும், இறைவன் எல்லாச் சமயங்களுக்கும் பொதுவானவன் என்ற கோட்பாட்டையும் நிறுவிச், சமரசச் சன்மார்க்கத்தை உருவாக்கலானார். இவ்விதமே திருஞானசம்பந்தரும் "தமிழ்ச் சொலும் வடசொலுந் தாணிழற்சேர" "ஆரியத்தோடு செந்தமிழ்ப் பயன் அறிகிலா" என்றும் மொழிகளுக்கிடையே ஏற்பட்ட காழ்ப்புணர்ச்சியைச் சமரசப்படுத்துவதோடு "உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனி பேதம் நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான்" என்பதனால் இறைவன் எல்லாச் சமயங்களோடு மட்டுமன்றி, எல்லா உயிர்களுடனும் ஒன்றாய், உடனாய், வேறாய் நின்று இயக்குவன் என்ற சைவசித்தாந்தக் கோட்பாட்டின் உண்மை நெறிகளை அறிவுறுத்தினர். எனவே இக்காலம் முதலாக வடமொழியினரும் சைவசித்தாந்த ஆய்வுகளில் ஈடுபட்டுச் சைவசித்தாந்த ஆகமங்களைப் பின்பற்றிச் சைவசித்தாந்த நூல்களை வடமொழியிலும் எழுதலாயினர் எனிற் தவறாகாது.

எனினும் சிலர் சைவசித்தாந்த நெறியினை எடுத்துக் கூறும் முதல் நூல்கள் வடமொழியில் அட்டாதசவித்தையும், தமிழிற் தேவாரத் திருமுறைகளும் பிறவுமாம், எனச் சைவசித்தாந்த நெறியின் காலத்தினைப் பின்தள்ளி நோக்குவர். சைவசித்தாந்த



நெறிநூல்களின் பழைமைபற்றி மேலே ஆராய்ந்து காட்டியிருந்தோம். அவை போதுமான விளக்கத்தை வரலாற்றடிப் படையிற் தரக்கூடியனவாம். எனினும் தேவார ஆசிரியர்கள் காலம் நாத்திகமதங்கள் தலையெடுத்த காலமாகையால், அக்காலத்தில் மனத்திற் பதிக்கப்பெற்ற சைன, பௌத்த மத நாத்திகக் கருத்துக்களை வேரோடு களைந்து, வேதாகமங்களின் விழுப்பொருள்களைச் சத்நிபாதர்க்கு மட்டுமன்றி, உலகோரும் உணரும் வகையில் எளிமையான பத்திச்சுவைமிக்க பாடல்களில் வடித்துக் கொடுக்கவேண்டிய கடன் அவர்களுக்கிருந்தது. எனவே முப்பொருள் உண்மைகளைத் (பதி, பசு, பாசம்) தத்தம் அனுபவ அடிப்படையில் எடுத்து விளக்கி, யாவற்றுக்கும் மேலானவனான இறைவன், எவ்வாறு பிரபஞ்ச இயக்கத்தில் ஒன்றாய், உடனாய், வேறாய் நிற்கின்றனன் என்பதனையும் தெளிவுபடுத்தினர். தமது இறையனுபவங்களை ஆங்காங்கே தம் பாசுரங்களிற் சுட்டியதோடு, உயிர்கள் யாவும் அவ்வழிகளில் நின்று உய்ய வேண்டுமென்பதனையும் அறிவுறுத்தினர்.

"திறம் பயனுறும் பொருள் தெரிந்துணரு நால்வர்க்
கறம்பய னுரைத்தனை" (திருஞானசம்பந்தர்)

"பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப் பல்
லுலகினி லுயிர் வாழ்க்கை
கண்ட நாதர்" (திருஞானசம்பந்தர்)

..............."சைவவேடத் தாளிணைத்தைம் புலனும்
அழிந்த சிந்தை அந்தணாளர்க் கறம் பொருளின்பம் வீடு
மொழிந்த வாயான்" (சம்பந்தர்)
"திறங்கொண்ட அடியார் மேல் தீவினை நோய் வாராமே

**அறங்கொண்ட சிவதருமம் உரைத்த பிரான்" (சம்பந்தர்)**
**"தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்"**
**(சம்பந்தர்)**

**ஆலின்கீழ் அறங்க ளெல்லாம் அன்றவர்க் கருளிச்செய்து**
**நூலின்கீழ் அவர்கட்கெல்லாம் நுண்பொருளாகி நின்று**
**(அப்பர்)**

என்று தேவாரவாசிரியர்கள் பண்டைய தமிழ்நான் மறைகளிற் கூறிய அறம், பொருள், இன்பம், வீடு எனும் நாற் பொருள்களை இறைவனே தொகுத்துப், பின் மெய்ந்நெறி கூறும் ஆகமங்களையும் வகுத்தவன் என்றும் கூறி, உரையெனும் அளவைகொண்டு இறையுண்மையை உணர்த்துவர். மேலும் இறைவன் வியாபகத் தினால் உலகுயிர்கள் அனைத்தோனாகவும், பொருட்டன்மையால் அவற்றின் வேறாகியும், செலுத்தும் தன்மையால் உடனுமாயும் நின்று இயக்குபவன் என்ற சைவ சித்தாந்தக் கோட்பாட்டினைச் சம்பந்தர், "ஒன்றாய்... வேறாய் உடனானானிடம்" எனவும், "உயிர்க் குயிராய் அங்கங்கே நின்றான்" எனவும் எளிமையாக உரைத் தருளுவர். அப்பர் இறைவன் உலகு, உயிர்கள் அனைத்திலும் கலந்து தானேயாய் அபேதமற்றிருக்கும் நிலையை "எல்லாஞ் சிவனென நின்றாய் போற்றி" எனத் துதிப்பர். அபேதத்தன்மை என்பது இறைவனின் இயக்கங்களில் ஒன்றேயாம் என்பதனைத், தேவாரவாசிரியர்கள் வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம் எனும் வகையிற் தெளிவுபடுத்தி, "ஒன்றே உண்மைப்பொருள்" என்ற வேதாந்தக் கோட்பாட்டை அலசி ஆராய்வர்.

**விறகிற் றீயினன் பாலிற் படு நெய்போல்**
**மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்**



**உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடைய முன்நிற்குமே (அப்பர்)**

எனும் தேவாரத்தில் அப்பர் இறைவன் எல்லாமாகக் கலப்புற்றிருந்த நிலையிலும் தன்னையுள்குவார்க்கு வேறாய்த் தோன்றி அருளுவன் என்று இறைவனின் எல்லாம் கடந்த நிலையைப் போற்றுவர். வேதாந்திகள் இறைவனின் வியாபகத்தினாற் காண்பதெல்லாம், அவன் பிரதிபிம்பங்களே என்ற கருத்தினை மையமாகக்கொண்டே ஏகான்மா வாதத்தை (ஒன்றே உண்மைப்பொருள்) உருவாக்கினர். ஆனால் சைவ சித்தாந்திகளுக்கு இறைவனின் இயக்கத்தில் இது ஒரு கூறேயாம். இறைவன் உலகுடனும், உயிர்களுடனும் நீக்கமறக் கலந்திருக்கின்றனன் எனில், எவ்விதம் மூன்று பொருள்கள் கலந்திருக்கின்றன என்ற வினா எழும்புகின்றது. ஏனெனில் உருவுடன்கூடிய இரு பொருள்கள் கலந்திருப்பதை நாம் கண்டதில்லை. ஆனால் திரவப் பொருள்களான பால், நீர் முதலானவை, ஐம்பூதங்களான காற்று, ஆகாயம், நீர் என்பவை வியாபித்துக் கலந்திருப்பதை நாம் காண்கின்றோம். இத்தகைய பரந்து வியாபித்தலாகிய சிறப்புக் குணத்தைக் கொண்டவன் இறைவன். ஆனால் உயிருடைய வியாபகம் சிறியது. அது "வசித்திட வரும் வியாபி". ஆனால் இறைவனோ எங்கும் கலப்புற்று நின்று வியாபிப்பவன். அதனாலே ஒன்றாகி நிற்பன். ஆனால் அவன் பொருட்தன்மையால் வேறுபட்டவன் ஆவன். அதனாலே அவன் முற்றறிவினன், தன்வயத்தன், தூயவுடம்பினன், இயற்கை யறிவினன், பாசப்பிணிப்பற்றவன், பேரருளுடையவன், வரம்பற்ற இன்பமுடையவன், முடிவில்லா ஆற்றலுடையவன் முதலான எண்குணங்களையுடையவன் என்று போற்றப்படுகின்றனன்.

இவ்வெண்குணங்களைக்கொண்ட இறைவனை அப்பர் "எண்குணத்தார்" என்பதோடு தன் சிந்தையிற் தெளிந்த பாமர மக்கள் மொழியில்,

**ஏயவன் காண் எல்லார்க்கும் இயல்பா னான்காண்**
**இன்பன் காண் துன்பங்கள் இல்லா தான்காண்**
**தாயவன் காண் உலகுக்கோர் தன்னொப் பில்லாத்**
**தத்துவன் காண் உத்தமன்காண் தானே யெங்கும்**
**ஆயவன் காண் அண்டத்துக் கப்பா லான் காண்**

எனவும் விபரிப்பர்.

உயிர்களோவெனில் இக்குணங்களற்றுப் பாசங்களாற் (ஆணவம், கன்மம், சத்தமாயை, அசுத்தமாயை) கட்டற் பெற்றுச் சிற்றறிவுடையனவாக இருக்கின்றன. அனாதியாகவே ஆணவமல மறைப்பினால் உயிர்கள் அணுவாக்கப்பட்டு, அறியாமை என்ற இருளிற் கிடக்கின்றன. உயிர்களின் இந்நிலைக்கிரங்கியே, கருணைவயப்பட்ட இறைவன் உயிர்களின் ஈடேற்றத்தின் பொருட்டு ஏழு உலகங்களையும், தனு, கரண, புவன போகங்களையும் கொடுத்து, உயிரின் அறிவிற்கு அறிவாக உடனிருந்து இயக்குகின்றனன். இதனைத் திருஞானசம்பந்தர்.

**உரைசேரும் எண்பத்து நான்குநூறாயிரமாம்**
**யோனிபேதம்**
**நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராம்**
**அங்கங்கே நின்றான்**

என்றும்,

**..........தேடுவார் தேடச்செய்தே சேர்ந்தவன்**

என்றும்,



**விளையாததொர் பரிசில்வரு பசுபாசவேதனை யொண்**
**தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்பாம்**

என்றும்,

**நினைத்துத் தொழுவார் பாவந்தீர்க்கும் நிமலர்**

என்றும் எடுத்தோதுவர். திருநாவுக்கரசர்

**ஆண்டு லகே ழனைத்தினையும் வைத்தார் தாமே**
**அங்கங்கே சிவமாகி நின்றார் தாமே**

என்றும்,

**இன்ன வுருவென்றறி வொணாதான் காண்**
**ஏழ்கடலும் ஏழுலகு மாயினான் காண்**

என்றும்,

**புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி**
**போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி**
**பல்லுயிராய்ப் பார்தோறு நின்றாய் போற்றி**
**பற்றியுலகை விடாதாய் போற்றி**
**கல்லுயிராய் நின்ற கனலே போற்றி**

என்றும்,

**ஊனாகி உயிராகி அதனுள் நின்ற**
**உணர்வாகிப் பிறவனைத்தும் நீயாய்நின்றாய்**
**நானேதும் அறியாமே என்னுள் வந்து**
**நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்**

என்றும்,

**எங்கேனும் இருந்துன் அடியேன் உனைநினைந்தால்**
**அங்கே வந்தென்னொடும் உடனாகி நின்றருளி**

என்றும்

அவ்வினைக் கிவ்வினை யாமென்றும் சொல்லும்
அஃதறிவீர்

என்றும்,

உற்ற வர்தம் முறுநோய் களைவர்

என்றும்,

தம் பழுத்த அனுபவங்களைச் சித்தாந்தமாக வடித்தெடுத்து உள்ளனர்.

சுந்தரர்

உன்னைப் போல்என்னைப் பாவிக்கமாட்டேன்
சுழித்த லைப்பட்ட நீரது போலச்
சுழல்கின் றேன்சுழல் கின்றதென் னுள்ளம்
கழித்த லைப்பட்ட நாயது போல
ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை
ஒழித்து நீயரு ளாயின செய்வாய்

என்று சித்தாந்த உண்மை நெறிப்படி சிவமாகத்தன்னைப் பாவனைசெய்து நிற்கத், தனது தகுதியின்மையை இறைவனுக் கெடுத்துக்கூறி, அவனருளைவேண்டி நிற்கின்றனர். சித்தாந்த தத்துவத்தைத், தத்தம் பக்குவம், அனுபவம் என்பவற்கேற்ற வகையிலேயே தேவாரவாசிரியர்கள் எடுத்துரைக்கின்ற நிலைகளை, நாம் தேவாரத் திருமுறைகளிற் காணமுடிகின்றது. இனி இறைவன் இவ்வுலகுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டு நிற்கும் நிலையை, அதாவது இவ்வண்ணத்தன் என்று காட்டமுடியாத அவனது சுட்டிறந்த தன்மைகளைத் தேவாரங்களும் "இதுவன்று



இதுவன்று" என்று மறுத்துரைக்கும் பாணியிலேயே எடுத்தியம்பு கின்றன. இதற்கெடுத்துக்காட்டாகத் திருநாவுக்கரசர் பாசுர மொன்றை இங்கு நோக்கல் உகந்ததாம்.

ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன்
ஓரூரன் அல்லன்ஓர் உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே

என்று இறைவன் சுட்டிறந்தவனாயினும், அவன் அருளால் அவனைக் கண்டுகளிக்கலாம் என்பதனையே இப்பாசுரம் உணர்த்தி நிற்கின்றது.

மற்றுச் சம்பந்தர் இறைவனை நோக்கி

"மாமாயாநீ மாமாயா"

என்றும்,

"முன்னுயிர்த்தோற்றமும் இறுதியுமாகி"

என்றும்,

"விரிந்தினை குவிந்தனை"

என்றும், விழிக்கையில் இறைவனே உலகமாகவும், உயிர்களாகவும் விரிந்தனன் என்று கருதினாரல்லர். பிரபஞ்சமெல்லாம் தோற்றுவித்து ஒடுக்குதலைப் புரிகின்ற இறைவன், ஒடுக்கத்திற் காரணமாயையில் ஒடுங்கிட சட உலகையும், அறிவு மழுங்கிநின்ற

உயிர்களையும், பின் தன் சக்தியினால் மீளத்தோற்றுவிப்பவன் என்பதனையே இவை உணர்த்தலாயின. மேலும் உயிர்களுக்கு இவ்வுடல் கருவிகள் தோற்றுவிக்கப்படுங்காலத்து, அவற்றின் அறிவு மழுங்கி நிற்பதனையும் இது உணர்த்தி நிற்கும். கடவுளின் இயக்கமின்றி உலகம் தோன்றாதோ எனிற் தோன்றாது. எவ்வாறெனில் மண்ணின் ஆதாரமின்றி சடமாகிய மாயையினின்று சட உலகம் தானே தோன்றாது என்பதாம். மாயையாகிய முதற் காரணத்தை, நிமித்த காரணனாகிய இறைவன் தன் சக்தியைத் துணைக்கொண்டு தொழிற்படுத்திக் காரியப் பிரபஞ்சமாக்காவிடில், இவற்றுக்குத் தோற்றக்கேடுகளும் இலவே. ஆகையினால் ஐந்தொழில்களை, உயிர்கள் மீது கொண்ட கருணை மேலீட்டாற் செய்கின்ற இறைவனிடத்தே இவ்வுலகம் தோன்றி, ஒடுங்குகின்றதெனத் தேவாரங்கள் ஏற்றிக் குறிப்பிடுவதிற் தவறில்லையாம்.

மேலும் தேவாரவாசிரியர்கள் சைவசித்தாந்த உண்மை களைத் தெளிவுபடுத்துகையிற், திருமூலர் மரபினைப் பின்பற்றி வேதாந்தக் கோட்பாட்டினைச் சைவ சித்தாந்தத்தின் முதற்படியென, விதந்தோதியுள்ளமையையும் நாம் அவதானிக்க முடிகின்றது.

திருமூலர் வேதாந்தத்திற்கும் சித்தாந்தத்திற்குமிடையேயுள்ள உட்தொடர்பைக் குறிப்பிடுகையிற்

**சிவனைப் பரமனுட் சீவனுட்காட்டும்**
**அவமற்ற வேதாந்த சித்தாந்தமானான்**
**(திருமந்திரம் 2356)**

என்றும்,



**''சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்''**
**(திருமந்திரம் 2354)**

என்றும்,

**''வேதாந்தஞ் சித்தாந்த வேறிலா முத்திரை''**
**(திருமந்திரம் 2347)**

என்று குறிப்பிடுவர். மேலும் வேதாந்தக் கோட்பாட்டினை தோற்றுவித்த உபநிடதங்ளையும், சைவ சித்தாந்த கோட்பாட்டினைத் தோற்றுவித்த முதல் நூலாகிய ஆகமங்களையும்

**வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன் நூல்**
**பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன**
**நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்**
**பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே**
**(திருமந்திரம் 2358)**

எனக் குறிப்பிடுவர்.

மேலும், திருமூலர் வழிநின்ற தேவார ஆசிரியர் வடமொழி வேதங்கள் தென்னகத்திற்கும் ஏற்றன என்று கூறிச் சைவசமய வளர்ச்சியிற் சமரசம் காண முயல்வதனை நாம் காண முடிகின்றது.

**''தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம்**
**வகுத்தவன்'' (சம்பந்தர்)**

என்றும்,

**''வேதவேள்வியை நிந்தனை செய்துழல்**
**ஆதம் இல்லி அமணர்'' (சம்பந்தர்)**

என்றும்,

**........"தொன்மறை யாறங்கம்**
**ஆய்ந்தவன்" (சம்பந்தர்)**

என்றும்,

**"வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாக"**
**(சம்பந்தர்)**

என்றும், சம்பந்தர் சமரசம் காண்பர்.

**"வேத விழுப்பொருள்" (அப்பர்)**

என்றும்,

**"இருக்கு நான்மறை ஈசனை யேதொழும்**
**கருத்தி னைநினை யார்கன் மனவரே" (அப்பர்)**

என்றும்,

**"இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்**
**இளங்கோயில்" (அப்பர்)**

என்றும், திருநாவுக்கரசர், தென்னாட்டில் இக்காலத்தில் ஆதிக்கம் செலுத்தியிருந்த வைதிகவழிபாட்டு முறைகளைப் பௌத்தம், ஜைனம் முதலான மதங்களை மறுக்கும் வகையில் விதந்தோதுகின்றனர். இது சைவசித்தாந்த வளர்ச்சியிற் சமரசம் காணும் முயற்சியாக அமைந்திருந்தது எனில் மிகையாகாது. இவ்வகையிலேயே தேவாரங்களை வேதாந்த சாரம் என்பர் காசிவாசி செந்திநாதையர்[23]. சைவசித்தாந்தக் கோட்பாட்டைத் தெளிவாக்கையில், வேதாந்தத்தை எவ்விதம் இவர்கள் கையாண்டனர் என்பதனை ஏற்கனவே விபரித்திருந்தோம்.

வேதாந்தமும் சித்தாந்தமும் இவ்வாறு சமரசப்படுத்தப்பட்ட நிலையிற் பிற்காலச் சைவசித்தாந்த நூல்கள் யாவும், வேதாந்தத்தைக் கருத்திற்கொண்டே எழுவதாயின. இவ்வகையிற் பிரம்மசூத்திரத்திற்கு ஸ்ரீ நீலகண்டர் வடமொழியில் எழுதிய உரை



சிவாத்துவித சைவபாடியமாம். இவர் தம் உரையில் "வேதத்திற்கும் சிவாகமத்திற்கும் வேற்றுமை கண்டிலம்" என்கின்றனர். மேலும் இவர் தம் நீலகண்ட பாடியத்தில் வேத, சிவாகமங்களிற் பஞ்சப்பிரமம், பிரணவம், திருவைந்தெழுத்து பிரசாத முதலிய மந்திரங்களும், பதி, பசு, பாசம் முதலிய மெய்ப்பொருள்கள் வீபூதி, உருத்திராக்கம், சிவலிங்கபூசை முதலானவையும் ஒப்பக் காணலால் இவையிரண்டும் ஒன்றேயாம் என்பர். வேதாந்தம் எனும்பொழுது சைவசித்தாந்தக் கருத்துக்கள் யாவற்றையும் ஒரே உபநிடதத்திற் காண்பதரிது. இருக்கு முதலான வேதங்களில் ஒவ்வொரு மகாவாக்கியமே காணப்படுதல்போல, உபநிடதங்களில் ஒவ்வோர் தத்துவங்களையே காணக்கூடியதாக உள்ளது. இவ்வகையிற் சுபால முதலிய உபநிடதங்களில் உலகம் தோன்றியொடுங்கும் முறையைக்கூறி, இதற்குக் கருத்தா ஒருவன் வேண்டும் என்ற கருத்துக்கள் மட்டுமே உள. அதர்வசிகை, அதர்வசிரஸ், சுவேதாசுவரம், கைவல்லியம் முதலான உபநிடதங்களில் உயிர்களின் முத்திநிலைபற்றியும், அதற்குரிய சாதனைகளும், பயனும் கூறப்பட்டுள்ளன. எனவே இவற்றின் பொருளைச் சிவாகமவழி நோக்குகையில், தூலாருந்ததி முறைப்படி நோக்கவேண்டுமென்பர் மாதவச் சிவஞான முனிவர். வடமொழியிலுள்ள சிவாகமங்களிலும் பௌட்கரம், மிருகேந்திரம், மதங்கம் முதலிய சிவாகமங்கள் உயிர்கள் மலமாயைகளினாற் கட்டுப்பட்ட நிலையினையும் சர்வஞ்ஞானோத்தரம் முதலிய சிவாகமங்கள் உயிர்கள் முத்தியில் நிற்கின்ற நிலைகள் பற்றியும், விதந்தோதுவனவாம். இவைதவிரக் காமிகம், காரணம் முதலான ஆகமங்கள் சிவன்கோவில்கள் எடுக்கும் முறைகள், அவற்றின் வழிபாட்டு முறைகள், திருவிழாத்திறன்கள்பற்றி விளக்குவனவேயன்றி வேதாந்த சித்தாந்த நெறிகள்பற்றி

எடுத்துரைப்பனவல்ல. எனவே காமிகம், காரணம் முதலியன பழைய சிற்ப நூல்களின் மொழிபெயர்ப்பென்றும், பௌட்கரம் முதலானவையே பழைய தமிழாகமங்களின் மொழிபெயர்ப் பென்றும், அதனால் மாணிக்கவாசகர், மணிமேகலையாசிரியர், திருமூலர் முதலானோர் குறிப்பிட்டு அருளிய பழைய ஆகமங்களுக்கும், இவற்றுக்குமிடையே வேறுபாடுகள் உள என்பர் மறைமலையடிகள்.

## ஒன்பதாம், பதினோராம், பன்னிரண்டாம் திருமுறைகள்

இதுவரை நாமாராய்ந்த தேவாரங்கள் (சம்பந்தர் முதல் மூன்று திருமுறைகள், திருநாவுக்கரசர் அடுத்து வரும் திருமறைகள், சுந்தரர் ஏழாந்திருமுறை இவற்றை அடங்கண்முறை எனவும் அழைப்பர்), திருவாசகம், திருக்கோவையார் (எட்டாம் திருமுறை) திருமந்திரம் (பத்தாம் திருமுறை) என்பவற்றோடு, ஒன்பதாம், பதினோராம், பன்னிரண்டாம் திருமுறைகளும் சைவத்தையும், சைவ சித்தாந்தத்தையும் புகழ்ந்தோதும் நூல்களாவன. எனவே அவை பற்றியும் சுருக்கமாக இங்கு குறிப்பிடல் அவசியமாகும்.

ஒன்பதாம் திருமுறையின்கண் கி.பி. 9-12 ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஒன்பது சிவனடியார் பாடிய திருவிசைப்பா - திருப்பல்லாண்டு என்பன தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றை இத்திருமுறைகளுக்குட் தொகுத்தவர்கள் நம்பியாண்டார் நம்பிக்கும், சேக்கிழாருக்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த சைவ அறிஞர்கள் ஆவர். இச்செய்யுட் திரட்டினைப் பாடிய சைவ அடியார்கள், திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர்,



வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்போராவர். "திருநாமம் அஞ்செழுத்தும் செப்பல் வேண்டும், தீவண்ணர் திறம் ஒருகால் பேசவேண்டும், பேசும் நாளே பிறந்து பயன்பெற்ற நாளாகும்" என்ற கோட்பாட்டிற் கிணங்க, இச்செய்யுட்திரட்டில் இறை பெருமை, உயிர்ச்சிறுமை, உயிர் அறிவுமறைப்பு என்பவற்றின் இயல்புகள் எடுத்துரைக்கப் பட்டுள்ளன.

பதினோராம் திருமுறையிற் பன்னிரண்டு சிவனடியார்கள் உள்ளம் கரைந்து, பக்திபரவசத்துடன் பாடிய பாடல்களை நாற்பது சிறு நூல்களாகத் தொகுத்துவைக்கப்பட்டுள்ளது. திருவால வாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெருமான் நாயனார், நக்கீரர், கல்லாடதேவநாயனார், கபிலதேவர், பாசாணதேவர், இளம்பெருமானடிகள், அதிராடிகள், பட்டினத்துப்பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி (இவரே முதல் ஏழுதிருமுறைகளையும் தொகுத்தவர்) என்போரே இச்செய்யுட் திரட்டுக்களை யாத்த சிவனடியார்கள் ஆவர். இவர்களுட் பட்டினத்துப் பிள்ளையார் (கி.பி.10ம் நூற்றாண்டு) இயற்றிய கோயில் நான்மணிமாலை, திருக்கழுமலமும் மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவெற்றியூர் ஒருபா ஒருபஃது என்பன அடங்குவன. மேலும் கடைச்சங்கப் புலவராகிய நக்கீரருடைய கயிலையாதி காளத்திபாதித் திருவந்தாதி முதலான பத்துப் பிரபந்தங்களும் வீட்டுப் பேறாகிய உறுதிப்பயனைக் கூறும் தெய்வநூல்களாம். மற்று நம்பியாண்டார் நம்பியின் (கி.பி.985-1014) திருத் தொண்டர் திருவந்தாதி

"அன்பரோடு மருவலும் ஆலயந்தானும்
அரனெனத் தொழுதலுமே"

என்பதற்கிணங்கச் சிவனடியார் பெருமைகளை எடுத்துரைப்பதாகும். இவ்வாறு மெய்யடியார் வரலாற்றை நம்பியாண்டார் நம்பி தொகுத்தளித்தது மூலம் திருவடியார், திருக்கோலம், திருக்கோவில், திருமணி, திருவைந்தெழுத்து, திருக்கோபுரம், யாவும் சிவனெனத் தேறிவழிபடத்தக்கன என்று எடுத்து உணர்த்தினர். மூன்றாம் சிம்மவர்மன் (கி.பி.550 - 575) என்று கருதப்படுகின்ற ஐயடிகள் காடவர்கோன், சிவதலங்களைத் தரிசித்துத் தலத்திற்கொரு வெண்பாவாகப் பாடியிருந்தனர். இப்பாடல்களின் தொகுப்பே "சேத்திரவெண்பாவாகும்". காலத்தால் அழிந்தனபோக எஞ்சியுள்ளவை 24 வெண்பாக்களேயாம். இவ்வெண்பாக்களிலிருந்து இக்காலத்துச் சிவதலங்களாக விளங்கிய தலங்களையும் நாம் அறியக்கூடியதாக இருக்கின்றது. இவ்வாறே இத்திருமுறையிற் சேர்க்கப்பட்ட மற்ற அடியார்கள் பாசுரங்களும் சிவன் பெருமை, சிவனடியார் பெருமை, சைவசித்தாந்தத்திறன் என்பவற்றை அனுபவவாயிலாக எடுத்துரைப்பனவாம்.

பன்னிரண்டாம் திருமுறையிற் சேக்கிழாருடைய பெரிய புராணம் இடம்பெறும். இது சுந்தரமூர்த்திநாயனாருடைய திருத்தொண்டத்தொகையையும், நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியையும், மற்றும் கல்வெட்டுகளையும் ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்ட நூலாகும். (திருவதிகை வீரட்டானத்துள் வாகிசுவரம் என்ற பெயராற் திருநாவுக் கரசருக்கும், குஹுூர்க் கோவிலில் நம்பி ஆரூரர்க்கும், தஞ்சைப்



பெரிய கோவிலிற் நம்பி ஆரூரர்க்கும், தஞ்சைப் பெரிய கோவிலிற் சண்டீசரருக்கும் தனிக்கோவில்கள் இருந்தன என்பது கல்வெட்டுக்களால் அறியப்பட்டனவாம். இதுபோன்று நாயன்மார்க்கு எடுத்த விழாக்கள், பூசைகள், மற்றும் கோவில்களிற் தேவாரம் ஓதுதல் என்பனவும் கல்வெட்டுக்களால் அறியப் பட்டிருந்தன), அதனோடு கோவில்களில் நாயன்மார் திருமேனிகள், நாயன்மார் வரலாற்றைச் சித்தரிக்கும் ஓவியங்கள், சைவ மரபுகள் முதலானவற்றையும் துணையாகக்கொண்டு தொகுக்கப்பட்ட நூலாகும். சேக்கிழார் அநபாயச் சோழன் (கி.பி.1113-1150 இவனைக் குலோத்துங்கன் II என அடையாளம் காண்பர்) வேண்டுதற்கிணங்க, இந்நூலை எழுதினார் என்று மரபுகள் தெரிவிக்கின்றன. சிவனருளிற் திளைத்த சிவனடியார்களின் வரலாற்றைத் தமிழிற் தொகுத்தும், விரித்தும் கூறுவது இந்நூலேயாம். சுந்தரமூர்த்தி நாயனார் தனியடியார் அறுபத்துமூவருடன், ஒன்பது தொகையடியார் கூட்டங்களையும் பாடியிருந்தனர். இவரைப் பின்பற்றி நம்பியாண்டார் நம்பியும், பின் சேக்கிழாரும் விரிவாக எடுத்துரைக்கலாயினர் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. எனினும் தென்னகத்துச் சைவசித்தாந்த மரபுகளையும், மற்றுச் சிவாகமங்களை இறைவன் தோற்றியருளிய முறைகளையும் எடுத்தியம்பி, ஞான நிலையில் நின்றவாரகிய மாணிக்கவாசகரைக் கி.பி.11ம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகிய சேக்கிழார் போற்றவில்லையே! அதன் காரணங்கள் மாணிக்க வாசகர் நுல்கள்பற்றி ஆராய்ந்தவிடத்துக் குறித்துள்ளோம். இவர்கள் குறிப்பிட்ட தொகையடியார்கள் தில்லைவாழ்ந்தணர், பொய்யடிமையில்லாத புலவர், பத்தராய்ப் பணிவார், பரமனையே

பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார், திருவாரூர்ப் பிறந்தார், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார் ஆகியோராவார். இவர்களுள் ஆதிசைவர் முப்போதும் திருமேனி தீண்டுவார், தில்லை வாழந்தணர் ஆகியோர் அந்தணர் மரபினர். மற்ற அடியார்கள் வெவ்வேறு சாதியிலும், குலங்களினின்றும் தோன்றி, வெவ்வேறு வகையான வழிபாட்டு நெறிகளையும், அன்பையும் இறைவன்மீது செலுத்தியவர்களாவர். இவ்வாறு சேக்கிழர் நாயன்மார் வரலாறுகளை எடுத்துரைக்கையிற், சைவசித்தாந்த நெறிகளையும் கூறியருளுவர். இறைவனை "அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்றபிரான்" (4163) என்றும், "தொல்லுலகம் முழுதும் அளித்தழித்தாக்கும் முதல்வர்" (3444) என்றும், "பாசவினைத் தொடக்கறுப்பார்" (3874) என்றும் "கருஞ்சுழியில் விழாமற் காப்பார்" (3863) என்றும், "ஐந்தெழுத்தும் பாடிய பொருளாய் உள்ளான்" (217) என்றும் கூறியருளுவர்.

## ஞானாமிர்தம் :

திருமூலர் தமது காலத்திற்கு முன்னிருந்த ஒன்பது ஆகமங்களின் வழிவந்து திருமந்திரம் என்று கூறியிருந்த விடத்தும், பிற்கால மரபுகள் திருமந்திரத்தைத் திருமுறை நூல்களுளடக்கித் தொகுத்துவிட்டன. எனவே இது தமிழ் மெய்கண்ட சாத்திரங்களுள் அடக்கப்படவில்லை என்பதனை நாம் கருத்திற் கொள்ளல் அவசியம். இதனைத் தொடர்ந்து வாகீசமுனிவரால் இயற்றப்பட்ட ஞானாமிர்தமும் மெய்கண்ட சாத்திரங்களுக்கு முற்பட்டதாம். இதன் காலத்தை மறைமலையடிகள் கி.பி.6ம் நூற்றாண்டென்பர்[24]. ஆனால் டி.பி.சித்தலிங்கையா இராஜராஜன் II (கி.பி.1163 - 78) கல்வெட்டொன்றைச் சான்றாகக் கொண்டு கி.பி.12ம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பர்[25]. ஞானாமிர்தத்திலேதான் சைவசித்தாந்த உண்மைகள் முதன் முதலாக அளவைமுகத்தாலும், தர்க்கரீதியாகவும், எடுத்துரைக்கப் பட்டுள்ளன. மெய்கண்டாரின் சிவஞானபோதத்திற்கு சிற்றுரை, பேருரைகளை எழுதிய சிவஞானமுனிவர் ஞானாமிர்தத்தை மேற்கோளாகக் கொண்டு சிவஞானபோதத்தை விளக்கியருளுவர். எனவே தமிழில் இன்றுள்ள ஆகமங்களில் ஞானாமிர்தம் தலைசிறந்தது எனில் மிகையாகாது.



## மெய்கண்ட சாத்திரங்கள் :

இனிச் சிவாகமங்களின் தோற்ற, வளர்ச்சிகளிற் கருத்து வேறுபாடுகள் தென்னாட்டுச் சைவ உலகிற் தலையெடுத்திருந் திருப்பினும், கி.பி.12ம் 13ம் நூற்றாண்டுகளிற் தமிழ் மக்களின் தவப்பயனாக மெய்ஞ்ஞானிகள் பலர் தோன்றிச் சைவசித்தாந்த தத்துவங்களையெல்லாம் தொகுத்து, நிறைவுடைய மெய்கண்ட சாத்திரங்களாக வகுத்தருளினர். இவ்வாறு தோன்றிய பதினான்கு நூல்களே மெய்கண்ட சாத்திரங்கள் ஆவன. இவையாவும் தமிழில் ஒன்றன்பின் ஒன்றாக வகுத்தெடுக்கப்பட்டவையாம். இவையே இறுதியில் இந்திய இந்து தத்துவ உலகில் முடிந்த முடிபு களெனவும் ஏற்றுக்கொள்ளப்படலாயின. இந்த மெய்கண்ட சாத்திரங்களுற் காலத்தால் முற்பட்டவை திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் இயற்றிய திருவுந்தியார், மற்றும் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் எழுதிய திருக்களிற்றுப்பாடியார்

என்பனவாம். இவற்றுள் நாற்பது செய்யுள்களைக் கொண்ட திருக்களிற்றுப்பாடியார் திருவுந்தியாருக்கு உரைகூறும் வகையிலேயே அமைந்திருக்கின்றது என மெய்கண்ட சாத்திரங்களை ஆய்ந்தோர் கருதுவர். முதல் மெய்கண்டசாத்திரமாகிய திருவுந்தியாரிற் சைவ சித்தாந்த நெறிகள் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் எனும் நூல்கள் ஆராய்ந்த வைப்புமுறைப் படியன்றிப் புதிய பாணியில் அமைந்து இருப்பதனால், இதனை மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்றாகக் கொள்வது பொருந்தாது என்றும் கருதுவர். சிவஞான முனிவரும் இதனைத் தனியியல்புடைய சைவசித்தாந்த சாத்திரம் என்றே கருதுவர். திருக்களிற்றுப்பாடியார் சைவசித்தாந்த உண்மைகளை எடுத்துரைக்கும் முறைமையால், நாயன்மார் வரலாற்றையும், கூறி, இருக்கு முதலிய வேதங்களின் மகா வாக்கியங்களையும் ("இதுவெல்லாம் பிரமமே" "நீ அது ஆனாய்" "அது நான் ஆனேன்" "அது ஒன்றைத்தவிர வேறு எதுவும் இல்லை") சைவசித்தாந்த சிவோகம்பாவனையின்படி விளக்கம் கொடுக்கவும் முயன்றுள்ளது. மற்றுத் திருக்குறள்போன்ற பழந்தமிழ் இலக்கியக் கருத்துக் களையும், சைவசித்தாந்தத்தை விளக்க, எடுத்தாண்டுள்ளமை இந்நூலின் கண்ணுள்ள சிறப்பியல்புகளாம். எனினும் இந்நூலினை மெய்கண்ட சாத்திரங்களில் ஒன்றாக அறிஞர்கள் ஏற்றுக்கொள்ளாத விடத்து, இவர் தமது நூலைச் சிதம்பரத்தின் வாசலிலுள்ள முற்படியில் வைத்தாகவும், அப்பொழுது வாசற்படியின் பக்கத்திற், கல்லிற் செதுக்கப்பட்டிருந்த யானை ஒன்று அசைந்தெழுந்து இந்நூலினை எடுத்து நடராசப் பெருமானின் திருவடிகளில் வைத்ததாகவும் தெரிகின்றது. இந்த



வரலாற்றினடிப்படையிலேயே இந்நூல் திருக்களிற்றுப் பாடியார் எனும் பெயரையும் பெறலாயிற்று. எனினும் இவர்களைத் தொடர்ந்து வந்த மெய்கண்ட ஆசிரியர்களான உமாபதி சிவாசாரியார் முதலானோர், காலத்தான் முற்பட்ட இவ்விரு நூல்களையும் குறிப்பிட்டார்களில்லை. சந்தான வரலாறு கூறுவதின்படி, இவ்விரு உய்யவந்த தேவ நாயன்மாரும் விஞ்ஞானதேவர் சந்தானத்தைச் சேர்ந்தவர்களாவர். அதனாலேயே மெய்கண்டதேவர் சந்தானத்தார், இவர்களைக் குறிப்பிடாதுவிட்டனர் எனக்கருதின் தவறாகாது.

இனிச் சைவசித்தாந்திகளுடன் கருத்தொற்றுமையுடைய பிறரும் தமிழகத்திற் சிவவழிபாட்டைப் பேணியிருந்தனர் என்பது

...........

**உரிமையிற் றொழுவாருருத்திர பல்கணத்தார்**
**விரிசடை விரதிக ளந்தணர் சைவர் பாசுபதர் கபாலிகர்**
**தெருவினிற் பொலியுந் திருவாரூர் அம்மானே (அப்பர்)**

என அப்பர் எடுத்துரைப்பதிலிருந்து புலனாகக்கூடியது. எனினும் தென்னகத்தில் நாத்திகமதங்களின் வீழ்ச்சிக்குப் பின் இந்துமத தத்துவங்களின் ஆய்விற் சங்கரர் (கி.பி.788 - 820), இராமானுசர் (கி.பி.11ம் நூற்றாண்டு), மத்துவர் (கி.பி.13ம் நூற்றாண்டு), முதலானோர் வேதாந்த நூல்களின் தத்துவ உண்மைகளை முழுமையாகக் காணப்பெறாது மயர்வுற்ற காலையிற், சிவஞானபோதத்தை இறைவனின் திருவருள்கொண்டு, கண்டு தெளிந்தவர் மெய்கண்டார் ஆவர். இது சித்தாந்த நூலாயினும்,

வேதாந்த தத்துவ உலகிலேற்பட்ட தத்துவ மயக்கங்களை ஒழிக்க எழுந்த நூலெனக் கொள்வர் பெரியோர்.

வேதாந்திகளின் அத்துவிதம், துவிதம், விசிட்டாத்துவிதம் என்பன யாவும் சித்தாந்திகளுக்கும் ஏற்றதாம். எனவே இவற்றில் ஒன்றையொன்று தள்ளுவதென்பது, சித்தாந்தக் கோட்பாட்டிற்கு மறுதலையாம். எனவே வேதாந்த சித்தாந்தச் செல்வர்களான திருவள்ளுவர், மணிவாசகர், திருமூலர், தேவாரவாசியர்கள். வாகீசமுனிவர் முதலான பிறரும் நின்ற நெறிப்படி வேதாந்தத்தைச் சைவ சித்தாந்த வழிப்படி நெறிப்படுத்தியவர்களே மெய்கண்ட ஆசிரியர்களாவர். அதனால் மெய்கண்டார் வழிநின்ற அருணந்தி சிவாசாரியாரும், உமாபதி சிவாசாரியாரும் வேதநூல், சைவ நூலிரண்டே, மற்றவையெல்லாம் இவற்றின் விரிவே என்பர். இதனை அருணந்தி சிவாசாரியார் தமது வழிநூலாகிய சிவஞானசித்தியார் சுபக்கத்தில்.

வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதி லநாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்
நீதியினா லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ
நிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்

(செய் 267)

என்றும்,



இந்நெறிப்படி நின்று எட்டுச் சைவ சித்தாந்த சார்பு நூல்களை எழுதியவரான உமாபதிசிவாசாரியார் தமது சிவப்பிரகாசம் எனும் நூலில்

"வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம்"

(செய் 7)

என்றும் எடுத்துரைப்பர்.

மற்று, தமிழில் மெய்கண்ட சாத்திரங்களுக்கு முதனூலாக அமைந்த சிவஞான போதத்தை, பரஞ்சோதி முனிவரின் கட்டளையின்பேரில் மெய்கண்டார் வடமொழிச் சிவஞான போதத்தை மொழிபெயர்த்தார் என்று சிலர் இதனையொரு மொழிபெயர்ப்பு நூலாகக் கொள்வர். உண்மையில் மெய் கண்டாரின் தந்தையாகிய அச்சுதக்களப்பாளர், பிள்ளைப்பேறு வேண்டி சகலாகம மண்டிதராகிய அருணந்தி சிவாசாரியார் தேவாரத் திருமுறைகளிற் கயிறு சாத்திக் கூறியவண்ணம், திருவெண்காட்டிலுள்ள முக்குளநீரில் விதிப்படி நீராடி, இறைவனை உள்ளன்புடன் வழிபட்டு வரும் நாளில், இறைவன் கனவிற் தோன்றி "உனக்கு இப்பிறவியிற் பிள்ளைப்பேறு அரிதாயினும், தேவாரத் திருமுறைகளிலே பத்திவைத்து ஒழுகி வருதலாற், திருஞானசம்பந்தரைப் போன்ற ஒரு நன்மகன் தோன்றிச் சித்தாந்த நெறியைத் தமிழ்நாட்டார் உய்யுமாறு வழிகாட்ட வல்லவனாவான்" என்றுகூறி மறைந்தருளினார் என்பது வரலாறு. இவ்வாறு தோன்றிய திருவெண்காடர் (சுவேதனப் பெருமாள்) வயது இரண்டாண்டு நிறைவுபெற்ற

பொழுதே, முற்பிறவியின் கண் ஈட்டிய சீலம், நோன்பு, செறிவு,அறிவு கைவரப் பெற்று, மெய்யுணர்வுடையவராக விளங்கினர். இவருடைய பக்குவம்கண்டு பரஞ்சோதி முனிவர் இவருக்கு உபதேசித்தனர் என்றும், பின் இவர் நிட்டையிலிருந்து விடயங்களைத் தெளிந்து கண்டனர் என்பதும் வரலாறே. அப்படியிருக்க இரண்டு வயது முற்றுப்பெற்ற இவர் வடமொழிப் புலமையுடையவராய் இருந்தார் என்பதற்குச் சான்றுகள் இல்லை. மற்றும் மெய்கண்டதேவர் இறைவன் நந்திகணத்துக்களித்த சிவஞானபோதப் பொருளைத் தாம் திருவெண்ணெய் நல்லூரிற் திருவருட்துறையிலுள்ள பொல்லாப்பிள்ளையார் திருச்சந்நிதியி லிருந்து சிந்தித்துத் தெளிந்தனர் என்றுமட்டுமே தம் பாயிரத்தில் கூறுவர்.

**மயர்வற நந்தி முனிகணத் தளித்த**
**உயர்சிவ ஞான போத முரைத்தோன்**
**பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்**
**பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்**

என்று இவரே கூறுவதனால், இதனை ஒரு மொழிபெயர்ப்பு நூலாகக் கருதுவதற்கில்லை. பரஞ்சோதி முனிவரின் கட்டளையின் பேரில் மொழியெர்த்திருப்பின், அதனைக்குறிப்பிட்டு குருவழிபாடும் இடம்பெற்றிருக்க வேண்டும். அருணந்தி சிவசாரியார் தம் முதனூற் சிறப்புக் கூறுகையில் "மெய்கண்டானூல் சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்கலுற்றாம்" என்பர். உமாபதி சிவசாரியார் சந்தான குரவர்களை வரிசைப்படுத்தி வழிபாடு செலுத்துவர். சிவஞான போதத்திற்கு பேருரை வகுத்த சிவஞானமுனிவரும் ஆங்காங்கே மெய்கண்டாரியற்றிய தமிழ்ச்



சிவஞான போதத்தை வடமொழி மொழிபெயர்ப்பு என்று கூறிய விடத்தும், வடமொழியிலுள்ள சிவஞான போதத்தின் ஆறாம் சூத்திரம் பிழைபாடுடையதென்றும், தமிழ்ச் சூத்திரமே பிழையற்றது என்றும் கூறுவர். ஆனால் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் சிவஞானபோதம் தமிழிலிருந்தே வடமொழிக்குப் போனதென்பதற்கு வடமொழிப் பன்னிரண்டாம் சூத்திரத்தைச் சான்றாகக் கொள்வர். தமிழிற் பன்னிரண்டு சூத்திரமாக இருக்கையில் வடமொழியிற் - பதினொன்றரை ஏற்பட நேர்ந்தது இதனாலேயென்பர். எனவே மெய்கண்ட தேவருடைய தமிழ்ச் சிவஞானபோதம் பன்னிரண்டு செய்யுட்களால் (சூத்திரங்களால்) நுட்பமும், திட்பமும் பொருந்தியதாய்ச் சைவ சித்தாந்த நெறிகளையெல்லாம் ஒருங்கு திரட்டிப் பொருட் செறிவுடன் விளக்கியமைந்த நூலாம். இந்நூலின் பொருள் வைப்புமுறை பிரமாணவியல், இலக்கணவியல், சாதனவியல், பயனியல் என நான்கு வகைப்பட அமைந்ததாம். ஒவ்வொரு பகுதியும் மூன்று செய்யுள்களால் விளக்கியருளப் பட்டுள்ளன.

பிரமாணவியலிலுள்ள முதற் செய்யுள்; உலகம் அவன், அவள், அது எனும் பாகுபாட்டினையும், தோற்றம், நிலைத்தல், அழித்தல் எனும் தொழில்களையும் கொண்டிருத்தலால், இவற்றை நிகழ்த்த ஒரு முதல்வன் (கர்த்தா) வேண்டும். அவன் சிவன் ஆவான். உயிர்களை அனாதியே பீடித்துள்ள தளைகளிலிருந்து விடுவிக்கவே, இப்பிரபஞ்சம் யாவும், மாயையிலிருந்து விரிக்கப் பட்டுப், பின் அதிலேயே ஒடுக்கப்படுகின்றதாகிய தொழில்கள் செய்யப்படுகின்றன.

இரண்டாவது செய்யுள் : இறைவன் உயிர்கள் தம் வினைப் பயனால் இறப்புப் பிறப்பு வட்டத்தில் உழன்று (இன்ப துன்பகளை நுகர்ந்து ஒரு பிறப்பில் உவர்ப்பேற்பட்டு விடுதலையை நாடுவதற்காக) திரிவதற்காகத் தனது சக்தியின் துணைகொண்டு, சடமாகிய மாயையினின்றும் தனு, கரண, புவன போகங்களைக் கொடுத்துதவிபண்ணித் தானும் உடனாய் நிற்பன். அதாவது, இவ்வாறு உலககைப் படைக்குங்கால் தானும் விகாரமற்றவனாய் இருந்து பின் உயிர்களுடைய ஈடேற்றத்திற்காக) அவற்றுடன் ஒன்றாய், வேறாய், உடனாக நிற்பன். இதற்காகவே அவன் தன் சக்தியுடன் இணைந்திருப்பன். (இங்கு தனுவென்றது பல்வேறு உருக்கொண்ட உடல்களாம். கரணமென்றது சூக்குமவுடல், இது அழியாத தன்மைத்து. புவனமென்றது பலதிறப் பட்ட நாடு நகரங்கள். போகமென்றது உண்பன, குடிப்பன, சுற்றம், பொன் பொருள் முதலானவை)

மூன்றாவது செய்யுள்: மாயையிலான உடலினுள், அதனின்றும் வேறானதான உயிர் என்றொரு பொருள் உளது. அது ஐம்பொறிகள் (மெய் வாய், கண், மூக்குச் செவி) ஐம்புல உணர்வுகள் (தொடுதல், உண்ணல், காணல், மணத்தல், கேட்டல்), பிராணன் (மூச்சு) என்பவற்றிலிருந்து வேறானது. ஏனெனில் உறக்கத்தில் (உடற் கருவிகளுக்கு) நினைப்புகளோ அல்லது அசைவுகளோ இல்லையாம். அதன் அறிவு சிற்றறிவு ஆனமையாலும் (அதன் உண்மையை உணர்த்த), அதற்கு ஞானகுரு வேண்டியிருப்பதனாலும், அது இறைவனினின்றும் வேறுபட்டதாம். (இம்மூன்று செய்யுள்களாலும் பதி, பசு, பாசம் என்பன உண்மைப் பொருள்கள் என்பதற்குப் பிரமாணங்கள் காட்டப்பட்டன).



இனிவரும் மூன்று செய்யுள்களாலும் பதி, பசு, பாசம் என்பவற்றுக்குரிய இலக்கணங்கள் எடுத்துரைக்கப்பட்டன. செய்யுள் நான்கு: உயிரானது உட்கருவிகள், கரணங்கள் என்பவற்றுடன் சேர்க்கப்பட்டிருப்பினும் அது அனாதியே. ஆணவமலத்தினால் அறிவுமறைப்புண்டிருப்பதனால் (சார்ந்த தன் வண்ணமாய் அழுந்தியறிவதாகலின், ஒன்றினை அழுந்துங்கால் மற்றொன்றினை அறியாது) அவற்றினின்றும் வேறுபட்டதாம். இவ்வைம்புலன்களும், கருவிகளும் ஒரு அரசனுடைய ஆட்சிக்கு உதவிபுரிகின்ற அமைச்சர்கள்போல உயிருக்குச் சேவையாற்று வதோடு, உயிரை (உடலில்) ஐந்தவத்தைப்படுத்தியும் (நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கள்) நிற்கின்றன.

செய்யுள் ஐந்து: இவ்வைம்பொறிகள் முதலானவையும் (இந்த உடலுடன் ஒரேகாலத்திற் தோன்றி, ஒன்றாகியும், உடனாகியும், வேறாகியதுமான) உயிருடன் பொருந்தியே, தத்தம் தொழில்களை உயிரின் ஆணைக்குக் கீழ்ப் படிந்து செய்வனவாம். (உயிர் உடலை விடுகின்றபொழுது இக்கருவிகள் யாவும் செயலற்று, உயிரற்ற மற்றைய சடப்பொருள்கள் போல ஒளியற்றதாய் எதனையும் அறியும் தொழில்களைச் செய்வதில்லையாதலால்) உயிரால் இயக்கப்படும் இவையாவும் அறிவற்ற சடப்பொருள்களே. (இவ்வுடற் கருவிகளின் துணைக்கொண்டு மறந்து, மறந்து அறியவல்லதான அறிவுப்பொருளான உயிரும், பின்னர் வேறொருவர் அறிவிக்க அறிதலாலும், அவ்வாறு அறிகின்ற தன்னை அது அறியமுடியாதிருப்பதாலும்) உயிர் தானாக எதனையும் அறிந்திடும் ஆற்றலற்றதாய் இருக்கையில் இறைவன்

(அதன் கன்ம வழிநின்று கன்மத்துக்கு ஈடான ஏற்றத்தாழ்வான அறிவைக் கொடுத்து ஒன்றாய் உடனாய் வேறாய் நின்று) அறிவிக்க அறியும் இயல்புடையதாம். காந்தம் தான் ஏதும் மாற்றத்திற் குட்படாது, இரும்பிடத்து மாற்றங்களை ஏற்படுத்துவதுபோல, இறைவன் உயிருடன் ஒன்றாய், உடனாய் நின்று இயங்குவதனால் விகாரமடையமாட்டான்.

ஆறாவது செய்யுள்: எதெல்லாம் எம்மறிவாற் சுட்டி யுணரக்கூடியனவாக இருக்கின்றனவோ, அவையெல்லாம் மாற்ற மடைந்துகொண்டேயிருக்கின்றன. எவையெல்லாம் எம்மறிவாற் சுட்டியறியமுடியாததாக இருக்கின்றனவோ அவையெல்லாம் இல்பொருள்களே. இறைவன் இந்த இரண்டு தன்மைகளு மற்றவன். அதனால் அவனைச் சிவசத் என்பர். (அதாவது முதல்வன் சுட்டியறியப்படுகின்றதும், மாற்றங்களுக்குட்படுகிறதுமான உலகம் போன்றவனுமல்லன்) மற்று எவ்வகையாலும் அறிந்துகொள்ள முடியாத இப்பொருள்களான ஆகாயத்தாமரை, முயற்கொம்பு போன்று அறியப்படாதவனுமல்ல. அவன் ஆகம அளவையாலும், கருதலளவையாலும், அனுமான அளவையாலும் ஆராய்ந்து பசு, பாசங்களின்றும் வேறாயறியப்படுபவன். அதாவது உலகுடனும், உயிர்களுடனும் ஒன்றாய், உடனாய், வேறாய் நின்று இயக்குபவன் இறைவனே என்பதனைப் பதி ஞானத்தாலே அறியப்படக் கூடியவனாம்.

ஏழாவது செய்யுள்: சத்தாகிய (உள்பொருளான) சிவன் முன்னிலையில் உடல், கருவி, போகம், உலகம் என்பன எதுவும் முனைத்துத் தோன்றுவதில்லை. (பிரகாசிப்பதில்லை) அதனால்



அவன் எதனையும் அனுபவிக்கமாட்டான். சட உலகம் அறிவற்றதாகையால் அதுவும் எதனையும் அனுபவிப்பதற்கில்லை. இந்த இரண்டுமல்லாத உயிரே இவ்விரண்டையும் அனுபவிக்கும்.

செய்யுள் எட்டு: உயிர் சடப்பொருள்களாலான கருவிகளுடன் கூடிவாழ்ந்து வளர்ந்ததனாற் தன்னியல்பை அறியமுடியாது இருக்கின்றது. ஆனால் உயிர் (பல பிறவிகளில் உழன்று இறுதியில் ஒரு பிறப்பில், பிறப்பு, இறப்பு என்ற வட்டச் சுழற்சியில் உவர்ப்பேற்பட்டு) பக்குவ நிலையை எய்தியதும், மேலான இறைவன் ஞானாசிரியன் வடிவம் கொண்டு, உயிரின் இயல்பை உபதேசித்தருளுவன். உயிரின் அறியாமை, அவ்வாறு நீக்கப்பட்டு இருக்கையிற், தன்னுடன் இரண்டறக் கலந்திருக்கும் சிவனின் ஆனந்தப் பெருவாழ்வையடைய முயலும்.

ஒன்பதாவது செய்யுள்: இவ்வாறு ஞானகுருவாற் தீக்கை செய்யப்பட்ட உயிர், பாச அறிவினாலும், பசு அறிவினாலும் அறியப்படமுடியாதவனான இறைவனைப் பதி ஞானத்தால் அறிய முயலும். (அதாவது இதுகாறும் உயிர்க்குயிராய் நின்று, அதன் கன்மவழி செலுத்தி உணர்த்திவந்த இறையே, இப்பொழுது குருவுமாக வந்து உயிரின் இயல்பை உணர்த்தியிருக்கையில்) உயிருக்கு இப்பிரபஞ்சமெல்லாம் கானல் நீரென நிற்க, இறைவனே அதன்முன் தோன்றி நிற்பன். இந்நிலையில் இறைக் காட்சியைக் கண்டனுபவிக்க விரும்பியதான உயிர் திருவைந்தெழுத்தை நினைத்திருக்கும். (இம்மூன்று செய்யுள்களாலும் உயிரின் ஈடேற்றத்திற்கான வழிகள் கூறப்பட்டனவாம்)

பத்தாவது செய்யுள்: இறைவன் தன்னால் ஞானதீக்கை செய்யப்பட்ட உயிரைத் தனதாகக் கருதுவதுபோல உயிரும் இறைவனைக் கண்டனுபவித்ததனாற், தன்னை அவனாகவே கருதி (அவனுக்குரியவனாகவே கருதி, அதாவது மாணிக்கத்தைச் சார்ந்த படிகம், அதன் ஒளியையும், நிறத்தையும் பெற்றுத் தன்னொளி அதுவாயடங்கியிருத்தல் போல இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட உயிர்கள், இறைவன் குணங்களைத் தம் குணமாகக்கொண்டு, அதனுள் அடங்கி அதனுடன் இரண்டறக் கலந்து நிற்குமேயன்றி ஐந்தொழில்களைச் செய்கின்ற இறைவனேயாகமாட்டாதாம்) தன்னை அவ்விறைபணிக்கே அர்ப்பணித்துவிடும். இவ்வாறு தன்னைச் சிவனாகக் கருதிப் பாவனைசெய்து இறைபணியில் அயராது நிற்கையில் மும்மலங்களும் (ஆணவம், கன்மம், மாயை) செயலற்று விடுகின்றன.

பதினோராவது செய்யுள்: உயிர் (சடப் பொருளாகிய) கண் புறப்பொருள்களைக் காண்பதற்கு (ஆணையிட்டு) உதவியாக இருந்து தானும் காணுமாறுபோல, இறைவனும் தன்னால் தீக்கை செய்யப்பட்ட உயிரைத் தன்னைக் கண்டனுபவிக்குமாறு செய்து, தானும் இன்புறுவான். அதனால் உயிரிடத்து, இறைவன்மீது அயராத அன்பு தலைப்படவே, அந்த அன்பே இறுதியில் உயிரை இறைவனின் திருவடிகளைச் சேரவைக்க உறுதுணையாகவும் அமைகின்றது. (ஒருயிர் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நெறிகளில் நின்று படிப்படியாகவே தன்னை ஈடேற்றவல்லது) இதனையே கருவூர்த் தேவர் "படிவழி சென்று சென்றேறி" என்பர்.



(திருவிசைப்பா, திருவிடைமருதூர் 5) இப்பக்குவ முதிர்ச்சி கொண்டே இறைவன் குறிக்கொண்டு நிருவாண தீக்கை செய்ய எழுந்தருளுவான். எனினும் இந்நிருவாண தீக்கையால் மாத்திரத்தே ஆணவம் செயலறாது. "சிவமாக்கி எனை ஆண்ட" என்ற மாணிக்கவாசகரும்,

**.............வந்தருளித் தன்னடியார்**
**குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்**
**சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல்புகழே**
**பற்றியிப் பாசத்தைப் பற்றற நாம் பற்றுவான்**
**பற்றியபே ரானந்தம் பாடுதுங்          (திருவம்மானை 20)**

எனக்கூறி இறைவனாற் சிவதீக்கை செய்யப்பட்ட பின் சிவநெறியில் நின்றே சோதியிற் கலந்தவராவர். திருமூலரும் "சேர்ந்திருந்தேன் சிவன் நாமங்கள் ஓதியே" என்பதிலிருந்தும், ஞான ஒளியாலன்றி உயிரின் ஆணவ இருள் செயலறாது என்பது தெளிவாம்.

பன்னிரண்டாவது செய்யுள்: அயராத அன்புகொண்டு இறைவனின் திருவடியை அடையத்துடிக்கும் உயிருக்கு (இவ்வாறு ஞானநெறியில் நிற்கையில்) அதுவரை தடையாகவிருந்த மலங்கள் முற்றாகத் தேய்ந்து வலிமை அருகிப் போகின்றன. அதன்பின் சிவனடியாருடன் கூடிச் சேர்ந்திருந்து சிவனடியாரையும், கோவிலையும் சிவனே என வணங்கி நிற்கும்.

சைவசித்தாந்தம், முத்திநிலையில் ஆணவத்தின் ஒடுக்கம் சொல்கிறதேயன்றி நீக்கம் சொல்வதில்லை. சூரியன்முன், விண்மீன்களின் ஒளி அடங்கிநிற்பதுபோல, சிவஞானமாகிய

ஒளியின்முன் ஆணவம் ஆற்றல் குன்றிக்கிடக்கும். இதனால் உயிரின் அறிவை மயக்கிவந்த மலகாரியமான சக்தி அடங்குமேயன்றி, அதன் நித்தியத்தன்மை அழியாது. இது எதுபோலவெனிற் சூரியஒளிமுன் மறைகின்ற இருள் நாசமடைவதுமில்லை, அன்றேல் அவ்வொளிமுன் முனைத்து நிற்பதுவும் இல்லை என்பது போலவாம். (சிவப்பிரகாசம் செய். 88) ஏற்கனவே முதல்வன் குருவடிவாய் வந்து திருவைந்தெழுத்தை ஓதி மலவாசனை தாக்காது அருள்புரிகையிலே, சிவஞானிகள் தம் வினையைக் கெடச் செய்வார்கள் என்பதனைத் திருமூலர்.

**தன்னை யறிந்திடும் தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்**
**சென்னியில் சைத்த சிவனருளாலே**

என்று கூறியருளுவதையும், அருணந்தி சிவாசாரியார்

**முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகள்**
**மூளாவங் காளாகி மீளாவன்றே**
**(சி.சித்தியார் சுபக்கம் 306)**
**நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்றும்**
**நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந் தானே**
**(சி.சித்தியார் சுபக்கம் செய். 307)**

என்றும், சிவனால் ஆட்கொண்டு, சிவநெறி நிற்கின்ற உயிரின் பழவினைகள் (அதாவது பிராரத்த சஞ்சிதங்களாக இருந்தவைகள்) உடலுள்ளவரையும் பெருங்காயமிருந்த பானையின் மணம் போலவும், வனைதலொழிந்த குயவனின் சக்கரத்தின் சுழற்சி



இறுதியில் வேகம் குறைந்து ஓய்வதுபோலவும், வினையின்மையால் உடம்பொழியும் காலத்து உடலுடன் அழிந்துவிடுகின்றன என்றும் கூறியருளுவர் (சி.சி.சுப. செய்.309) இதனால், இதுவரை உயிரைக் கட்டியிருந்த மலங்கள் உடலுள்ளளவும் நின்றியங்கிச், சக்தி குன்றிப்பின் மேற்பிறவிகளுக்கிடமில்லாது தேய்ந்தருகி விடுகின்றன என்பது உணர்த்தப்பட்டதாம். இதனையே மாணிக்கவாசகரும்

**''அணுவாய்ந் தேய்ந்து தேய்ந்து ஒன்றாகும்''**
**(கோயிற் திருப்பதிகம் 7- வரி 3)**

என்றனர். சூரிய ஒளி மேல், மேல் ஏறுகையில் ஒருவருடைய நீண்ட நிழல் குறுகிக் குறுகி, இறுதியிற் சூரியன் உச்சியை அடைந்ததும் இல்லாமற் போதல்போல, முதல்வனால் ஆட்கொள்ளப்பட்ட உயிர், இறைவன் அருள் ஒளியை மேலும் மேலும் அவாவி ஞானநெறியில் நிற்கையில், அவ்வுயிரின் பழைய வினைகளின் நிழலும் அணுவணுவாய்த் தேய்ந்து அருகிவருகையில், இறைவன் ஒளி அவ்வுயிரைச் சூழ்ந்திருக்கும் என்பதாம்.

இதனாலே முத்தியில், மனவாசகங்கடந்த தேவநாயனார்

**''இத்தை விளைவித்தல் மலம்''**
**(உண்மை விளக்கம் செய் 50)**

என்பர். அதாவது முத்தியில் உயிர்பேரின்பத்தை அனுபவிக்குமென்றும், முதல்வன் அவ்வின்பத்தைக் கொடுத்து நிற்பவன் என்றும், மலம் சிவத்தை மறைக்காது, உலகத்தை மறைத்துநின்று

உயிருக்குப் பேருதவி பண்ணும் என்றும் கூறியருளுவர். இவ்வாறு சிவஞானபோதத்தின் இறுதி மூன்று செய்யுள்களிலும், உயிர் ஈடேற்றத்தின் பயன்கள் எடுத்துரைக்கப்பட்டதாம்.

தமிழிலிருந்த மெய்கண்டாருடைய சிவஞான போதத்தை வடமொழிப்படுத்தியோரே பல சொற்குற்றம், பொருட்குற்றம் என்பனவற்றை ஏற்படுத்தியுள்ளனர் என்று சித்தாந்த பண்டிதர் ப.இராமநாதபிள்ளையவர்கள் கருதுவர்[26]. தற்பொழுது எமக்குக் கிடைக்கின்ற ரௌரவ ஆகமப் பிரதியிற் சிவஞானபோதம் இடம்பெறாமையால், இவ்வாகமத்தின் பாப விமோசனப் படலத்திலுள்ள சிவஞான போதத்தின் மொழிபெயர்ப்பு என்று கூறுவாரின் கூற்றுவலுவற்றதாம். மற்று வடமொழிச் சிவஞான போதத்தின் இறுதிச் சூத்திரம் "இவ்வாறு சிவஞானபோதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது" என்பதனால் இக்கூற்றுத் தமிழ்ச் சிவஞானபோதத்தையே கருதுகின்றது என்பதும் தெளிவாம். எனவே நாம் மேலேகாட்டிய காரணங்களைக் கருத்திற்கொண்டு, மெய்கண்டாருடைய சிவஞானபோதம் முதல் நூலேயன்றி, வடமொழி மொழிபெயர்ப்பன்றாம் என்பது தெளிவு. பன்னிரண்டு சூத்திரங்களால் அமையப்பெற்ற இந்நூலே சைவசித்தாந்த உலகின் முதன்மை பெற்ற நூலாம். இதனை ஞானம் கைவரப்பெற்றார் ஓதியுணர்வதற்காகவே இதற்குச் சிற்றுரை, பேருரைகளைச் சிவஞானமுனிவர் எழுதலாயினர். வடமொழிச் சிவஞான போதத்திற்கு சிவாக்கிரயோகிகள் வகுத்த உரை சைவ சித்தாந்த நுட்பங்களைச் செவ்வனே விளக்கும் ஆற்றலுடைத் தன்று எனக் கா.சுப்பிரமணியபிள்ளை கருதுவர்[27]. எனவே சைவசித்தாந்த அளவை நூன்முறைக்கேற்பச், சிவஞான போதப்



பொருளை விளக்கியருளிய துறைசை மாதவச் சிவஞான முனிவர்களின் நூலே வடமொழியிலும், தமிழிலுமுள்ள சைவசித்தாந்தவுண்மை களுக்கெல்லாம் சிறந்தவுரை நூலெனக் கருதப்படுகின்றது.

சிவஞானபோதத்திற்கு வழிநூலாக அருணந்தி சிவாசாரியார் சிவஞானசித்தியார், இருபா இருபஃது என்னும் நூல்களை இயற்றியருளினர். மெய்கண்டாரின் தந்தையின் குருவாக இருந்தவரே சகலாகம பண்டிதராகிய அருணந்தி சிவாசாரியார் என்பவர். முதனூலாகிய சிவஞானபோதம் போல் வழிநூலாகிய சிவஞானசித்தியாரும் சுபக்கம் எனும் பிரிவில் பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என நான்கு இயல்களாகப் பகுத்து சைவசித்தாந்த உண்மைகளை 328 திருவிருத்தங்களில் விரித்தருளுவர். எனினும் 301 திருவிருத்தங்களால் அமைந்த பரபக்கத்தைச் சங்கராசாரியாருடைய சருவதரிசனங்கிரகம், சருவமதோபந்நியாசம் என்பவற்றையும், இராமநாதாசாரியாருடைய பரமதநிராகரணம், சருவான்மசம்பு, சிவாசாரியாருடைய சித்தாந்த தீபிகை, அகோரசிவாசாரியாருடைய சித்தாந்தார்த்த தீபிகை முதலான வற்றைத் தழுவியெழுந்த தென்பர், இதற்குரைவகுத்த எழுவரில் ஒருவரான மறைஞான தேசிகர், சுபக்கம் என்ற பிரிவிற்குச் சிவஞான போதத்தை மட்டுமன்றிச் சூத்திரம் சூரணி வெண்பாக்களையும், சிவாகமங்களையும் கருத்திற்கொண்டனர் என்பர். சிவஞானசித்தியார் சுபக்கத்திற்குச் சிவஞான முனிவர் (யோகிகள்) பொழிப்புரையும், சுப்பிரமணிய தேசிகர் பதவுரையும் எழுதினர். இதற்கு ஞானப்பிரகாசத் தம்பிரான் அருளிய உரை

சிவசமவாத உரையாம். நிரம்பவழகிய தேசிகர் தம் உரையிலே பிற தமிழிலுள்ள தத்துவ நூல்களை மேற்கோளாகக் காட்டி விளக்குவர். ஆனால் மறைஞானசம்பந்ததேசிகர் பெரும்பாலும் வடமொழிநூற் பிரமாணங்களையும், சிறுபான்மைத் தமிழ் நூல்களையும் எடுத்துக் காட்டி விளக்குவர். வெள்ளி அம்பலத்தம்பிரான், சிவாக்கிர யோகிகள் என்போரும் சிவஞானசித்தியாருக்கு உரை வகுத்த எழுவரில் அடங்குவர். ஆனால் திருவாவடுதுறை ஆதினத்தார் அறுவருரைபற்றியே குறிப்பிடுவர். இவைதவிர டி.முத்தையா பிள்ளை, எம்.திருவிளங்கம் முதலானோர் உரைகள் புதியனவாம். இவற்றுடன் ந.சிவகுருநாதபிள்ளை அவர்களின் சிவஞான சித்தியார் ஆராய்ச்சி, பேராசிரியர் வி.எ.தேவசேனாதிபதி அவர்களின் சைவசித்தாந்தம் முதலான நூல்கள் இதனை ஆராய்வு நோக்குடன் நோக்கியுள்ளன. கலாநிதி டி.வி.சித்தலிங்கையாவின் 14ம் நூற்றாண்டுவரை சைவசித்தாந்தத்தின் தோற்றமும், வளர்ச்சியும் எனும் வரலாற்று ஆய்வுநூல் (ஆங்கிலம்) ஆய்வுள்ள முடையோருக்குப் பெரிதும் பயனுடைத்தாம். சிவஞான சித்தியாரின் பரபக்கத்திற்கு தத்துவப்பிரகாசர் எழுதிய உரையொன்றே உளது. இப்பகுதியில் ஏனைய சமயவாதிகளின் கோட்பாடுகளைக் கூறி, அவற்றுக்கு மறுப்புரை கூறுவதன் மூலம் சைவசித்தாந்த உண்மைகள் நிறுவப்பட்டுள்ளன.

மற்று அருணந்தி சிவாசாரியாரின் மற்ற நூலான இருபா இருபஃது, வெண்பா, ஆசிரியப்பா எனும் இருவகையாப்பினாற் செய்யபட்ட இருபது பாடல்களைக் கொண்டதாம். இந்நூலில் மெய்கண்டதேவரையே சிவனாகப் பாவனைசெய்து, வினாக்கள் கேட்கப்படுவதாகச் செய்யுள்கள் அமைந்துள்ளன. மேலும் ஆணவத்தினால் எழும் எட்டுக்குணங்கள், மாயையினால் எழும் எழுவகைக்குணங்கள், வினை (கன்மம்)யினால் ஆற்றப்படும் அறுவகைக் கன்மங்கள் என்பனவும், பதி, பசு, பாசங்களின் இலக்கணங்கள், இவற்றின் தொடர்புகள் மற்று உயிர்கள் ஓருடலை விட்டு இன்னோருடலை எடுக்கும் நிலைகள் என்பனவும் ஆராயப்பட்டுள்ளன. தேவாரவாசிரியர்கள் கூறிய சைவசித்தாந்தக் கோட்பாடுகளுக்கும், தெளிவான விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. (செய். 2, 4) மேலும் இறைவன் உயிருடன் ஒன்றாய், உடனாய் இருப்பானெனில் உயிருக்கு அறியாமை எப்படி ஏற்படுகின்றது? ஆணவக்கருவறையில் உயிர் இருக்கும் பொழுது இறைவன் உயிருடன் ஒன்றாக இருக்கமாட்டானா? மற்று இறைவன் குருவாக வந்து உபதேசிக்கும் பொழுது உயிருடன் எவ்விதம் இருப்பான்? போன்ற சைவ சித்தாந்தக் கோட்பாட்டில் எழக்கூடிய ஐயப்பாடுகளையெல்லாம் தானேயெழுப்பி, அவற்றுக்கெல்லாம் விளக்கங்களைக் கொடுத்து மயக்கத்தை நீக்குமுகமாகவே இந்நூலினைச் செய்தருளினர். மெய் கண்டாருடைய நூலிற் சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்ட தத்துவங்களையெல்லாம், அருணந்தி சிவாசாரியார் இவ்வாறு தமது இருநூல்களிலும் விரித்துரைத்து சிவஞானபோத நூலின் பொருளினை விளங்க வைத்தனர் எனலாம். இருபா இருபதுவிற்கு திருவாவடுத்துறை நமச்சிவாயத்தம்பிரான், சீர்காழி தத்துவநாதர் முதலானோர் உரை எழுதி எழுதியுள்ளனர்.



இனி, மெய்கண்டார் வழிவந்த புறச்சந்தான மரபில் மெய்கண்டார் மாணாக்கருள் ஒருவரான திருவதிகை மனவாசகங் கடந்தார் அருளிய உண்மை விளக்கமும் மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்றாம்.

இவர் தமது நூலின் இறுதிச் செய்யுளில்,

**மன்னதிகை வாழும் மனவா சகங்கடந்தான்**
**மின்னனையார் வாழ்விலுரு மெய்கண்டான் - பன்மறைகள்**
**வண்மை தரும் ஆகமநூல் வைத்த பொருள் வழுவா**
**வுண்மை வினக் கஞ்செய்த னுற்று (செய் 54)**

என்றுகூறி நூலாசிரியரே தமது குருவையும், தமது நூலையும் குறிப்பிட்டருளுவர். மேலும் "மெய்கண்டாய் திருவெண்ணெய் வித்தகா" (செய் 1) என்றும், "வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே" (செய் 53) என்றும் விழித்துரைத்துத் தம் குருவின் பெருமையை உள்குவர்.

ஆறாறு தத்துவம் யாது? ஆணவம் யாது? மாறாவினை யாது? நான் யார்? நீ யார்? நாதன் நடனம் ஏன்? அஞ்செழுத்தாவது யாது? எனும் வினாக்களை மாணவன் ஒருவன் குருவிடம் கேட்கும் முறைமையாற் கேட்டு, இவற்றிற்கெல்லாம் ஆசிரியர், ஆகமங் களிலுள்ளவாறு விடைபகர்வதாகக்கூறி விடை கூறியருளுவர். முதலில் மாயா (சுத்தமாயை, அசுத்தமாயை) தத்துவமாகிய ஆன்மா தத்துவங்கள் (24), வித்தியாதத்துவங்கள் (7), சிவதத்துவங்கள் (5), என்பவற்றின் தோற்ற, ஒடுக்கமுறைமையினைச் சுருக்கமாக எடுத்துரைப்பர். பின் ஆணவம், வல்வினை என்பனவற்றின் இலக்கணங்களையும், உயிர் என்றால் எது என்று தர்க்கமுறையால் உணரவைத்தும், இறைவன் உயிர்க்குயிராய் நின்றருள் புரிகின்றனன் என்பதனையும் ஆகம உரையால் உணர்த்துவர். அதனோடு நாதன் நடன நோக்கம் கூறுகையில், உடுக்கையை



ஏந்திய திருக்கையினால் மாயையை நீக்கித், தீயை ஏந்திய கையினால் வல்வினையை அழித்து, ஊன்றிய திருவடியினால் ஆணவமலத்தை மேலிடாமல் அழுத்தி, தூக்கிய திருவடியினாலே திருவருளையே உடம்பாகக் கொண்டு, பெருங்கருணையுடன் "உயிரை அஞ்சாதே" என அமைத்த திருக்கையினாலே உயிரைப் பேரானந்தக் கடலில் மூழ்குவித்தலாம் என்பர். (செய்.36) மற்று இறைவனின் திருநடனம் அவரது ஐந்தொழில்களை உணர்த்துவனவாம் எனவும் விளக்குவர். உடுக்கை ஏந்தியகை படைத்தலையும், அஞ்சாதே எனக்காட்டும் கை காத்தலையும், தீயை ஏந்திய கை அழித்தலையும், உறுதியாக ஊன்றி நிற்கும் திருவடி மறைத்தலையும், தூக்கிய திருவடி அருள்புரிவதையும் காட்டித் திருநடனம் செய்வார் என்பர் (செய்.35). மேலும் இறைவனின் திருநடனம் திருவைந்தெழுத்தை இருவகையாக உணர்த்தும் என்றும் விளக்கியருவர் (செய் 32, செய்.33) திருவைந் தெழுத்துபாசனையால் உயிர் அவனேதானேயாகி, முத்தியின்பம் பெறுகிறது என்ற சைவசித்தாந்தக் கோட்பாடுகளைச் சுருங்கக் கூறியருளுவர்[28]. இந்நூலுக்கு இரு பழைய உரைகள் இருப்பினும் அவை யாராற் செய்யப்பட்டன என்ற விபரங்கள் தெரியவில்லை. ஆனால் இதன் பழைய உரைகளை விரித்தும், பதப்பொருள் கூறியும் விளக்கம் தந்துள்ள உரைகளைச் சைவப்புலவர் இ.செல்லத்துரையும், திருவாவடுதுறை ஆதீனவித்துவான் க.வச்சிரவேல் முதலியார் முதலானோர் எழுதியுள்ளனர். இவ்வுரைகளை முறையே அ.இ.சை.பு.ப.சங்கமும் (1963), யா.கூ.த.நூ.ப.வி.கழகமும் (1971) வெளியிட்டமை குறிப்பிடத் தக்கது.

இவர்பின், புறச்சந்தானகுரவர் மரபில் அருணந்தி சிவாசாரி யாருடைய மாணாக்கராக விளங்கியவர் மறைஞானசம்பந்தர் ஆவர். இவரே ஆன்மீக பூசையினாலும், கோயிற் பூசையினாலும் பக்குவமுற்றிருந்த உமாபதியாருக்கு, மேலும் பக்குவ முதிர்வு விளையும்பொருட்டு சிவபூசையை முடித்துவிட்டுப் பல்லக்கிற் சென்றுகொண்டிருந்த அவர் செவியிற்படுமாறு "பகற்குருடு" போகிறது எனக்கூறினர். அதனைக்கேட்டு மெய்ம்மை உணர்வு தலைப்பட்ட உமாபதி சிவாசாரியார் தமது பல்லக்கினின்றும் இறங்கி, மறைஞான சம்பந்தருடைய திருவருடிகளில் வீழ்ந்து வணங்கினர். மறைஞானசம்பந்தர், உமாபதியாருக்குப் பின்னும் முதிர்ச்சி விளையும் பொருட்டு, வீதிவழியே எழுந்து விரைந்து சென்று பசித்தார்போன்று, செங்குந்தர் ஒருவர் வார்த்திட்ட கஞ்சியைக் கையேந்தி அருந்தினர். அப்பொழுது அவரைத் தொடர்ந்துவந்து உமாபதியாரும் அவரது கைகளினின்றும் வழிந்தோடிய கஞ்சியை ஏற்றுக்குடித்தனர். அதனால் இவருக்கு ஞானதீக்கை, உபதேசம் முதலாயன கைவரப்பெற்று, அன்றுமுதல் இவர் மறைஞானசம்பந்தர் சீடராக, அவரிடம் சித்தாந்த நுண் பொருள்களைக் கேட்டுத்தெளிந்தனர் என்பது வரலாறு. சிதம்பரத்தைச் சார்ந்த கொற்றவன் குடியில் வாழ்ந்த தில்லை வாழந்தணருள் ஒருவரான உமாபதி சிவாசாரியாரே, புறச்சந்தான குரவருள் நான்காவது ஆசிரியராவர். மெய்கண்ட சாத்திரங்களின் முதன் நூலாகிய சிவஞானபோதத்திற்கும் வழிநூலாகிய சிவஞான சித்தியாருக்கும் சார்பு நூல்களாகச் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் முதலான எட்டுச் சாத்திர நூல்களைச் செய்தருளினர். இவருடைய நூல்களிற் சிறந்ததான சிவப்பிரகாசம் நூறு விருத்தங்களைக் கொண்டது. இவ்விருத்தங்களில் முதலைம்பதும் பொதுவதிகாரம் எனவும், பின்னையைம்பதும் உண்மையதிகாரம் எனவும், இரு பிரிவுகளாக வைக்கப்பட்டுள்ளன. பொதுவதிகாரத்திற், பாயிரம், பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாசவிலக்கணம், அவத்தை யிலக்கணம் என்பனவும், உண்மையதிகாரத்தில் ஆன்ம விலக்கணம், ஐந்தவத்தையிலக்கணம், உணர்த்துத் தன்மை, ஞானவாய்மை, ஞானத்தால் வரும்பயன், புனிதனாமம், அணைந் தோர்தன்மை முதலானவையும், சைவசித்தாந்த நெறிப்படி விளக்கப்பட்டுள்ளன. இந்நூலின் நுதலியபொருள் பற்றி ஆசிரியரே

> **''புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்"**
> **..................................................................சைவ**
> **சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்"**

எனக் கூறியருளுவர். இதனாலே சிவஞான வள்ளலாரும்

> **மற்றிரண்டு மாய்ந்து மறுவி லுமாபதியார்**
> **சொற்றசிவப் பிரகாசத் தொன்னூ - லுற்றநிலை**
> **ஆங்கதுவே சீவன்முத்த னாக்குவிக்கு மந்நூலே"**

எனச் சிவப்பிரகாசத்தின் மெய்ந்நெறிச் சிறப்பை விதந்தோதுவர்.

மெய்கண்ட சாத்திரங்களுள் எட்டாவதான திருவருட்பயன் இறைவனின் திருவருள்பற்றியும், உயிர்கள் திருவருளினால் வீட்டின்பத்தைப் பெற்று உய்யுமாற்றையும் கூறுவதாகும். காப்புச்

செய்யுளுட்பட நூற்றொருகுறள் வெண்பாக்களால் அருளப்பட்ட இந்நூல் பப்பத்துக் குறள்களைக்கொண்ட பத்து அதிகாரங்களைக் கொண்டது. திருவருளைப்பற்றிக் கூறுகின்ற முதலைந்தும் பொதுவெனவும், திருவருளின் பயனைக்கூறுகின்ற பின்னைந்தும் சிறப்பெனவும் கூறப்படுவனவாம். அதிகாரங்கள் முறையே திருவருளைக்கொடுக்கும் பதியின் தன்மை, திருவருளைப்பெறும் உயிரின்தன்மை, திருவருளால் நீக்கப்படும் மலத்தின்தன்மை, பேரருள் வடிவான குருவின்தன்மை, உயிர்பேரருளாற் பேரறிவைப் பெறும் தன்மை, பின் மலத்தினின்று நீங்கும் தன்மை, அதன்பயனாகப் பேரானந்தத்தைப் பெறும்தன்மை, பேரானந்தம் பெற்றோர் சீவன் முத்தராயின் வாசனா மலத்தைக் கெடுக்கும் திருவைந்தெழுத்தை ஓதும்தன்மை, இறுதியிற் சீவன்முத்தர் தன்மை, முதலானவற்றை விளக்குகின்றன. இந்நூலுக்கு ஸ்ரீ நமச்சிவாயத்தம்பிரான் எழுதிய பழைய உரை ஒன்றுளது, இவ்வுரையெழுந்தகாலம் வினாவெண்பாவுரையால் கி.பி.1678 ம் ஆண்டெனத் தெரிகின்றது. இதற்குச் சேதுமடாலயம் ஸ்ரீ நிரம்யவழகிய தேசிகர் எழுதிய பொழிப்புரையொன்றும் உளது. இவைதவிர வேறு சில உரைகளும் உள்ளன என்பர். இதற்குத் தெரிவுக்கட்டுரை எழுதி, இதன் கருத்துக்களை எளிதாக விளக்கியருளியவர் திருவாவடுதுறை ஆதீனத்து வித்துவான் தே.ஆ.ஸ்ரீநிவாஸாசாரியார் ஆவர்[29].

உமாபதி சிவாசாரியார் அருளிய நூல்களிலொன்றான வினாவெண்பா மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்பதாவதாகக் கருதப்படுகின்றது. இவர் தமது ஞானசிரியராகிய மறைஞான சம்பந்தரை முன்னிலைப்படுத்தி, வினவுவது போல் வினவிப், பின்



சித்தாந்த உண்மைப் பொருள்களை விளக்கியருளுவர். இவர் மறைஞானசம்பந்தரிடம் ஞானநிலைக்குரிய யாவற்றையும் உபதேசம் பெற்றுத் தெளிந்தவராகையால், அச்செய்திகளை எல்லா மக்களும் உய்திபெறும் வண்ணம் இந்நூலை யாத்தருளினர். முதல் நூலாகிய சிவஞான போதத்தின் பன்னிரண்டு சூத்திரங்களுள் சைவசித்தாந்த உண்மைப் பொருள் யாவும் உள்ளடக்கப்பட்டிருப்பது போலவே, இவ்வினாவெண்பா பன்னிரண்டிலும் சித்தாந்த உண்மைகள் அடங்கியுள்ளதாம். அருணந்தி சிவாசாரியார் செய்தருளிய இருபா இருபஃதுவின் மரபின்வழியே இந்நூலமைந்துள்ளது எனவும் கூறுவர். இந்நூலின் முதற் பன்னிரண்டு நேரிசை வெண்பாக்களும் ஞானநெறியை விழைந்தவர்க்கு ஆணவமலம், உயிரின் மூவகை நிலை, ஞானக்காட்சி, சுத்த தத்துவக்காட்சி, திருவருள்காட்சி, பாச ஒழிவு, சுத்த அத்துவித இலக்கணம், இறைநிலை, விஞ்ஞானகலர், பிரளயாகலர் நிலை, உயிர்கள் நிலை, சிவஞானப்பேறு, சிவானந்தமடைதல் முதலானவற்றைக் கூறிப்பின் இறுதிப் பாவில் நூற்பயனைக் கூறுமுகத்தாற் பாசநீக்கம் பெறவிரும்பினோர் தமது வினா வெண்பாவிற் காட்டியவாறு வினாக்களை வினவி, அதன் உண்மைப் பொருளை அறியவேண்டும் என்று நூற்பயனும் கூறிமுடிப்பர். மேலும் ஞானநெறி நிற்போருக்கு ஆங்காங்கே ஏற்படும் தடைகளையும் குறிப்பிட்டு, அவற்றை அகற்றிக் கொள்வதற்கான வழிகளையும்கூறி, எல்லாநிலையிலும் இறைவன் திருவருளே உயிர்க்கு உதவிபுரியினும், உயிர் அருளில் அழுந்தி நிற்கையிலே இறையருளின் நிறைவை அறியப்பெறும் என்றும் விளக்கியருளுவர். இந்நூலினை ஆசிரியர் கி.பி.1308 - ல்

இயற்றியருளினர் எனத்தெரிகின்றது. இதற்குரிய ஆதீனவுரை ஸ்ரீ நமச்சிவாயத்தம்பிரானால் இயற்றப்பட்டதாம். இவ்வுரையின் காலம் கி.பி.1678ம் ஆண்டெடன இவ்வெண்பாவுரையால் உணர்த்தப் பட்டுள்ளது. இதற்கொரு விடை விளக்கக் கட்டுரையைத் திருவாவடுதுறை ஆதீனப் புலவர் தே.ஆ.ஸ்ரீநிவாசன் எழுதியுள்ளமையும் இங்கு குறிப்பிடத்தக்கதாம்[30].

உமாபதி சிவாசாரியார் அருளிய போற்றிப் பஃறொடை மெய்கண்ட சாத்திரங்களுள் பத்தாவது நூலாகும். தொண்ணூற்றைந்து குறட்பாக்களாலாய இந்நூலின் இறுதியிற், தம் குருவாகிய மறைஞானசம்பந்தருக்கு வெண்பாவினால் வாழ்த்துக் கூறிமுடிப்பர். இந்நூல் இறைவன் உயிர்கள் மீது கொண்ட கருணையினாலேயே ஐந்தொழில்களையும் நிகழ்த்தி, உயிர்களுக்குத் தனு, கரண, புவன போகங்களையும் கொடுத்து, உயிர்களை இன்பதுன்பங்களில் உழலவைப்பதனால், உயிர் களுக்கு உவர்ப்பேற்பட்டுப் பக்குவமடையும் காலை, குறிக்கொண்டு தானே ஆட்கொள்ள ஞானாசாரியனாக எழுந்தருளுவன் என்பதனை உணர்த்தி நிற்கும். இந்நூலிற்குப் பழையவுரை ஒன்றிருப்பினும், அதன் ஆசிரியர் விபரங்கள் அதிற் குறிப்பிடப்படவில்லை. எனினும் தர்மபுர ஆதீனத்துக் க.சுப்பிரமணியபிள்ளையவர்கள் இதனை உரைநடையில் எழுதியருளியுள்ளனர் (1962).

மெய்கண்ட சாத்திரங்களுள் இதனைத் தொடர்ந்து இடம் பெறுவது உமாபதிசிவாசாரியார் அருளிய நான்கு செய்யுட் களாலான கொடிக்கவியாகும். இதன்முதற் செய்யுள் கட்டளைக் கலித்துறையிலும், பின்னைய மூன்றும் வெண்பாவினாலும் இயற்றப்பட்டனவாம். இவர் குருவாகிய மறைஞானசம்பந்தருக்குச் செங்குந்தர் வீதியில் வார்த்திட்ட கஞ்சியை அவர்குடிக்கையில், இவரும் அவரது கைகளிலே வழிந்தோடிய கஞ்சியை உண்டதனாற் தில்லை வாழ்ந்தணர்கள் இவரைப் பிரித்து விட்டனர். அதனால் இவரும் வழமையாகத் தான் நடராசப் பெருமானுக்கு இயற்றிவந்த பூசையிலிருந்து விலகிக்கொண்டனர். அவ்வாறு இவர் விலகியிருக்கையில் நடராசப்பெருமானுக்குக் கொடியேற்றத் திருவிழாக் காலத்தில் உமாபதியார் முறைவந்தது. அப்பொழுது தில்லைவாழந்தணர்கள் வேறு ஒருவரைவைத்துக் கொடி யேற்றவே, கொடிச்சீலை ஏறாமல் கீழே விழுந்துவிட்டது. அதனாற் துயருற்ற தில்லைவாழந்தணருக்கு இறைவன் "உமாபதிசிவாசாரியர் தமக்கு ஒவ்வொருநாளும் இயற்றிவந்த பூசைகளை நிகழ்த்தாவிடத்தும், அவரது பூசைப்பேடகத்தே எழுந்தருளி நின்று, அவரது பூசைகளை ஏற்றுவருகின்றோம். ஆதலின் அவரைக்கொண்டே கொடியை ஏற்றுங்கள்" என்று கூறியருளினர். உடனே அந்தணர்கள் தம் தவறை யுணர்ந்து, உமாபதி சிவாசாரியாரை அணுகி, நிகழ்ந்தனவற்றை விண்ணப்பித்தனர். உமாபதியாரும் இறைவனின் திருவருளை எண்ணி உருகியவராய்க் கோயிலையடைந்து, செங்குந்த மக்களை இடபக்கொடியுடன் வீதிவலம் வரச்செய்து, உமாபதி சிவாசாரியாரும் கொடிமரத்தடியே சென்று கொடிக்கவி எனும் திருவைந்தெழுத்துப் பாசுரத்தைப் பாடியருளினர். உடனே கொடி ஏறியது. இதுவே கொடிக்கவி நூல் இயற்றப்பட்ட வரலாறாம்.

இதன் முதற் செய்யுள் இருளும், ஒளியும் ஓரிடத்திலே இருப்பினும் ஒளியை இருள் மறைக்கமுடியாது. ஒளி இருளை அகற்றிவிடும் ஆற்றல்மிக்கது. அதுபோல உயிர் அறிவுடைத் தாயினும், மும்மலங்களினாற் தன்னியல்பை அறியமுடியாது, அறியாமை வயப்பட்டிருக்கின்றது, என்கின்ற உண்மையைக் கூறுகின்றது.

இரண்டாவது செய்யுள் பதி, பசு, பாசங்களைப்பற்றிச் சுருங்கக்கூறும்.

மூன்றாவது செய்யுள் இறைவனுடன் உயிர் இரண்டறக் கலந்து நிற்கின்ற நிலையையும், பின் இறைவன் மனம், மொழிகளுக்கப்பாற்பட்டவனாக வேறாகி நிற்கும் நிலையினையும் கூறும்.

நான்காவது செய்யுள் திருவைந்தெழுத்தினை உச்சரிக்கும் வெவ்வேறு முறைகளை விபரிக்கும்.

இந்நூலுக்கொரு பழைய உரை இருப்பினும், அதனை யியற்றியோன் விபரங்கள் தெரியவில்லை. தர்மபுர ஆதீனத்து க.சுப்பிரமணியபிள்ளையவர்கள் இதனை உரைநடையில் எளிதாக்கி அமைத்துள்ளனர் (1962).

உமாபதி சிவாசாரியார் தமது நெஞ்சுவிடுதூது எனும் மெய்கண்ட சாத்திரத்தை, தமது ஞானகுருவாகிய மறைஞான சம்பந்தரையே சிவனாகப் பாவனை செய்து தூது அனுப்புவதாகப் பாடியருளியுள்ளனர். இத்தூதில் சொல்லியனுப்பப்பட்ட செய்தியாவது, உயிரின் ஈடேற்றத்திற்காகக் கருணைமீதூரப்பெற்ற



இறைவனின் திருவருளே உலகையியக்குகின்றது என்பதாம். மேலும் தூதுப் பிரபந்தத்தின் இலக்கணங்களுக்கமைய ஞான குருவாகிய மறைஞான சம்பந்தர் வடிவிற் தோற்றியருளிய இறைவனின் பத்து அடையாளங்கள் இன்னது எனப் பின்வருமாறு விபரிப்பர். நல்லதன்மையே அவனது மலையாம்; ஆனந்தமே அவனது அருவி; ஆகமங்களாலடையப்படாதவிடமே அவனது நாடு; சிவஞானமே அவனது நகர்; அருளே அவனது கழுத்தணி மாலை; சக்தியே அவனது குதிரை; அறிவே அவனது யானை; அவனது கொடி அறுவகைச் சமயங்களுக்கப்பாற் பறந்து துன்பம் துடைப்பதாம்; நிலையான ஒலியென்பது அவனது உடுக்கையாம்; அவனது ஆட்சி பிரம்மா, விட்டுணு உலகங்களுக்கப் பாலானதாம்.

மேலும் நெஞ்சுவிடு தூது இறைவனும், உயிரும் அறிவுப் பொருள்களாயினும், அவையிரண்டும் வேறுபாடுடையவை என்பதனைச் சுட்டிக்காட்டி, சைவத்தையும், திருநீற்றையும், கோவிலையும் அவமதிக்கின்ற ஜைனம், பௌத்தம், மீமாம்சகர் முதலானோரின் கூற்றுக்குச் செவிசாய்க்க வேண்டாமென்றும் எச்சரிக்கின்றது.

நெஞ்சுவிடுதூதுவிற்குப் பழையவுரை ஒன்றிருப்பினும், அதனை இயற்றினார் விபரங்கள் தெரிவிக்கப்படவில்லை. கா.சுப்பிரமணியபிள்ளையவர்கள் இதனை உரைநடைப் படுத்தியுள்ளனர். (தர்மபுரம் 1962).

உமாபதி சிவாசாரியாரின் உண்மைநெறி விளக்கம் மெய்கண்ட சாத்திரங்களுட் பதின்மூன்றாவதாக வைக்கப்பட்டுள்ளது.

ஆறு செய்யுட்களைக்கொண்ட இந்நூல், உயிர் படிப்படியாக ஈடேற்றம் பெறுவதற்குரிய பத்துவகையான செயல்களை விபரித்தருளுகின்றது. முதலாவது செய்யுள்: தத்துவவடிவம், தத்துவக்காட்சி, தத்துவத்தூய்மை என்பனபற்றியும். இரண்டாவது செய்யுள்: உயிர்வடிவம். உயிர்க்காட்சி, உயிர்த்தூய்மை என்பன பற்றியும், மூன்றாவது செய்யுள்: சிவவடிவம் பற்றியும், நான்காவது செய்யுள்: சிவக்காட்சிபற்றியும், ஐந்தாவது செய்யுள்: சிவனுடன் பொருந்துதல் பற்றியும், ஆறாவது செய்யுள் : சிவவீட்டின்பத்திற் திளைத்தல்பற்றியும் எடுத்துரைப்பனவாம். இப்பத்துச் செயல்களின் விபரங்கள் பின்வருமாறு:

1. தத்துவவடிவம் : உயிர் முப்பத்தாறு தத்துவங்களிலிருந்து விரிந்த தனு, கரண, புவன, போகங்களிலிருந்து தன்னை வேறாகக் காணல்.

2. தத்துவக்காட்சி : இவ்வாறு உயிர் முப்பத்தாறு தத்துவங் களிலிருந்தும் தன்னை வேறுபடக்காணும் அறிவு.

3. தத்துவத் தூய்மை : மாயையில் விரிந்த தனு, கரண புவன, போகங்களின் சேர்க்கையினால் (மாயா, தனு விளக்கினால்) உயிர் தன் ஈடேற்றத்திற்கு முயலும் போது, இறைவன் திருவருளினாற் தூய்மை அடைதல்.

4. உயிர்வடிவம் : இறைவன் திருவருளாலே ஆணவத்தை மேலெழாமல் அடக்கமுடிகின்றது என்பதனை உயிர் உணர்தல்.



5. உயிர்க்காட்சி : 'நான்' 'எனது' என்ற ஆணவத்தின் குணங்கள் அடங்குகின்ற நிலை.

6. உயிர்த்தூய்மை : உயிர் தன் செயல்களைச் சிவன் செயலாகக் கருதல்

7. சிவவடிவம் : உயிர் தனக்கேற்படுகின்ற இறப்புப் பிறப்புச் சுழற்சியை இறைவன் திருவருளால் உணர்தல்.

8. சிவக்காட்சி : சிவனாகவே தன்னைப் பாவித்து நிற்கும் நிலை.

9. சிவயோகம் : திருவருளுடன் ஒன்றாகப் பொருந்துதல்.

10. சிவபோகம் : இறைவனின் வீட்டின்பத்திற் திளைத்தல் என்பனவாம்.

உண்மைநெறி விளக்கத்தை உமாபதி சிவாசாரியார் இயற்ற வில்லை என்பாரும் உளர். உண்மைநெறி விளக்கத்திற்கு இரு உரைகள் உள. எனினும் இவற்றை ஆக்கியோர் விபரங்கள் தெரிய வில்லை. தருமபுர ஆதீனத்து க.சுப்பிரமணியபிள்ளை இதனை உரைநடையில் எழுதியுள்ளனர். (1962) கே.இராமலிங்க முதலியார் உண்மைநெறி விளக்க ஆராய்ச்சி உரை ஒன்றினை எழுதியுள்ளனர் (மெய்கண்டார் கழகம், காஞ்சிபுரம் 1948).

மெய்கண்ட சாத்திர வரிசையிற் பதினான்காவதாக இடம் பெறுகின்ற சங்கற்ப நிராகரணத்தைச் செய்தருளியவர் உமாபதி சிவாசாரியார் அவர்களே ஆவர். முதனூல்களாகிய சிவஞான போதம், சிவஞான சித்தியார் என்பன புறச்சமயக் கொள்கை

களையே எடுத்துக்கூறி மறுத்துரைப்பன. ஆனால் சங்கற்ப நிராகரணமோ வேதாந்தப் பொருளை உள்ளவாறு உணராது, மயங்கி உணர்கின்ற மாயாவாதிகளின் கோட்பாட்டினையே முதலில் எடுத்துரைத்து, மறுக்கின்றது. ஏனெனிற் சித்தாந்த சைவர் மாயையின் இயல்புகளை, மயக்கற உணர்வோராகையால், மாயாவாதத்தை சித்தாந்தத்துடன் தொடர்புபடுத்தி ஆராய்வது ஏற்றதென்று ஆசிரியர் கருதினார் என்பதனாலேயாம். இரண்டாவதாக அகப்புறச் சமயத்தாராகிய ஐக்கியவாத சைவர் கோட்பாடுகளை எடுத்துரைத்து மறுப்பர். இவர்கள் அநாதியிற் தூய்மையாக இருக்கின்ற உயிரைப், பின் சேர்ந்த மாயாகன்மங்கள் நீக்குகையிலேயே உயிர் சிவனோடு கூடியின்பத்தையனுபவிக்கும் என்றுகூறி, ஆணவத்தினுண்மையை ஏற்றுக்கொள்ளார். சைவ சித்ந்திகளுக்கு இதுவே மூலமலமாகையாலும், அதன் வலியைக் கெடுப்பதற்கே, இறைவன் உயிரை மாயாகன்மங்களுடன் சேர்த்துப் பக்குவப்படுத்துகின்றனன் என்பதனாலும், ஐக்கியவாதி களை இரண்டாவதாக எடுத்து மறுத்துரைப்பர். மற்று, இவற்றைத் தொடர்ந்து அகச் சமயத்தாராகிய பாடாணவாதசைவர், பேதவாதசைவர், சிவசமவாதசைவர், சிவசங்கிராந்தவாத சைவர், ஈசுர அவிகாரவாதசைவர், சிவாத்துவிதசைவர் (நிமித்தகாரண, பரிணாமவாதசைவர்) முதலானவற்றின் கோட்பாடுகளையும் ஆராய்ந்து, அவற்றிற் சைவ சித்தாந்தத்துடன் பொருந்தாத வற்றை, அவர்கள் காட்டிய காரணங்களைக் கொண்டே மறுத்துரைப்பர்.

இந்நூலினை உமாபதி சிவாசாரியார் கி.பி.1313ல் இயற்றியருளினார் எனத் தெரிகின்றது. இந்நூலுக்குப் பழையவுரை ஒன்றிருப்பினும், அது யாரால் எழுதப்பட்டது என்பது அறிந்துகொள்ளப்படவில்லை. எனினும் திருவாவடுதுறை ஆதீன வித்துவானாகிய த.ச.மீனாட்சிசுந்தரம்பிள்ளை, ஸ்ரீ வேலப்பதேசிகமூர்த்திகள் அல்லது அவர்மகன் நமச்சிவாயத் தம்பிரானால் இவ்வுரை எழுதப்பட்டிருக்கலாம் என்று கருதுவர்[31]. இவ்வாறு,

> "உந்தி களிறு உயர்போதஞ் சித்தியார்
> பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்தவருட்
> பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
> உண்மைநெறி சங்கற்ப முற்று"

என்பவற்றின் வரலாற்றினை உணர்ந்து உய்வோமாக

இவைதவிர, உமாபதி சிவாசாரியார் வடமொழியிலுள்ள பௌட்கராமத்திற்கு, வடமொழியிலே சிறந்ததொரு உரையையும் இயற்றியுள்ளனர். இவ்வுரையிற் தமது சிவப்பிரகாசத்திற் தெளிவாக்கப்பட்ட உண்மைகளையே தெளிவாக்கி விபரித்து உள்ளனர். இவருடைய பௌட்கராகம உரையைப் பின்பற்றியே சிவாக்கிர யோகிகள் வடமொழிச் சிவஞான போதத்திற்கு உரையெழுதினார் என்றும் கருதப்படுகின்றது. உமாபதியார் இயற்றிய சதரத்தின சங்கிரகம், நூறு ஆகம நூல்களிலிருந்து திரட்டப்பட்ட செய்யுட் திரட்டாகும். இதற்கு இவர் வகுத்த உரை சதரத்தினலேகினி ஆகும். இதனை ஆகமாந்தத்தின் சாரம் என்பர். மேலும் இவரது குஞ்சிதாங்கிருத்துவம் சிவனின் தூக்கிய பாதத்தின் புகழையும், பெருமையையும், பாதஞ்சல சூத்திரம் நடராசப் பெருமானுக்குரிய நித்திய நைமித்திய பூசை

விதிகளையும் நடராசதுவனி மந்திரத்துவம் என்பது நடராசரின் பெயரின் மகிமையையும் எடுத்தருளுவனவாம்.

மேலும் உமாபதி சிவாசாரியார், அருள்வீழ்ச்சி பெற்று மெய்நெறி நிற்போருக்குரிய மெய்கண்ட சாத்திரங்களை மட்டுமன்றி, பொதுமக்களின் ஆன்மீக உணர்வுகளையும் கருத்திற்கொண்டவராய் எட்டுச் சிறு சமய நூல்களையும் எழுதியுள்ளனர். அவையாவன, கோயிற்புராணம், திருப்பதிக் கோவை, திருப்பதிகக் கோவை, சேக்கிழார் புராணம், திருமுறைகண்ட புராணம், திருத் தொண்டர் புராணசாரம், தேவார அருள்முறைத் திரட்டு, ஞானசாத்திர பஞ்சகம் அல்லது ஞானசரிதை என்பனவாம்.

## சைவ சித்தாந்தச் சிறு நூல்கள் :

இனிச், சைவ சித்தாந்த வரலாற்றில் இடம் பெறுகின்ற சிறு நூல்களையும் இங்கு குறிப்பிடுதல் அவசியமாம். இவையாவும் புறச்சந்தான குரவர் மரபில் வந்த குரவர்களாலே இயற்றப் பட்டனவாம். இவற்றுள் பெரும்பாலானவை, இயற்றினார் பற்றிய குறிப்புகள் அற்றவையாம். அதனாற் பிற்காலத்தவர்கள் இந் நூல்களின் ஆசிரியர்களைப் பற்றித் தெளிவான விபரங்களைத் தரமுடியாதவர்களாக இருக்கின்றார்கள். இஞ் ஞான நூல்கள் சிறிய வடிவினவாயினும், மெய்கண்ட சாத்திரங்களை ஓதியுணர்ந்த மெய்யன்பர்களுக்கு, இவை பெரிதும் துணை செய்வனவாக அமைந்துள்ளனவாம்.



## சதமணிக்கோவை :

இந்நூலினை இயற்றிய ஆசிரியர்பற்றி அறிஞர்களிடையே பலவித அபிப்பிராயங்கள் உள. இந்நூல் பற்றிய முதற்குறிப்பு உமாபதி சிவாசாரியாரின் சிவப்பிரகாசத்திற்கு கி.பி. 1488ல் உரையெழுதிய மதுரைச் சிவப்பிரகாசரே எடுத்தாண்டுள்ளனர். இவர் தமது உரையிற் பிரமாணமாகக் காட்டிய ஞானாதிக்கீர்த்தித் திருவிருத்தம் எனும் செய்யுளிலே, சதமணிக்கோவைபற்றிய குறிப்பு இடம்பெறலாயிற்று. இந்நூலினை இயற்றியருளியவர் உமாபதி சிவாசாரியாருடைய குருவாகிய மறைஞானசம்பந்தரே என்று எம். அருணாசலம் கருதுவர். ஆனால் டி.பி.சித்தலிங்கையா இதனை உமாபதியாரே இயற்றினர் என்பர். ஏனெனிற் தமது குருவாகிய மறைஞானசம்பந்தர், மெய்கண்டநூல்கள் எதனை யாவது இயற்றியிருப்பின், உமாபதியார் தவறாது தமது சிவப்பிரகாசத்தில், அன்றேற் தமது குருவைப் போற்றியருளிய போஃற்றிப் பஃறொடை, அல்லது நெஞ்சுவிடு தூதிலாவது குறிப்பிட்டிருப்பர். அவர் அவ்வாறு செய்யாமையால் இது மறைஞான சம்பந்தரால் அருளப்பட்டதன்று என்றும், உமாபதியாரே இதனை அருளினர் என்றும் கருதுவர். சதமணிக்கோவையின் இருசெய்யுள்களை மாதவச் சிவஞானயோகிகளும் தமது சிவஞானபோதப் பேருரையில் எடுத்தாண்டிருப்பினும், இதன் ஆசிரியர்பற்றி அவரும் எதனும் குறிப்பிட்டாரில்லை. (சிவஞானயோகிகள் சிவபதமடைந்தது கி.பி.1785 ல் ஆகும்) பின் கி.பி.1898ல் இதனை, அச்சேற்றிய மறைமலையடிகளும் இது இன்னாரால் அருளப்பட்ட

தென்பதனை ஆராய்ந்தாரில்லை. ஆனால் பேராசிரியர் க.சுப்பிரமணியபிள்ளை, இதனைத் தர்மபுர ஆதீனத்திற் பேணப்பட்டுள்ள பண்டார சாத்திரங்களுள் ஒன்றாகக் கருதுவர். இந்நூலுக்கு திருவாவடுதுறை ஆதீனத்துப் பொழிப்புரை ஒன்றுள்ளது என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கதாம்.

## துகளறுபோதம் :

இந்நூலின் பொருளாவது, உயிர்க்குற்றமாகிய ஆணவத்தை அகற்றுவதற்கு ஏதுவாகிய சிவஞானத்தை விளக்கும் நூல் என்பதாம். இந்நூலையியற்றியருளினோர் சீர்காழிச் சிற்றம்பல நாடிகளாவர். இவர் உமாபதி சிவாசாரியாரின் மூன்றாவது தலைமுறையைச் சேர்ந்தவராவர். இந்நூல் நூறு வெண்பாக் களையும், ஒரு காப்புச் செய்யுளையும் கொண்டதாம். இந்நூல் சிவஞான விளைவை அனுபவத்திற் கூட்டுவதாகும். அதனாலே தான் மாதவச் சிவஞான முனிவர்கள் தமது பேருரையில் இதனைப் பிரமாணமாகக் கொண்டுள்ளனர். இந்நூலுக்குத் திருவாவடுயான தீனத்து உபதேச பரம்பரையினரில் ஒருவர் உரை கண்டிருப்பினும், அவர் இன்னாரென்று அறியப்பட்டாரில்லை. இவ்வுரையைத் திருவாவடுதுறை ஆதினம் வெளியிட்டுள்ளது (1952), இத்துகளறு போதத்தைப் பின்பற்றியே உண்மைநெறி விளக்கம் அமைந் திருப்பதாக உண்மைநெறி விளக்கத்தின் உரையாசிரியர் கருதுவர். துகளறுபோதத்தின் ஆசிரியராகிய சீகாழிச் சிற்றம்பல நாடிகளின், மாணாக்கராகிய சீகாழித்தத்துவநாதர் அருணந்தி சிவாசாரியாரின் இருபா இருபஃதுவிற்கு நல்லுரை ஒன்றினை இயற்றியுள்ளனர். அதனாற் சிலர் உண்மைநெறி விளக்கத்தை உமாபதி சிவாசாரியார் எழுதவில்லையென்றும், இச் சீகாழித்தத்துவநாதரே எழுதினர் என்றும் கருதுவர்.



## சிவவாக்கியம் :

யோகசித்தர்களில் ஒருவரான சிவவாக்கியர் வரலாறு பற்றிய விபரங்கள் ஏதும் கிடைக்காவிடினும், இவர் பாடிய சிவவாக்கியம் எனும் நூல்கொண்டு இவரைச் சிவவாக்கியர் என்பர். எனினும் பட்டினத்தார் (கி.பி.10ம் நூற்றாண்டு) தமது திருவிடைமருதூர் மும்மணிக் கோவையிலே சிவவாக்கியதேவர் எனப் போற்றுவது இவரையே என்று சிலர் கருதுவர். காலத்தால் இவர் திருமூலருக்குச் சற்றுப் பின் என்றும் கருதுவர். பதி-பசு-பாசம் எனும் முப்பொருள் உண்மைகளை வற்புறுத்தி, உயிர்தன் விடுதலைக்கு அவாவ வேண்டியது சாயுச்சயமுத்தியே என்றும் சிவவாக்கியர் கூறுவர். ஆனால் இதனை ஞானத்தாலே அடையலாம் என்றுகூறி, உருவவழிபாட்டை இகழ்வர். யோகநிலையிற் தெளிந்த உள்ளத்தில், மலரும் மணமும்போல் இறைவன் கலந்து நிற்பன் என்பர். இவர் இவ்வாறு உணர்த்திய சைவ சித்தாந்தக் கருத்துக்களைக்கொண்டு இவரைச் சித்தசைவர் என அழைப்பர்.

## பதி, பசு, பாசப் பனுவல் :

இந்நூல் சிவஞான சித்தியாருக்கு உரையெழுதிய மறைஞான சம்பந்ததேசிகரின் (இவர் கி.பி.16ம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்) குருவினால் இயற்றப்பட்டதாம். இதனை மறைஞானசம்பந்த தேசிகர் தமது சிவஞான சித்தியார் உரையிற் பிரமாணமாக மேற்கொள்வர். இதனைத் திருவாவடுதுறை ஆதீனம் வெளியிட்டுள்ளது.

மேற்குறிப்பிட்ட நூல்களைத்தவிர, தத்துவவிளக்கம், திருநெறிவிளக்கம் திருஞானசாகரம் (இதனை மறைமலையடிகள் கி.பி. 1898 ல் பதிப்பித்துள்ளனர்) சிவபோகசாரம், முதலான சிறு நூல்களையும் சைவ சித்தாந்திகள் துணையாகக் கொள்ளல் அவசியமாம். மேலும் பஞ்சாட்சரப் பதி பசு பாசவிளக்கம், சிவபுண்ணியத் தெளிவு, அஞ்ஞவதைப் பரணி, பிரமசித்தியகவல் முதலான சைவசித்தாந்த நூல்களைக் குமரகுருதாச சுவாமிகள் தமது சிவஞான தீபத்தில் பிரமாணமாகக் காட்டுவர்.

## பண்டார சாத்திரங்கள் :

திருவாவடுதுறை ஆதீனத்தார் மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்குடன், பண்டார சாத்திரங்கள் பதினான்கினையும் சைவ சித்தாந்த நூல்களாகக் கருதுவர். இவை பிற்கால உபதேச பரம்பரையினரால் எழுதப்பட்டனவாம். பண்டார சாத்திரங்களுள் மூன்று தசகாரியம் (பத்துச் செயல்கள்) பற்றி எழுதப்பட்டனவாம். இவற்றைத் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த அம்பலவாண தேசிகர், தட்சிணாமூர்த்தி தேசிகர், சுவாமிநாததேசிகர் என்போர் இயற்றியவராவர். இப் பண்டார சாத்திர வரிசையிலடங்கிய பிற நூல்கள் பற்றிய விபரங்கள் எமக்குக் கிடைக்கவில்லை.

## பத்ததிகள்

ஆகமங்களின் வழிநின்று பதினெண் சிவாசாரியார்கள் இயற்றிய நூல்களே பத்ததிகள் ஆவன. திருக்கோவில்களில் இறைதிருமேனிகளை நிறுவுவதற்கான உற்சவக் கிரியைகளையும், பூசைகளையும் கோவிற் குருக்கள்மார் இப்பத்ததிகளின்



வழிநின்றே செய்வர். இவற்றைச் செய்த சைவாசாரியார்களைக் காளமேகப் புலவர் (15ம் நூற்றாண்டு நடுப்பகுதி) பதினெண் மடத்து முதலிகள் என்பர். எனவே சைவக்கோவிற் கிரியை நெறிகள் சிறப்படையவும், உலகம் நன்மையடையவும், அதனால் உயிர்கள் நன்மையடையவும், இப்பத்ததிகள் கூறுவனவற்றைச் சைவர்கள் அறிந்திருந்தல் அவசியமாம். அகோரசிவாசாரியார் பத்ததி சிவாபூசா விதிக்கு தமிழ் மொழிபெயர்ப்புகள் உள்ளனவாகச் சு.சிவபாதசுந்தரம் கூறுவர்.

## பத்திரகிரியார் புலம்பல் :

பத்திரகிரியார் (கி.பி.10ம் நூற்றாண்டு) பட்டினத்தாரால் துறவு நிலையை யடைந்து யோகநெறியில் நின்றவர். இவர் சிவனை நினைத்து.

> **கடலில் ஒளித்திருந்த கனல் எழுந்து வந்தாற் போல்**
> **உடலில் ஒளித்த சிவம் ஒளி செய்வது எக்காலம் (166)**
> **அவ்வேடம் பூண்டு இங்கு அலைந்து திரியாமல்**
> **சிவவேடம் பூண்டு சிறந்திருப்பது எக்காலம் (28)**

என்பன போன்ற 231 பனுவல்களை இப்புலம்பலிற் பாடியுள்ளனர்.

## திருவாவடுதுறை தருமபுர ஆதீன வரலாறு :

உயிர்கள் உய்திபெறும்வண்ணம், இறைவனே சிவாகமங்களை மகேந்திர மலையில் பராசக்திக்கு முதலிற் கூறியருளினன் எனக் கூறுகின்றன தென்னகத்து மரபுகள். வட மொழி மரபுகள் திருக்கையிலேயே இறைவன் நால்வருக்குக்

கல்லாழின்கீழ் எடுத்தியம்பினன் என்கின்றன. ஆனால் திருமூலர் ஆகமப் பொருளைப், படைப்புத் தொடங்குமுன் இறைவனே வடமொழியிலும், தமிழிலும் ஒரே நேரத்திலே பராசக்திக்கு உபதேசித்து அருள்புரிந்தான் என்பர். இதனை

ஆரிய முத்தமி ழும் உடனேசொல்லிக்
காரிகை யார்க்குக் கருணை செய்தானே
(திருமந்திரம் 65)

தமிழ்ச்சொல் வடசொல் எனும் இவ்விரண்டும்
உணர்த்தும் அவனை உணரலு மாமே
(திருமந்திரம் 66)

எனும் திருமந்திரப் பனுவல்களைப் படித்துணரலாம். பின்னரே சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமரர் எனும் நந்தியருள்பெற்ற நால்வருக்கும் அருளிச்செய்தது, உலகைவிட்ட துறவுநெறி எனக் கருதப்படுகின்றது. ஆனால் இதனைத் தேவாரவாசிரியர்கள் அறம், பொருள், இன்பம், வீடு எனும் நாற்பொருள்கள் எனக் கூறுவர். பின்னர் சிவயோக மாமுனி, வியாக்கிரபாதர், பதஞ்சலி, திருமூலருக்கு அருளிச்செய்தது உலகுடன் இருந்து, உலகுக்கு அருளும் அருள்நெறிகளாம். இந்த உபதேச பரம்பரை வரலாற்றைத் தெரிவிப்பது திருமந்திரம் (67) ஆகும். ஆனால் திருவாவடுதுறை ஆதீனத்தார் பேணியிருக்கும் மரபின்படி ஸ்ரீகண்ட பரமேசுவரர் ஆகமப்பொருளை முதலில் நந்தி தேவருக்கும், நந்திதேவர் அதனைச் சனற்குமாரருக்கும், சனற்குமாரர் அதனைச் சத்திய ஞானதரிசினிகளுக்கும், சத்திய ஞானதரிசினிகள் பரஞ்சோதி முனிவருக்கும் முறையேயருளினர் எனக் கூறுகின்றன. எனவே இந்த நால்வரையும் திருவாவடுதுறை



ஆதீனத்தார் தேவசந்தானத்தார் அல்லது அகச் சந்தானத்தார் எனக் கொள்வர். இம் மெய்நெறியை மண்ணுலகிற்குப் பரப்புமுகமாக எழுந்தருளியவர் பரஞ்சோதி முனிவர் என்றும், அவரே மெய் கண்டாருக்கு உபதேசித்தனர் என்றும் கூறுவர். அதனால் மெய்கண்டர் முதலாக அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியார் எனும் நால்வரையும் புறச்சந்தான பரம்பரையினர் (பூதபரம்பரை) எனத் திருவாவடுதுறையாதீனம் பேணியிருக்கின்ற சித்தாந்த மரபுகள் தெரிவிக்கின்றன. இந்தப் புறச்சந்தான மரபில் வந்த உமாபதி சிவசாரியாரது (கி.பி.1270-1315) மாணாக்கர், அருணமச்சிவாயர் ஆவர். இந்த அருணமச்சிவாயருடைய மாணாக்கர், சித்தர் சிவப்பிரகாசர் ஆவர். இவரது மாணக்கர் பஞ்சாக்கரதேசிகர் எனப் போற்றப்படும் நமச்சிவாய மூர்த்திகள் ஆவர். இவரையே சித்தர் சிவப்பிரகாசர் திருவாவடுதுறையிற் தாமிருந்த இடத்திற் சிவஞானபோத உபதேச சித்தாந்தப் பரம்பரையை மண்ணுலகில் நீடிக்குமாறு கோரி, ஆதீன முதல்வராக நியமித்தருளினர். எனவே திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தை முதலில் நிறுவியவர் இந்த நமச்சிவாயமூர்த்திகள் ஆவர் என்பது தெளிவாம். இவ்வாதீனத்தை இவரது மறுபெயரால் ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகர் ஆதீனம் எனவும் அழைப்பர். மேலும் புறச்சந்தான குரவரில் முதல்வரான மெய்கண்ட தேவர் முதல், இந் நமச்சிவாயமூர்த்திகள் வரையுள்ள ஆசாரிய பரம்பரையினரைப் பூத பரம்பரையின ரெனவும், இந் நமச்சிவாயருக்குப்பின் இவ்வாதீனத்துச் சிவஞான வள்ளலாக எழுந்தருளுகின்ற ஆசாரிய பரம்பரையினரை அபிஷேக பரம்பரையினர் (உபதேச பரம்பரையினர்) எனவும் அழைப்பர்.

மற்றுப் புறச்சந்தான குரவராகிய மறைஞான சம்பந்தரின், இன்னோர் மாணாக்கர் மச்சுச் செட்டியார் ஆவர். இவரது எட்டாவது பரம்பரை மாணாக்கராகிய குருஞான சம்பந்தரே தருமபுர ஆதீனத்தை நிறுவியராவர். இவருக்கு ஞானோபதேசம் செய்தவர் சந்தானகுரவர் மரபில்வந்த கமலை ஞானப்பிரகாசர் ஆவர். இவ்வாதீனம் 16ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே நிறுவப் பட்டதாம். இவ்வாறு உருவாகிய இவ்விரு ஆதீனங்களும் சைவ சித்தாந்த குரு பரம்பரையினரை உருவாக்கிவருவதனால், இச் சிவஞான வள்ளல்களே பன்னிரு திருமுறைகளையும், மெய்கண்ட சாத்திரங்களையும், ஏனைய சித்தாந்த நூல்களையும் ஆராய்ந்தும், அச்சேற்றியும், உரையெழுதியும், சைவ சித்தாந்தஉ லகிற்கு அளித்து வருகின்றவர்கள் ஆவர். இச் சிவஞான வள்ளல்கள் தமது ஆதீனங்களின் குரு பரம்பரையினரைப்பற்றியும், தத்தம் ஞானசிரியர்களைப் பற்றியும், தமது நூல்களிற் குறிப்பிடுவதனாலும், சைவ சித்தாந்தஞானம் வற்றாத நதியாக ஓடிக்கொண்டு இருக்கின்றது. இக்குரு மரபில் வந்தோர் தம் அனுபவ வாயிலாகச் சைவ சித்தாந்த நூல்களைப் பண்டார சாத்திரங்கள் எனும் வடிவிலும் யாத்துள்ளனர். மேலும் இவ்வாதீனங்கள், சைவமக்கள் இந் நூல்களைக் கற்று, உண்மை ஞானத்தை ஈட்டவேண்டி இவற்றை அச்சிலேற்றியும், உரைகள் எழுதியும் பணிபுரிதல் அவசியமாம்.

## சைவ சித்தாந்தக் கழகம், சென்னை :

சைவ சித்தாந்த அறநெறிகளை வளர்க்குமுகமாக மட்டுமன்றி, அவற்றைப் பாமர மக்கள் மத்தியிலும் பரவச் செய்யும்



நோக்கமாகவே இச் சபையை ஜே.எம்.நல்லசுவாமிப் பிள்ளையவர்களும், மறைமலையடியவர்களும், கி.பி 1905 ம் ஆண்டு, திருப்பாதிரிப் பூலியூர் ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் முன்னிலையில் நிறுவினர். தன் நோக்கத்தை நிறைவேற்றுமுகமாக இச்சபை ஏராளமான சித்தாந்த சாத்திர ஆராய்ச்சி நூல்களையும், பன்னிரு திருமுறை நூல்களையும், பிற சைவ சமயத்தத்துவார்த்த நூல்களையும் வெளியிடும் பணியை நிறைவேற்றி வருகின்றது. அதனோடு காலத்தின் தேவைக்கிணங்க சித்தாந்தக் கருத்துக்களை உள்ளார்ந்தமாகக் கொண்ட பல தமிழ் விஞ்ஞான நூல்களை வெளியிட்டுவருவதும் இங்கு குறிப்பிடத்தக்கது. மேலும் இச்சபை 1912ல் தொடங்கிவைத்த "சித்தாந்தம்" எனும் மாதவேடும் சைவ சித்தாந்த மெய்ப்பொருள்கள் பற்றிய ஆய்வுகளையும், சைவசமயக் கட்டுரைகளையும் வெளியிட்டு, சைவ சித்தாந்த கோட்பாடுகளை விளக்கி வருகின்றது. இவையேயன்றிக் கோயில்களிலும், மடங்களிலும் சமயப்பணிகளைச் செய்வதோடு, பாமர மக்கள் தேவையையொட்டிய பிரசாரங்களையும் சமய விரிவுரைகள் மூலம் நிகழ்த்தி வருகின்றது.

இனிப், பதினான்காம் நூற்றாண்டு முதலாகத் தற்காலம் வரைச் சைவசித்தாந்த ஆராய்வுகளின் வளர்ச்சி நிலைகளிற், பங்கு கொண்டோர் பற்றி எமக்குக் கிடைக்கின்ற வரலாற்றுக் கூறுகளையும் சுருக்கமாக நோக்கல் உகந்ததாம்.

பதினான்காம் நூற்றாண்டின் முடிவிலும், பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த சிவரூபானந்ததேசிகரும், அவரது மாணக்கரான தத்துவராயரும் முறையே சிவப்பிரகாசப் பெருந்திரட்டு, குறுந்திரட்டு எனும் நுல்களை யாத்துத் தமிழகத்துச்

சைவ, தத்துவ இலக்கியங்களைத் தொகுத்தளித்திரா விட்டால், நாம் இக்காலத்துத் தமிழகச் சமய, தத்துவ நிலைகளைப்பற்றி அறிந்திருக்கமுடியாது. இவர்கள் எளிமையான பழகு தமிழிற் தமது சமய, தத்துவ அனுபவங்களைப்பற்றிப் பாடியமையாலே, இவர்களுக்குப்பின் வந்தோரும் பாடுதுறை, ஞானவினோதன் கலம்பகம், மோகவதைப்பரணி, அஞ்ஞானவதைப்பரணி முதலான நூல்களை எளிமையாக யாத்தருளினர். இவர்களைத் தொடர்ந்து பாமரமக்களின் உள்ளங்களைக் கசிய வைக்கும்படி எளிமையாக இறைவன் புகழ்பாடியவர் அருணகிரிநாதர் ஆவர்.

## அருணகிரிநாதர் :

(கி.பி.15ம் நூற்றாண்டு) சைவ சித்தாந்த வரவாற்றிற், திருக் கோவில்களில், இன்று நாம் இசைத்து இறைவனை வழிபட்டு வருகின்ற திருப்புகழ் முக்கிய இடம் வகிப்பதாகும். இவர் விஜயநகரத்தைப் பிரபுதேவராயர் ஆண்ட காலத்திற் திருவண்ணா மலையிற் தோன்றியவராவர். இவர் இளமையிற் கூடாவொழுக்க நெறி நின்றவராயப், பின் தன் தவறையுணர்ந்த காலத்து, அதற்குப் பரிகாரமாக முருகக் கடவுளுக்கே தன்னைப் பலியிட விரும்பித், திருவருணை கோயிற் கோபுரத்தின் மேலேறிக் குதிக்கலாயினர். அப்பொழுது, அவரது முற்பிறப்பு நல்வினை காரணமாக முருகப் பெருமானே அவரையாட்கொண்டு, ஞானதீக்கை செய்தருளினர். பின்னொருநாள் "முத்தைத்தரு" என்ற முதலடியை எடுத்துக் கொடுத்து எனது புகழைப்பாடுக என்றருளினர். அதனைத் தொடர்ந்து அருணகிரிநாதர் முருகன்மீது சந்தச் சுவையும், பொருட்சுவையுமிக்கத் திருப்புகழ்களைப் பாடியருளினர். இவ்வாறு இவர் பல தலங்களில் எழுந்தருளியிருக்கின்ற



முருகன்மீது பாடிய பாடல்களே 'திருப்புகழ்' என அழைக்கப்படு கின்றது. இப்பாடல்களில் முருகன் தத்துவமே மும்மூர்த்திகளும் தானாகி, அவர்களுக்கு மேலுமாகி, எல்லாமாகி நிற்கின்ற தத்துவம் எனக்கண்டு, முருகனின் திருவிளையாடல்களைத் தாம் அனுபவித்த முறையிலேயே இத்திருப்புகழ்களில் அதிகம் பாடியுள்ளார். எனினும் சிவபோகத்தை நாடும் உயிரின் தத்துவங்களைக் கூறும், சைவ சித்தாந்தமே அவர்கண்ட மெய்த் தத்துவமாம். "ஐந்து பூதமும் அறுசமயமும்" எனும் பகுதியில் உயிர் ஆணவம் முதலான மலங்களைக் கழுவி, இறைவனையடைய, முயலவேண்டிய நெறிகளைக் கூறியருளுவர்.

சிவனின் திருவருட்சக்தியே முருகன் அவதாரமாகும். சிவபெருமானே குருபரனாக அருளுவரென்பது ஆகமத்துணிபு. இதனை மாணிக்கவாசகரும், "அருபரத் தொருவனவனியில் வந்து, குருபரனாகி யருளி பெருமையை" (போற்றித் திருவகவல்) எனக் கூறுவர். எனவே முருக அவதாரமெடுக்கும் சிவனுக்கும், முருகனுக்கும் வேறுபாடு கண்டிலர் சைவசித்தாந்திகள். இதனைக் கந்தபுராணம் திருவிளையாடற் புராணத்திற், சிவன் உமையிடம் தமது திருவருட் சத்திலே ஆறுமுகன் அவதாரம் என்று கூறுவதாற் கண்டு தெளிக.

**ஆறுதலின் நமது சக்தி அறுமுகன் அவனும் யானும்**
**பேதக மன்றால் நம்போல் பிரிவிலன் யாண்டு நின்றான்**
**ஏதமில் குழவிபோல்வான் யாவையு முணர்ந்தான் சீரும்**
**போதமும் அழிவில் வீடும் போற்றினர்க்குதவ வல்லான்**

**(கந்தபுராணம், திருவிளையாடற் புராணம்)**

மேலும் இறைவன் அவதாரமே முருகன் என்பதனை இன்னோர் செய்யுள்,

அருவமு முருவு மாகி யனாதியாய்ப்
பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன்
னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகமுய்ய
(கந்தபுராணம், திருஅவதாரம்)

எனக்கூறும். முருகன், சிவனின் திருவருட்சக்தி மயமானவன் என்பதனைப் பாம்பன் குமரகுருதாச சுவாமிகளும்,

சத்தெனச் சொலும் தாவில் சிவத்திலும்
சித்தெனச் சொலும் தேவி யிடத்திடத்திலும்
புத்திரப்பெயர் பூண்டில கானந்த
வத்துவின் கழல் வாழ்த்தி வணங்குவாம்
(பரிபூரணானந்தபோதம் பாயிரம் 2)

எனக்கூறிச் சத்தாகவும் (சிவம்) சித்தாகவும் (சக்தி) ஆனந்தமாகவும் (முருகன்) இருப்பவர் பரம்பொருளான சச்சிதானந்தரே என விளக்கியருளுவர். மகேசுவரரது இருபத்தைந்து மூர்த்தங்களில், இருபத்தோராவது மூர்த்தமான சோமஸ்கந்த மூர்த்தம், முருகன் சிவனுக்கும், உமைக்குமிடையில் இருப்பதாக அமையும். இவ்வடிவமும் இறைவனைச் சச்சிதானந்தர் என அழைப்பதன் இலக்கணத்தை விளக்கிநிற்கும். இத் தத்துவத்தினையே வடமொழியிலுள்ள அதர்வசிரோபநிசத், மகேசுவரனுமவர், 



உமையுமவர், விநாயகருமவர், கந்தனுமவர் எனக் கூறியருளும். திருஞானசம்பந்தரும் இறைவன் விநாயகர் அவதாரமாக எடுத்த நோக்கத்தைப்,

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு, தனதடி வழிபடு மவர்இடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினன் பயில்வலி வலமுறை யிறையே

எனக் கூறியருளினர். அதனாலன்றோ அருணகிரிநாதரும் சிவமே எங்கும் வியாபகமானது என்றும், சிவனருள் மயமானவனே முருகன் என்பதனாற் திருப்புகழை முருகன் அவதாரத்தின் மீது பாடியருளினர். முருகனுக்குரிய பூசை விதிகளைக்கொண்ட குமார தந்திராகமமும், சிவபிரானால் உமாதேவியாருக்கு உபதேசிக்கப் பெற்றவகையிலே வகுக்கப்பட்டதாம் என்பதனையும் கண்டுணர்க. குமரகுருபரரும், முருகப் பெருமான் சிவனின்றும் வேறல்ல ரென்பதனைத் தமது கந்தர் கலிவெண்பாவிற் கூறியருளுவதை நாம் கண்டு தெளியலாம்.

உருவு மருவு முருவருவு மாகிப்
பருவ வடிவம் பலவாய் - இருண்மலத்துள் (11)
மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தியளித் தற்குமல
பாகமுற வேகடைக்கண் பாலித்துத் (12)
கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென் றோர்திருப்பேர் கொண்டு -
திருநோக்கால் (24)
சந்நிதியா நிற்குந் தனிச்சுடரே யெவ்வுயிர்க்கும்
பின்னமற நின்றபெருமானே - மின்னுருவம் (36)
(கந்தர் கலிவெண்பா)

எனச் சிவனின் இயல்புகளைக் கூறிப், பின் 37-57 கண்ணிகளிற் சிவன், முருகனாக அவதரிக்கும் திருவுருவ வருணனையைக் கூறுவர். எனவே சித்தாந்திகளுக்கு சத்தி, விநாயகர், முருகன் வடிவமெல்லாம் பெயர் மாத்திரையேயென்றும் பரம்பொருள் ஒருவனேயாம் எனும் தத்துவத்தை, இவர்கள் திருப்பாடல்களிற் கண்டு தெளிவோமாக.

## மதுரைச் சிவப்பிரகாசர் முதலானோர் :

(கி.பி.1489) இவர் சைவசித்தாந்த வளர்ச்சிக்காக அருணந்தி சிவாசாரியாருடைய இருபா இருபஃதிற்கும், உமாபதி சிவாசாரியாரின் சிவப்பிரகாசத்திற்கும் உரைகள் எழுதியவராகக் கருதப்படுகின்றார். இவரைத் தொடர்ந்து விளங்கிய மறைஞானசம்பந்தர் (கி.பி.1553) சிதம்பரத்தில் ஒரு மடத்தில் வாழ்ந்தவர். இவர் ஆகமங்களைத் தழுவிச் 'சிவதருமோத்திரத்தை' 1200 செய்யுள்களில் எழுதினர். மேலும் இவர் "சைவசமயநெறி" எனும் நூலையும் 727 குறள் வெண்பாக்களில் எழுதியுள்ளனர். இக்காலத்திலேயே சிவாக்கிரயோகிகள் (கி.பி.1564) என்று அழைக்கப்படும் சிவக்கொழுந்து தேசிகர் வாழ்ந்தவர். இவர் தமிழ்நாட்டிற் தஞ்சை மாவட்டத்து ஆதீனத் தலைவராக இருந்தவர். சைவசித்தாந்தப் புலவர் எனப் பாராட்டப் பெற்றவர். சிவஞான சித்தியாருக்கு உரையெழுதிய அறுவரில் இவரும் ஒருவர். இவர், சைவபரிபாஷை, தத்துவதரிசனம், சித்தாந்ததீபிகை, வேதாந்த தீபிகை முதலிய பிற நூல்களையும் இயற்றியவர். வட மொழிச் சிவஞானபோதத்திற்கு மாபாடியம் ஒன்றினையும் இயற்றியுள்ளனர். இதே காலகட்டத்திற் கமலை ஞானப்



பிரகாசரும் பல சிவவழிபாட்டு நூல்களை இயற்றலாயினர். பின் துறைசை அம்பலவாண தேசிகர் (கி.பி.1605) சித்தாந்த சிகாமணி, நிட்டை விளக்கம், சன்மார்க்க சித்தியார் முதலான நூல்களைச் செய்யுளிலும், பூபிள்ளை அட்டவணை எனும் சைவசித்தாந்த நூலை உரைநடையிலும் எழுதினர். மறைஞான தேசிகர் கி.பி. 16ம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். இவர் சிதம்பரம் கண்கட்டி மறைஞானபண்டாரத்தின் மாணாக்கர். சிவஞானசித்தியாருக்கு உரையெழுதிய அறுவரில் இவரும் ஒருவராவர். சீர்காழிப்பதியில் சைவ வேளாண்மரபிற் தோன்றியவர். சிவஞானசித்தியாருக்கு உரையெழுதிய அறுவரில் ஒருவரான நிரம்பவழகிய தேசிகரும் இக்காலத்தவரே. இவரும் சைவ வேளாண்குல மரபினரே. இவர் சித்தாந்த சாத்திரப் பயிற்சியும், செந்தமிழ்ப் பாடல்கள் இயற்றும் ஆற்றலும் படைத்தவர். சித்தாந்த சாத்திர நூலாகிய திருவருட் பயனுக்கும் உரைவகுத்தனர். சேது புராணம், திருப்பரங்கிரிப் புராணத்தை இயற்றியவரும் இவரே.

## கச்சியப்ப சிவாசாரியார் :

(கி.பி.1625. சிலர் இவர்காலத்தை 11ம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது 12ம் நூற்றாண்டின் முற்பகுதி என்பர்) காஞ்சிபுரத்தில் ஆதி சைவர் மரபிற் தோன்றியவர். இவர் உள்ளன்போடு முருகக் கடவுளைப் பூசித்து அர்ச்சகராகப் பணியாற்றிவருகையில், ஒருநாள், முருகக் கடவுளே கனவிற்தோன்றி, "காந்த புராணத்திலுள்ள சங்கர சங்கிதையிற் சிவரகசிய கண்டத்திலுள்ள நம் வரலாற்றைத் தமிழிலே பாடக்கடவாய்" என்று கூறித் "திகடசக்கரச் செம்முகமைந்துள்ளான்" என்ற முதலடியையும்

எடுத்துக் கொடுத்தனர். இவ்வாறு இறையருளாற் பாடி முடிக்கப் பெற்ற, முதலாறு காண்டங்களையும் கச்சியப்ப சிவாசாரியார் குமரக்கோட்டத்திலே பல சிவாசாரியார்கள் முன்னிலையில் வாசித்துப் பொருளும்கூறி, அரங்கேற்றினர். வடமொழிச் சிவபுராணங்கள் பத்திற் காந்தபுராணம் சிறந்ததாகும். இப்புராணம் சைவசித்தாந்தக் கருத்துக்களை உள்ளடக்கி யிருக்கின்ற தென்பதனை; அசுரகாண்டத்திற் சூரபன்மனுக்குக் காசிபர் சைவசித்தாந்த உண்மைகளை உபதேசிப்பதன்மூலம் நாம் கண்டுணரலாம். சிவனின் திருவருட்சக்தியே முருகனானார் என்பதனாற், சிவன்வேறு முருகன் வேறல்ல என்ற உண்மையை, அறியாமையினாலேயே சிவபக்தனான சூரபன்மக் அழிய நேரிட்டது என்பதனைக் கந்தபுராணம் விளக்குகின்றது. அதனாற் கந்தபுராணம் கூறும் சைவசித்தாந்த கருத்துக்களை மக்கள், வாசித்தும், கேட்டும் பயனடைதல் அவசியமாம்.

## துறையூர் சிவப்பிரகாச சுவாமிகள் :

(17ம் நூற்றாண்டின் முற்பகுதி) வேலூர் லிங்கநாயக்கர் காலத்தில் வாழ்ந்தவர். இவர் விஜயநகர காலத்துச் சைவமதச் சகிப்புத்தன்மையற்ற, வைணவ அதிகாரிகளினாற் தடைப்படுத்தப் பட்டிருந்த சிதம்பரம் நடராசர் வழிபாட்டுப் பூசைகளை மீண்டும் ஏற்பாடு செய்வதற்காக நாயக்க மன்னனின் ஆதரவைப் பெறும்பொருட்டு வீர சைவராக மாறி, மன்னனைத் தூண்டி நடராசப்பெருமானின் பூசையை மீண்டும் நடைபெறச் செய்தார். இவருடைய நூல்களில் வாதுள ஆகமத்தினைச் சிறப்பாகத் தழுவி எழுதப்பட்ட "அத்வைதவெண்பா" சைவசித்தாந்த தத்துவத்தை 218



செய்யுள்களில் விளக்கும். இவரது மற்ற நூல்கள் வீரசைவ மத, தத்துவங்களைப் பற்றியனவாம். வெள்ளியம்பலத்தம்பிரான் (கி.பி.1650) ல் சிவஞானசித்தியாருக்கு எழுதிய உரை ஞானாபரண விளக்கமாகும். இவர் குமர குருபரரின் சீடராவர்.

## குமரகுருபரர் :

(கி.பி.17ம் நூற்றாண்டின் முற்பகுதி) இவர் திருநெல்வேலி மாவட்டத்திற் கைலாசபுரம் எனும் ஊரில் வேளாளமரபிற் தோன்றியவராவர். இவர் ஐந்து வயது வரை ஊமையாகவிருந்து, திருச்செந்தூர் முருகப்பெருமான் அருளாற் பேசுமாற்றலைப் பெற்றவர் ஆவர். அந்த ஆற்றலைக் கொடுத்த திருச்செந்தூர்ப் பெருமான்மீது "கந்தர் கலிவெண்பா" எனும் பிரபந்தத்தைப் பாடினார். பின் இவர் பல சிவத்தலங்களுக்குச் சென்று சிவதரிசனம் செய்து வருகையிற், சிவஞானவுபதேசத்தைப் பெறவேண்டுமென்ற ஆவலுடையவராய்த், திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தின் குருமூர்த்தியாகவிருந்த ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை யடைந்தனர். அவரும் இவரைக் காசிவாசம் செய்துவரக் காலமெடுக்குமாகையாற், சிதம்பரவாசம் பண்ணிவரும்படி வேண்டினர். அவ்வாறே சிதம்பரத்தில் சிலகாலம் நடராஜப் பெருமானைத் தரிசித்திருந்து மீண்டனர். இவரது பக்குவ முதிர்ச்சியைக் கண்ணுற்ற ஞானதேசிகரும் உபதேசித்தருளிக் காவியுடை வழங்கினர். பின் குமரகுருபரர் காசியையடைந்து, குமாரசுவாமி எனும் மடத்திற் தங்கியிருந்து சிவயோகம் செய்திருக்கையிற், காசியில் முகம்மதியர் மறைத்துவைத்த கேதாரமூர்த்தியை பாதுஷாவின் உதவியுடன் வெளிப்படுத்தி,

ஆலயமும் அமைத்து பூசை நியமங்களையும் நடத்தச் செய்தனர். இவருக்குப் பின் குமாரசுவாமி மடத்தில் ஆறாவது குருமூர்த்தியாக இருந்தவரான தில்லைநாயக சுவாமிகளே கி.பி.1720 திருப்பனந்தாளில் ஒரு மடத்தை நிறுவினர். இம்மடம் காசி மடத்துடன் தொடர்புடையதானபடியாற் திருபனந்தாள் காசிமடம் என அழைக்கப்படலாயிற்று. இவரது நூல்களிற் கைலைக்கலம்பகம், இவரது பிறந்த இடமான கைலையில் எழுந்தருளிய சிவன்மீதும், பிள்ளைத்தமிழ், இரட்டை மணிமாலை என்பன மதுரை மீனாட்சிமீதும், மதுரைக்கலம்பகம் மதுரைச் சொக்காநதர் (சிவன்) மீதும், திருவாரூர் நான்மணிமாலை திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் தியாகராாசர்மீதும், முத்துக் குமாரசுவாமி தமிழ் வைத்தீசுவரன் கோவில் முருகன்மீதும், சிதம்பரம் மும்மணிக்கோவை நடராசப் பெருமான்மீதும் (இதில் தாம் காசிக்குச் செல்வதிலிருந்த துன்பங்களையும், சிதம்பர தரிசனத்திலுள்ள எளிமையையும் குறிப்பிடுவர்) பாடப் பட்டனவாம். காசிக்கலம்பகமும், காசித்துண்டி விநாயகர் பதிகமும், காசியிலிருந்த காலத்தில் இயற்றப்பட்டனவாம். காசியில் இந்துஸ்தானி மொழியிற் தாம் பாண்டித்தியமடையவேண்டு மென்று, கலைமகைள வேண்டித் துதித்த பிரபந்தமே சகலகலா வல்லிமாலை ஆகும். நீதிநெறி விளக்கம் இவர் சிதம்பரத்தில் வாசம்செய்த காலத்தில் இயற்றப்பட்டதாம். சிதம்பரம் செய்யுட்கோவை, பண்டாரமும்மணிக் கோவைகளும் இவர் இயற்றியவையாம். பண்டாரமும்மணிக் கோவையில், இறைவன் உயிர்த் தொகுதிகள் உய்யும்பொருட்டுக் குடிலை எனப்படும் சுத்தமாயையாகிய வயலில், அருளாகிய வித்தையிட்டுக், கருணையாகிய நீரைப் பாய்ச்சி, வேதமெனும் மரத்தினை வளர்த்தனன் என்றும், அம்மரத்தின் நன்மைகள் பலவற்றுற் பலர் இலைகொண்டு மகிழ்ந்தனர்; வேறு பலர் தளிர்கொண்டு மகிழ்ந்தனர்; வேறு பலர் அரும்பும், மலரும், பிஞ்சும் கொண்டு மகிழ்ந்தனர் என்றும், ஆயினும் அம்மரத்தின் வேதாந்தமெனும் உச்சியிற் பழுத்த அருங்கனியைப் பிழிந்த சாரமாகிய சைவசித்தாந்தத் தேனையருந்திப் பயனடைந்தவர் சிலரே என்றும், சைவ சித்தாந்தத்திறனைக் கூறுவர். மேலும் இதே நூலில் இறைவனைப் பல்வேறு வகையிற் கூறும் சமயவாதிகளின் வழிப்படாது, தெய்வத்தன்மையை நன்குரைப்பது சைவ சித்தாந்தமே யாதலால், அதனைப் பின் பற்றி உயிர்கள் நன்னெறியடைதல் வேண்டுமென்றும் வேண்டுவர்.



## துறைமங்கலம் சிவப்பிரகாசர் :

(17ம் நூற்றாண்டின் முற்பகுதி) இவர் திருமலை நாயக்கர் (கி.பி.1645) காலத்தவர் ஆவர். காஞ்சிபுரத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட இவர், திருநெல்வேலி வெள்ளியம்பலவாணர் தம்பிரானிடம் சீடராகவிருந்து கல்விகற்றவர். இவரியற்றிய முப்பது நூல்கள் பலவற்றுள், இவர் சைவசித்தாந்த நெறிகளைப்பற்றியும், சமயகுரவர் திருப்பாடல்கள் பற்றியும் விபரிப்பர்.

## தாயுமானவர் :

(கி.பி.1705 - 1742) தமிழகத்தில் வேதாந்தத்தையும் சைவசித்தாந்தத்தையும் சமரசப்படுத்திய சமயா சாரியார்களில் தாயுமான சுவாமிகளும் ஒருவர் ஆவர்.

"வேதமுட னாகம புராணஇதி காசமுதல்
வேறுமுள கலைக ளெல்லாம்
மிக்கான அத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா யெடுத் துரைக்கும்
ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை
உண்டுபணு ஞானமாகும்"

என்று வேதாகமங்கள் இறைவனை அடையும் படிகள் எனக் காட்டுவர். மேலும் "அவனன்றி ஓரணுவுமசையாது" "சித்தும் சடமும் சிவத்தைவிட இல்லை" "நீயன்றி நானார்?" என்று சைவசித்தாந்தத்தின் இறை நுட்பங்களைத் தெளிவுறுத்துவர். மேலும் தில்லையில் நடைபெறும் பிரபஞ்சக் கூத்து, உயிர் விடுதலை கருதியே என்றும் விபரிப்பர்.

## மாதவச் சிவஞான முனிவர் :

மாதவச் சிவஞான யோகிகள் திருவாவடுதுறை ஆதினத்துக் குருபரம்பரையில் வந்த பேரூர் - ஸ்ரீ வேலப்ப தேசிகர்பால் சிவதீட்சையும், சிவஞானோபதேசமும் பெற்றுச் சிவஞான யோகிகள் என அழைக்கப்படலாயினர். இதனை மாதவச் சிவஞான முனிவர் தாம்பாடிய காஞ்சிப்புராணத்துக் கடவுள் வாழ்த்துச் செய்தியிற் குறிப்பிடுவர். இவர் வடமொழி, தென் மொழிச் சைவசித்தாந்த நூல்களைக் கற்றுணர்ந்தவராகையால் மெய்கண்டாருடைய சிவஞான போதத்திற்கு, வடமொழிப் பிரம்மசூத்திரத்திற்கு வட மொழியில் எழுந்த பேருரைகளைக் காட்டிலும், சிறந்த தொரு மாபாடியத்தைத் தமிழில் இயற்றினார். இவ்வுரையின் சிறப்புக் கருதி இவரை "மாபாடியச்



சிவஞானயோகிகள்" என அழைத்தனர். இவர் தமது பேருரையில், மெய்கண்ட தேவர் காட்டிய சைவசித்தாந்த சுத்தாத்துவித நிலையினைத் தம் மெய்யுணர்வுகொண்டு நிறுவியராவர், எனவே தான் இவருடைய பேருரை வடமொழியிலும், தமிழிலுமுள்ள சைவசித்தாந்தவுண்மைகளையெல்லாம் இனிது விளக்கும் சிறந்தவுரை நூலாகப் போற்றப்படுகின்றது. இவர் வடமொழி யிலுள்ள இரத்தினத்திரயம், சிவதத்துவவிவேகம், பௌட்கர விருத்தி முதலிய நூல்களையும் பிரமாணமாகக் கொண்டு, சங்கரரின் கேவலாத்துவிதக் கோட்பாட்டினையும், இராமானுசரின் விசிட்டாத்துவிதக் கோட்பாட்டினையும், மாத்வரின் துவைதக் கோட்பாட்டினையும் மறுப்பதோடு, பூர்வமீமாம்சை முதலான புறச்சமயக் கோட்பாடுகளையும் உண்மைக்குப் பொருந்துவனல்ல என்று எடுத்துக்காட்டுவர். அகச்சமயங்களிலொன்றான சிவாத்துவித சைவக் கொள்கையையும், முரண்படுமிடங்களில் மறுத்துரைத்துச், சைவ சித்தாந்தக் கொள்கையை நிலைநாட்டிய வராவர். மேலும் திருவாவடுதுறை ஆதீனத்துத் தம்பிரான் ஒருவர் "மரபட்டவணை"யெனும் சைவசித்தாந்த நூலை எழுதிய பொழுது, தருமபுரத்தைச் சேர்ந்த தம்பிரான் ஒருவர் இதற்குச் சித்தாந்த மரபு கண்டனம் ஒன்றை எழுதினர். சிவஞானமுனிவர் இந்தச் சித்தாந்த மரபு கண்டனத்தை மறுத்து எழுதிய நூலே, சித்தாந்த மரபு கண்டனம் ஆகும். சிவஞானபோதத்திற்குரிய சிற்றுரை, சிவஞான சித்தியார் சுபக்கத்திற்குப் பொழிப்புரை என்பனவும் இவரால் இயற்றப்பட்டவையாம். மற்றும் சிவஞான சித்தியார் சுபக்கத்தில்,

"என்னைப் பவத்திற் சேராவகை எடுத்து" என்ற செய்யுளில், எடுத்து எனும் சொல்லுக்கு "சிவசமவாதவுரை மறுப்பு" எனும் நூலை இயற்றினர். இதனை ஓதிய பண்டார சந்நிதி அதற்கு எழுதிய மறுப்புரைக்கு, மறுத்து இவர் எழுதிய நூலே "எடுத்து என்னுஞ் சொல்லுக்கு இட்ட வைரக்குப்பாயம்" என்ற நூலாகும். பின் சிவஞான சித்தியாருக்கு ஈழத்து ஞானப்பிரகாசர் எழுதிய உரை பொருந்தாதென விளக்கிச் "சிவசமவாதவுரை மறுப்பு" எனும் நூலையும் இயற்றியருளினார். பின் வடமொழி நூல்களான சித்தாந்தப் பிரகாசிகை, "சுலோக பஞ்சகம்" சிவதத்துவ விவேகம் முதலான நூல்களையும் தமிழிலே மொழிபெயர்த்தனர். சிவஞானசுவாமிகள் கி.பி.1785ல் சிவபதமடைந்தனர். பிற்காலச் சைவசித்தாந்த வரலாற்றில் இவரது நூல்கள் மைல்கற்களாம் என்பதில் ஐயமில்லை.

மாதவச் சிவஞானயோகிகளைத் தொடர்ந்து அவரது பன்னிரண்டு மாணாக்கர்களில் முதல்வராகிய ஸ்ரீ கச்சியப்ப முனிவரும், வடமொழி, தமிழ்மொழிகளில் பெரிதும் வல்லவராய்ப், பல தமிழ் நூல்களை இயற்றியருளினர். இவற்றுள் பஞ்சாக்கிர தேசிகரந்தாதி, முப்பொருளுண்மையை நூறு செய்யுள்களில் விளக்கியருளுகின்றது[32]. இவர் கி.பி. 1790ம் ஆண்டு சிவபரிபூரண தசையையடைந்தருளினர்.

## அருட்பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள்:

இவர் 19ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்து கி.பி.1874ல் இறைவனடியைச் சேர்ந்தனர். இவர் இறையின்பத்திற்



திளைத்து, அனுபவவாயிலாகப் பாடிய பாடல்களே இன்று "அருட்பாக்கள்" என அழைக்கப்படுகின்றன. இவ்வருட்பாக்கள் தேவாரவாசிரியர்களின் திருப்பதிகங்களைப் போல் இறையனுபவங்களை எளிமையான முறையில் உணர்த்துவனவாம். இவ்வருட்பாக்களில் இராமலிங்க சுவாமிகள், "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என வற்புறுத்திநிற்கையிற், சைவத்தையும், சைவசித்தாந்தக் கருத்துக்களையும் நடுவிலே மிளிரவைப்பர்.

**''சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே, சாத்திரச்**
**சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே ஆதியிலே**
**அபிமானித் தலைகின்ற உலகீர், அலைந்தலைந்து வீணே**
**நீர் அழிதல் அலகலவே"**

என்றும்,

**''எய்வகைசார் மதங்களிலே பொய்வகைச்சாத் திரங்கள்**
**எடுத்துரைத்தே எமதுதெய்வம் எமதுதெய்வம் என்று**
**கைவகையே கதறுகின்றீர் தெய்வம் ஒன்றென் றறியீர்"**

என்றும்,

ஒருவனே தெய்வம் என உணர்த்தினும், உயிர்கள் நாடி உய்யவேண்டிய சைவத்தையும், சைவ சித்தாந்தத்தையும்

**பூவெலாம் புதுமணம் பொலியும் ஒண்தளிர்க்**
**காவெலாம் சிவமணம் கமழு கின்றது**
**தேவெலாம் செறிவது சிவம் கனிந்தமெய்ந்**
**நாவெலாம் புகழ்வது நன்மை சான்றது**
**(குடும்பகோஷம், தரிசனப்படலம்)**

என்றும்,

**நலங்கொள்சிவ யோகமணம் நாற்றிசையும் மணக்கும்**
**ஞானமணம் கந்திக்கும் மோனமணம் நாறும்**
**விலங்கலல்சித் தாந்தமணம் பரிமளிக்கும் இன்பா**
**வேதாந்த மணங்கமழும் வேதமணம் வீசும்**
**(திருவருட்பா, தனிப்பாசுரப் பகுதி)**

என்றும் கூறியருளுவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரின் வேண்டுதலின்பேரில் ஆ.பாலகிருஷ்ணபிள்ளை அவர்கள், இராமலிங்கசுவாமிகளின் திருவருட்பாக்களையெல்லாம் கீர்த்தனைப்பகுதி, வசனப்பகுதி, வியாக்கியானப்பகுதி, உபதேசப் பகுதி, திருமுகப்பகுதி, தனிப்பாசுரப்பகுதி, முதல் திருமுறை அல்லது பெருநூல்பகுதி, இரண்டாம் திருமுறையும் மூன்றாம் திருமுறையும் அல்லது திரு ஒற்றியூர்ப்பகுதி, ஐந்தாம் திருமுறை அல்லது திருத்தணிகைப்பகுதி, நான்காம் திருமுறையும் ஆறாம் திருமுறை முன்பகுதியும் அல்லது பூர்வஞான சிதம்பரப்பகுதி, ஆறாம் திருமுறை இடைப்பகுதி அல்லது உத்தரஞான சிதம்பரப் பகுதி, ஆறாம் திருமுறை முடிந்த பகுதி அல்லது சித்திவளாகப் பகுதி எனப் பன்னிரண்டு பகுதிகளாகத் தொகுத்து, ஆராய்ந்து வெளியிட்டுள்ளனர். இவ்வாறு 19ம் நூற்றாண்டில் வாழ்ந்து, சைவமும் சைவசித்தாந்த சன்மார்க்க நெறியும் தழைக்க,

**''உலகம் தழைக்க உயிர் தழைக்க, உணர்வு தழைக்க**
**ஒளி தழைக்க, உருவம் தழைத்த பசுங்கொடியே,**
**உள்ளத்தினிக்கும் தெள்ளமுதே''**

என்று கூறியருளிச் செய்த திருவருட்பாக்களை நாமும் ஓதி உய்வோமாக.



## இராமேசுவரத்தைச் சார்ந்த பாம்பனூர் குமரகுருதாச சுவாமிகள்:

(கி.பி.1850 - 1929) பாம்பனூரைப் பிறப்பிடமாகக் கொண்ட இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் அப்பாவு ஆகும். சிறுவயதிலே கல்வி, கேள்விகளிற் சிறந்தவராய் விளங்கி, அரனடிக்கன்புடையவராய் விளங்கினர். இவ்வாறு இவர் அறுமுகச் சிவனை நினைந்து சஷ்டி நூலைத் தினமும் 36 முறை ஓதிவந்த பொழுது முருகப்பெருமானே,

"கங்கையைச் சடையிற் பரித்து" என்ற அடியை எடுத்துக் கொடுத்தனர். இந்த முதற் பாடலைப் பாடியது முதலே இவருக்குத் துறவுநிலை ஏற்படலாயிற்று. பின் முருகப்பெருமானே ஞான குருவாக எழுந்தருளி "ஒருமொழி ரகசியமாகச் சொல்லி" மறைந்தனன் என்றும், பின்னொரு நாள் கனவில் "வாழையிலையில் அன்னமும் பாலுமிட்டுப் பிசைந்து இதை என்னுடன் உண்பாயாக" என அழைக்க இவரும் அதனை அருந்தினர் என்றும் தெரிகின்றது. இந்நிகழ்ச்சிகளுக்குப் பின்னரே இவர் சைவசித்தாந்த ஆராய்ச்சிகளிலும், கவிபாடும் ஆற்றலிலும் சிறந்து விளங்கினார். அதனால் உலகத்தின் அஞ்ஞான இருளை நீக்கும் பொருட்டுச் சிவஞானதீபம் எனும் இவரது நூல் சைவசித்தாந்தக் கோட்பாடுகளை விளக்குகின்ற உரைநடை நூலாகும். திருப்பா, தகராலய ரகசியம், பரிபூரணானந்த போதம் என்னும் பனுவல்கள் வடமொழி, தமிழ்மொழி சைவசித்தாந்த நூல்களிலிருந்து பிரமாணங்கள் பலவற்றை மேற்கோளாகக் கொண்டு விளங்கும் நூல்களாம். சிவஞானதீபத்தில் பதி-பசு-

பாசவியல் முதலான பத்து இயல்களின்கீழ் பதி-பசு-பாச இலக்கணங்களும், உயிர்கள் தம் ஈடேற்றத்திற்காகிய சாதனங் களையும் விபரிப்பர். சிவஞானதீபம் கூறுகின்ற அனுட்டான விதிகளையும், சாதனங்களையும் பக்குவமுடைய சீடருக்கு உபதேசிப்பதற்கென மகாதேசோமண்டலசபையொன்றையும் நிறுவியுள்ளனர்.

இவர்களேயன்றி சைவசித்தாந்த நூல்கள் யாவற்றையும் தொகுத்தும், பகுத்தும், ஆராய்ந்தும் எழுதியோர் வரிசையிற் பல பேராசிரியர்கள் உளர். இவர்களே தமிழ் மொழியிற் சைவசித்தாந்தக் கோட்பாடுகள் எப்போது, எவ்வாறு தோன்றின? சைவசித்தாந்தம் என்றால் என்ன? சைவசித்தாந்த நூல்களின் குறிக்கோள் என்ன? என்பன போன்ற சிவநெறி வரலாற்றை ஆராய்ந்து காட்டியவர்கள் ஆவர். காலத்தின் தேவைக்கேற்ப பலதரப்பட்ட கல்வித்துறைகளில் நாட்டமுடைய சைவசித்தாந்த மெய்யன்பர்களுக்கு இவைபெரும் வரப்பிரசாதமாகும். இத்தகைய நூல்களை முன்னின்று எழுதியோர் வரிசையில் சுவாமி விருத்தாசலம் எனும் மறைமலையடிகள், ஜே.எம்.நல்லசுவாமிப் பிள்ளை, கா.சுப்பிரமணியபிள்ளை, திருவாவடுதுறை ஆதீனவித்துவான் த.ச.மீனாட்சிசுந்தரம்பிள்ளை, திருவாவடுதுறை ஆதீனவித்துவான் தெ.ஆ.ஸ்ரீநிவாசாரியன், ம.இராசமாணிக்கனார், க.வெள்ளைவாரணன், பாலூர் கண்ணப்பமுதலியார், வ.சு.செங்கல்வராய பிள்ளை முதலானோர் அடங்குவர். இவ்வரிசையில் ஆராய்ச்சி செய்த மேலைநாட்டவர்களும் உளர். இவ்வாராய்ச்சி நெறிகள் சைவசித்தாந்த அருள்நெறியைச் சுரந்து கொண்டிருப்பனவாம்.



நாமிதுவரை ஆராய்ந்து காட்டியவாறு, தமிழகத்திற் சைவ சித்தாந்த முடிபுகளை முடிந்தமுடிபாக ஏற்றுக்கொண்ட பின்னரும்கூட, வடமொழி உபநிடதங்கள், பிரம்மசூத்திரம், கீதை முதலான உலகோர்க்கருளிய பொது நூல்களைத் தழுவித் தமிழிற் பல சமய நூல்கள் எழலாயின. அவற்றுள் கைவல்லிய நவநீதம், விசாரசாகரம், விசார சந்திரோதயம், விருத்திப் பிரபாகரம், தத்துவாநுசந்தானம், தத்துவ போதினி, ஆன்மபுராண நூல்கள் என்பன குறிப்பிடத்தக்கனவாம். இவைதவிர, ஈழத்து காசிவாசி ஸ்ரீ செந்திநாதையருடைய தேவாரம் வேதசாரம், சைவ வேதாந்தம், ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியார் அருளிய வடமொழிப் பிரம்ம சூத்திர சிவாத்துவித சைவபாடியம் மொழிபெயர்ப்பு, என்பன தமிழில் இந்த நூற்றாண்டின் ஆரம்ப கட்டத்தில் வேதாந்தத்திற்கும் சைவ சித்தாந்தத்திற்குமுள்ள அடிப்படையொற்றுமைகளை உணர்த்தும் நூல்களாம்.

இவ்வாறு நாமிதுவரை ஆராய்ந்துகாட்டியபடி, சைவ சித்தாந்த உண்மைகளை நெறிப்படுத்துவதற்கு வடமொழியிலும் பல நூல்கள் எழுந்தன என்பது சைவ சித்தாந்த வரலாற்று உண்மையேயாம். எனினும் சைவ சித்தாந்தத்தை புறச்சந்தான குரவர்கள், மண்ணுலகம் தழைக்க முழுவடிவிற் தமிழில் நெறிப்படுத்தியபின், இம் மெய்கண்ட சாத்திரங்கள் சைவ சித்தாந்தத்தின் திட்ப நுட்பங்களை முழுமையாக விளக்கும் ஆற்றல் பெற்றவையாக மிளிரலாயின. எனவே இந்நூல்கள் உருவாகியபின்னர், சைவ சித்தாந்த மெய்ப்பொருளைத் தமிழுலகம் தெரிந்துகொள்வதற்கு, வட மொழி நூல்களின் அறிவு அவசியமில்லை என்பதும் உண்மையே. எனினும் வடமொழி யிலுள்ள சைவ சித்தாந்த நூல்களைத் தேடிப் பேணுவது,

ஆராய்வது, ஒப்பிட்டு நோக்குவது என்பன ஆராய்வுள்ளம் கொண்ட அறிஞர்களின் பணியாகும். இப்பணியில் இலங்கையிற் பேராதனைப் பல்கலைக் கழகம், கொழும்புப் பல்கலைக்கழகம் என்பவற்றில் வடமொழித்துறை விரிவுரையாளராகப் பணி யாற்றியவரும், எனது குருவுமாகிய கலாநிதி கோ.சுந்தரமூர்த்தி அவர்கள் அயராது உழைத்து, "வடமொழியிற் சைவ சித்தாந்தம்" எனும் தொடரில் வடமொழிச் சைவ சித்தாந்த நூல்களைத் தமிழ்ப் படுத்தியும், வடமொழி உரைகளை ஒப்பிட்டு ஆராய்ந்தும் வந்தவர் ஆவர். இவருடைய சிவபணியினாற் தமிழ்கூறும் நல்லுலகம் பெரிதும் நன்மையடையும் என்பது திண்ணமே.

கோ.சுந்தரமூர்த்தி அவர்களின் ஆய்வின்படி ஆகமங்களை யொட்டிச், சைவ சித்தாந்தக் கருத்துக்களை முறைப்படுத்தி வெளியிட்ட மிகப்பழைமையான நூல் வடமொழியிலிருந்த தத்துவப் பிரகாசிகை என்றும், இதனை எழுதிய போஜதேவ மன்னன் கி.பி.1044ல் வாழ்ந்தவராகலாம்[33] என்றும் கருதுவர். மேலும் இவர் மாதவச் சிவஞானயோகிகள் காலம்வரை, வடமொழிச் சைவ சித்தாந்த நூற்கள் தமிழ்மக்களாற் படிக்கப் பெற்று வந்தனவெனவும், மாதவச் சிவஞானயோகிகள் தமது சித்தாந்தப் பிரகாசிகையைத் தாமே தமிழில் மொழிபெயர்த்து இருக்கிறார் என்றும், அதன்பின் சைவ சித்தாந்த உலகம் மெய்கண்ட சாத்திரங்களுடன் நின்றுவிட்டதென்றும் கருதுவர். ஆனாற் சிவஞான போதமும் சிவஞானபாடியமும் எனும் கழக வெளியீட்டு நூல் (1952), சித்தாந்தப் பிரகாசிகை எனும் நூல் சைவ சித்தாந்த ஆசிரியரான சர்வாத்மசம்பு சிவாசாரியரால் எழுதப்பட்டதென்றும், இந்நூலைச் சிவஞான முனிவர் காஞ்சிபுரத்திலிருந்த காலத்திற், தமிழில் மொழிபெயர்த்தனர் என்றும் குறிப்பிடுகின்றது. எனவே எத்தகைய சான்றுகளைக் கொண்டு கோ.சுந்தரமூர்த்தி அவர்கள் சித்தாந்தப் பிரகாசிகையைச் சிவஞானமுனிவரே இயற்றினர் எனக் கருதுகின்றனர் என்பது புலனாகவில்லை. மேலும் சிவஞான சித்தியாரின் பரபக்கம் சர்வாத்மசம்பு சிவாசாரியாருடைய சித்தாந்தத் தீபிகையைத் தழுவி எழுந்ததென்று மறைஞானசம்பந்த தேசிகர் குறிப்பிடுவர். சித்தாந்தப் பிரகாசிகையும், சித்தாந்தத் தீபிகையும் வெவ்வேறு நூல்களா அன்றேல் ஒரு நூலினையே இரு பெயர்கள்கொண்டு அழைத்தனரா என்பது எமக்குப் புலனாகவில்லை. மற்று கோ.சுந்தரமூர்த்தி அவர்கள் தேடுகின்ற வடமொழிச் சைவ சித்தாந்த நூல்களிற் சிவாக்கிரபாஷியமும் ஒன்றெனக் குறிப்பிடுவர். மற்று இதே காலகட்டத்தில் இன்னோர் ஆய்வாளரான கலாநிதி டி.பி.சித்தலிங்கையா அவர்கள் பதினான்காம் நூற்றாண்டுவரை சைவசித்தாந்தத்தின் தோற்றமும் வளர்ச்சியும் (Dr.T.B.Siddhalingaiah, Origin and Development of Saiva Siddhanta upto 14th Century, Nepolean press, Madurai 1979) என்ற சைவ சித்தாந்த வரலாற்று நூலை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். இது தற்கால ஆய்வுத்திகளைத் துணைக்கொண்டு தமிழிலுள்ள பல மூல நூல்களையும், பிற வரலாற்று மூலங்களையும் துணைக்கொண்டு எழுதப்பட்ட ஆய்வு நூலாகும். இதுவொரு சிறந்த சைவ சித்தாந்த வரலாற்று நூலெனில் மிகையாகாது. எனினும் இவரும், சைவ சித்தாந்த வரலாற்றில், மணிக்கவாசக சுவாமிகளுக்குக் கொடுக்கவேண்டிய முக்கிய விடத்தினைத் தட்டிக்கழித்துவிட்டுள்ளார் என்பதனை இந்நூலைப் படிக்கும் சைவ அன்பர்கள் புரிந்து கொள்வார்கள் என்பது திண்ணம்.



# ஈழத்துச் சைவசித்தாந்த வரலாற்றறிமுகம்



ஈழத்துச் சைவ சமய, சைவ சித்தாந்த மரபுகளின் தோற்ற வளர்ச்சிகளுக்கும், தமிழகத்துச் சைவ சமய, சைவ சித்தாந்த மரபுகளின் தோற்ற வளர்ச்சிகளுக்குமிடையே காலவிடை வெளிகள் எதுவும் இருந்ததற்கான ஆதாரங்கள் இல்லை. இந்த உண்மையை, இருாமாயணம், மகாபாரதம், கந்தபுராணம் மகாவம்சம் முதலான இலக்கியங்களும், பிற வரலாற்றுச் சான்றுகளும், இலங்கையின் ஆதிக்குடிகள் இலிங்க வழிபாட்டையுடைய மக்கள் என எடுத்துக்காட்டுவதன் மூலம் நாம் உணர்ந்துகொள்ள முடிகின்றது. இராமாயணம், இலங்கை மன்னன் இராவணன் எப்பொழுதும் பொன்னாலான இலிங்கத்தைக்கொண்டு திரிபவன் எனப்போற்றும். மகாபாரதம்



தெற்கே தலயாத்திரை செய்த அர்ச்சுனன் திருக்கேதீசுவரரை வழிபட்டதாகக் கூறும். கதிர்காமத்துடன் தொடர்பான முருகன் வரலாறும், சிவவழிபாட்டுக் கூறுகளையே எமக்கு உணர்த்தி நிற்கின்றது. மேலும் தட்சிண கைலாச மகாத்மியம் 5ம் அத்தியாயம் இராவணன் குடும்பத்தவர்கள் யாவரும் சிவபக்தர்கள் என விபரிக்கின்றது. அதன்படி இராவணனின் தாயான கைகஸி நாள்தோறும் அரிசிமாவினாற் சிவலிங்கஞ் செய்து சிவனைப் பூசித்துவந்தாள் என்றும், அதனை கண்ணுற்றுவந்த இராவணன் தன் தாயார் பூசைக்கென வடகைலை சென்று சிவனைப் பிரார்த்தித்து பொன்மயமான சிவலிங்கமொன்றினைப் பெற்றுத் திரும்புகையில், வழியிலே சலம்கழிக்க விரும்பியவனாய் இருக்கையில், பிரமசாரி வடிவில் எதிரேவந்த விநாயகப் பெருமானிடம் இலிங்கத்தைப் பாதுகாப்பிற்காகக் கொடுத்து விட்டுச் சலம்விடச் சென்றசமயம், இராவணன் குறிப்பிட்ட நேரத்திற்குள் வந்து சிவலிங்கத்தைப்பெறத் தவறியமையால், விநாயகர் அதனை நிலத்திலே பதித்துவிட்டுச் செல்ல நேரிட்டது. திரும்பிவந்த இராவணன் அதனைப் பெயர்க்க முயன்றபோது அது முடியாதுபோகவே, விசையாக இழுக்க அது மாட்டின் செவிபோல் இழுபட்டது. அதனால் அதனைக் கோகர்ணலிங்கமென அந்த இடத்திலேயே இருக்கட்டும் எனப் பதித்துவிட்டுத் திரும்பவும் இராவணன் வட கைலாயத்திற்குப் போகும் வழியில் விட்டுணுபகவான் கிழப்பிராமணர் வடிவிற்தோன்றி, எங்கே செல்கின்றாய்? என வினவினர். இராவணன் தன் தாய் பூசிப்பதற்காக ஒரு சிவலிங்கத்தை இறைவனிடமிருந்து பெற்றுவர வட கைலைக்குச் செல்வதாகக் கூறினான். அப்பொழுது அக்கிழப்

பிராமணர், தென் கைலாயத்தில் (திருகோணமலையில்) எழுந்தருளியிருக்கும் இறைவனைப் பூசித்தாற், சிரமமில்லாது பெறலாம் எனக்கூற, இராவணனும் திருக்கோணாசலத்தை யடைந்து பிரார்த்திக்க, அப்பெருமான் அருள்பாலிக்காததாற் கோபமுண்டு தனது வாளினால் தென் கைலாச மலையை வெட்டியசைத்து மலையைத் தூக்க முயல்கையிற், சிவன் தன் திருவடிப் பெருவிரலால் மலையை நசிக்கவே, நசிந்து பல காலம் அழுவானாயினான். பின் வாகீசமுனிவர் 'சிவன் சாமகானத்திற் பிரியமானவர்' என உணர்த்தியபொழுது, அவனும் சாமகானம் பாடி சிவனை மகிழ்வித்துக் கோடீஸ்வர லிங்கத்தைப்பெற்றுத் திரும்புகையிற், திரும்பவும் விஷ்ணுவே கிழவேதியராகச் சென்று 'அவன் தாய், இராவணன் விதி வசத்தால் தென் கைலை மலையடிவாரத்தில் விழுந்தழிந்தான் எனக் கேள்வியுற்று, மகனின் பிரிவால் இறந்தாள் என்று கூறவும், அதனைக்கேட்ட இராவணன் கவலைகொண்டு அழ, அக்கிழ வேதியர் சிவலிங்கத்துடன் அழுதல் கூடாது என்று கூறி, அச் சிவலிங்கத்தினை அம்மலையின் பக்கலிற் பதித்துத் தாயின் ஈமக் கிரியைகளை அங்கேயே செய்யும்படி தேறுதல் செய்ய, இராவணனும் அவ்விதமே செய்தனன். அதனால் அவன் தாயும் சீவனைவிட்டு நற்கதியடைந்தாள். அதன் பின் இராவணன் திருகோணேசுவரர் தலத்தையடைந்து தன் தாய் சிவகதியையடையவேண்டுமென்று வழிபட்டுத், தன் நகரத்தை யடைந்தான். இத்தகைய வரலாறுகள் குறிப்பிடுகின்ற இராவணனுடைய சிவபக்தியை நினைந்தும், மன மகிழ்ந்தும் பிற்காலச் சிவபக்தர்களும் விதந்தோதியுள்ளமை கண்டின்புறத் தக்கது.



தனக்கு முற்பட்ட காலத்து சிவபக்தர்களின் அன்பின் திறனைப் பாராட்டுகின்ற மாணிக்கவாசகர்,

**ஏர்தரும் ஏழுலகேத்த எவ்வுரு வுந்தன் னுருவாய்**
**ஆர்கலிசூழ் தென்னிலங்கை அழகமர் வண்டோதரிக்கு**
**பேரருளின்ப மளித்த பெருந்துறை மேயபிரான்**
**(குயிற்பத்து வரி 5-7)**

என்று இறைவன் இராவணன் மனைவி மண்டோதரிக்கு அருளியதனைப் பாராட்டுவர். திருமூலர்,

**தாங்கி இருபது தோளுந் தடவரை**
**ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி**
**ஆங்கு நெரித்தம ராவென் றழைத்தபின்**
**நீங்கா அருள்செய்தான் நின்மலன் தானே**
**(திருமந்திரம் 350)**

என்றும், திருநாவுக்கரசர்,

**இலங்கை மன்னன் இருபது தோளின்**
**மலங்க மால்வரை மேல்விரல் வைத்தவர்**
**(திருநள்ளாற்றுப் பதிகம்)**

என்றும், திருஞானசம்பந்தர்,

**வண்டம ரோதிமடந்தை பேணின**
**பண்டையி ராவணன் பாடி யுய்ந்தன**
**தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்**
**கண்டம ளிப்பன வஞ்செழுத்துமே**
**(பஞ்சாட்சரப் பதிகம்)**

என்றும் இராவணனின் சிவபக்தியைப் பாராட்டுவர். மேலும் திருஞானசம்பந்தர் திருக்கோணேசுவரர் பதிகத்தில் இறைவன், இராவணன் செருக்கினால் மலையைப் பெயர்க்க முயன்ற போது, கால்விரலால் அவன் செருக்கை அழித்துப் பின், அவன்தன் சிறுமையை நினைந்து இறைவனைத் துதிக்கவே, அவனுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தருளினன் என்பதனை "எடுத்தவன் தருக்கை இழித்தவர் விரலால், ஏத்திட ஆத்தமாம் பேறு கொடுத்தவர்" என்றும், திருநூற்றுப் பதிகத்தில் "இராவணன் மேலதுநீறு" என்றும் போற்றுவதிலிருந்து இலங்கையிற் சைவ வழிபாட்டின் பழமையையும், பெருமையையும் நாம் ஓரளவிற்காவது மதிப்பிட முடிகின்றது.

இராவணன் வழிபட்ட திருக்கோணேசுவரரை மட்டுமன்றி, ஆதிநாகர்கள் வழிபட்ட திருக்கேதீசுவரரையும் தேவாரவாசிரியர்கள் துதித்து வழிபடலாயினர். திருஞானசம்பந்தர் முதலிற் கோணேசுவரரைத் துதித்துப் பாடியபின், கேதீசுவரத்தானின் செய்ய பாதங்களைப் பணிந்தேத்தினர். இதனைச் சேக்கிழார்

அந்நகரில் அமர்ந்து அங்கண் இனிது மேவி
யாழிபுடை சூழ்ந்தொலிக்கு மீழந்தன்னில்
மன்னு திருக்கோணமலை மகிழ்ந்து செங்கண்
மழவிடையார் தமைப் போற்றி வணங்கிப் பாடிச்
சென்னி மதி புனைமாட மாதோட்டத்தில்
திருக்கேதீச்சரத்தண்ணல் செய்யபாத
முன்னி மிகப் பணிந்தேத்தி யன்பரோடு
முலவாத கிழிபெற்றார் உவகையுற்றார்

(பெரியபுராணம்)



என விபரிப்பர். திருஞானசம்பந்தர் கோணேசுவரப் பெருமானின் மேலான நிலையை "பெருங்கடல் வண்ணனும் பிரமன் இருவரும் அறியாவண்ணம் ஒள் எரியாய் உயர்ந்தவர்" எனப்போற்றிப், பின் பக்தர்கள் துன்புறும்போது துயர் துடைப்பவர் என்பதனைக் "கூற்றைத் திரிந்திடா வண்ணம் உதைத்தவர்க்கருளும் செம்மையார்" என்றும் புகழ்பாடுவர். ஆனால் கேதீச்சரத்தானை வழிபடுமிடத்து,

"கைதொழக் கடுவினை யடையாவே" என்றும்
"தொழுதெழக் கெடுமிடர் வினைதானே" என்றும்
"அண்ணல் நண்ணும் கேதீச்சரம் அடைபவர்க்கு
அருவினையடையாவே" என்றும்
"முடிகள் சாய்ந்தபடி பேணவல்லார்தம் மேல்
மொய்த்தெழும் வினை போமே"

என்றும், உயிர்கள் சரியை, கிரியை நெறிநின்று இறைவனை வழிபட, மலபந்தங்களை நீக்கியருளுவர் என்று எடுத்துரைத்து, இறைவன் புகழ்பாடுவர். சுந்தரமூர்த்திநாயனாரும்

"அங்கத்துறு நோய்கள் அடியார் மேல்
ஒழித்தருள்வான்" என்றும்
"வெய்யவினையாய தடியார்மேல்
ஒழித்தருள்வான்" என்றும்
"ஊனத்துறு நோய்கள் அடியார்மேல்
ஒழித்தருள்வான்" என்றும்
"பாவம் வினை அறுப்பார் பயில்
பாலாவியின் கரைமேல்"

என்றும் உயிர்களின் வினைகளையும், உடல்நோய்களையும் தீர்த்தருளுபவன் திருக்கேதீசுவரத்தான் என்றும் போற்றுவதனையும் நாம் கருத்திற் கொள்ளத்தக்கது. இதனாலன்றோ தேவாரவாசிரியர் காலத்திற்கு முற்பட்டவரான (கி.பி.500 - 600) திருமூலரும், சித்தாந்த தத்துவத்தைப் பாமர மக்கள் தமிழில் கூறியருளிய பொழுது, இலங்கையைச் சிவபூமி (திருமந்திரம் 2747) என்று ஆதாரம் காட்டினர்.

இனி மகாவம்சம் தரும் வரலாற்றுத் தகவல்களின்படி பாண்டுகபாய மன்னன் (கி.மு.377 - 307) ஒரு சிவலிங்கக் கோவிலைக் கட்டினான் எனத் தெரிகின்றது (X - 102). மேலும் சிவிகாசாலா, சொத்திசாலா எனும் இல்லங்களை அமைத்துக் கொடுத்தனன் என்றும் கூறும் (மகாவம்சம் VII). இவற்றிலொன்று சிவலிங்கங்களைகொண்ட வழிபாட்டுத் தலம் என உரையாசிரியர் கூறுவர். இவைதவிரக் கி.மு.மூன்றாம் நூற்றாண்டு முதலாகக் கிடைக்கப் பெறுகின்ற சாசனங்களிலும், ''சிவ'' என்ற பெயரைக்கொண்ட மக்கள் பற்றிய குறிப்புகள் உள. பௌத்தமத வருகைக்கு முற்பட்ட சிங்கள மன்னர் சிலரும் "சிவ" என்ற பெயரைப் பெற்றிருந்தனர் என்பதனை மகாவம்சம் உறுதிப்படுத்தும். செ.குணசிங்கம் ஆராய்ந்துகாட்டிய "சிவ" என்ற பெயரைத் தாங்கிய சாசனங்களை நோக்குகையில் "சிவ என்ற பக்தன்" "சிவ என்ற பக்தியுள்ள பெண்" "சிவநகர என்ற இடத்து ஒருபகுதி நிலம், காமணி சிவ என்பவனாற் கொடுக்கப்பட்டது". "பூசிக்கத்தக்க சிவபூதி" போன்ற குறிப்புகளும் இடம்பெற்றுள்ளன இவற்றைக் கருத்திற்கொண்டு சிவ வழிபாடுடைய மக்கள் இலங்கையிற் கி.மு.6ஆம் நூற்றாண்டு முதலாக வாழ்ந்து



வந்துள்ளனர் எனச் செ.குணசிங்கம் கருதுவர். நாம் மேலே ஆராய்ந்து காட்டிய இராவணன் தாய், இராவணன் மனைவி மண்டோதரி, இராவணன் வரலாறுகள், இலங்கையின் சிவ வழிபாட்டின் தோற்ற நிலைகளை கி.மு. 1000 - 900 ஆண்டுகளுக்கு பின் நகரவைக்கின்றன என்பது இங்கு சுட்டிக்காட்டவேண்டிய தொன்றாகும். கி.பி.4ம் நூற்றாண்டளவில் மகாசேனன் தரைமட்டமாக்கிய சிவலிங்கக் கோவில்கள் யாவும் (மகாவம்சம் XXXVII 40 - 41) இப்பழைய மரபின்வழி வந்தவையாம்.

இலங்கையின் சைவ சமயத் தோற்ற வளர்ச்சிகள் இவ்வாறிருக்கையிற், சைவ சித்தாந்த மரபுகளும் தமிழகத்தைப்போற் கிறித்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளில் உருவாகியிருக்கலாம் என்பதற்குத் திருவாசகம், திருமந்திரம், தேவாரங்கள் ஆகியவற்றின் குறிப்புக்களையே நாம் சான்றுகளாகக் கொள்ளவேண்டும். சாசனங்கள் குறிப்பிடுகின்ற "பூசிக்கத்தக்க" "பக்தியுள்ள" எனும் பதங்களிலிருந்து இறைவனைப் பக்திசிரத்தையுடன் வழிபடுகின்ற நெறிகளை வகுத்தருளிய ஆகம வழிபாட்டு நெறிகளையே நாம் அவதானிக்க முடிகின்றது. மேலும் அனுராதபுரக் காலத்தில் பன்னிரண்டு சைவக் கோவில் அழிபாடுகளையும், உருவத்திருமேனிகளையும் தொல்லியலாய்வுகள் வெளிக்கொணர்ந்துள்ளன. இக்கோவில்களெல்லாம் ஆகம வழிபாட்டுப் பூசைகளின் திருத்தலங்களாகும். ஆகம நெறிக்கிணங்கிய பூசைகளும், வழிபாடுகளுமே சைவ சித்தாந்த சாதனைகளின் முதலிரு நெறிகளையும் எமக்குணர்த்துவனவாம். கி.பி.10ம் நூற்றாண்டு முதலாகச், சோழர் பொல்லநறுவவையில் ஆட்சி புரிந்த காலத்திற் சைவசித்தாந்த மரபுகள் பேணப்பட்டு

இருந்தன என்பதற்குப் பொல்லநறுவவையில் முழுவடிவிற் கிடைக்கப்பெற்றுள்ள சிவாலயங்களும், தொல்லியலாய்வுகளிற் கிடைக்கப்பெற்ற சைவாகமக் கோவில்களிற் பாவிக்கப்பட்ட தீபம் முதலான பூசைக்கருவிகள், நித்திய, விசேட, பெறுபேற்றுக் கிரியைகளுக்கு வழங்கப்பட்ட தானங்களைக் குறிப்பிடும், கல்வெட்டுக்கள் முதலானவையும் தெளிவான தகவல்களைத் தருவனவாம். மற்றும் பல்வேறு வரலாற்று மூலங்கள் மூலம் பேணப்பட்டிருக்கின்ற வரலாறுகளின்படி, கிழக்கிலங்கையிற் சைவாகம முறைப்படியான கோவில்கள் பல கலிங்கத்து மாகன் (கி.பி.1215), குளக்கோட்டன் (கி.பி.1223) முதலானோரால் நிறுவப்பட்டுக் கோவில் நிர்வாகங்களுக்கான மானியங்களும் வழங்கப்பட்டிருந்தன எனத் தெரிகின்றது. மேலும் இலங்கைச் சைவக் கோவில்களிற் சிறப்பாக வரலாறு, நிருவாகம், மானியங்கள், பூசைமுறைகள் என்பன பற்றித் தெளிவான தகவல்களை, எமக்களிக்கக் கூடியனவாக இருப்பவை மட்டக்களப்புச் சைவக் கோவில்களேயெனில் மிகையாகாது. இக்கோவில்களிற் பேணப் பட்டிருந்த சைவாகமமுறை வழிபாட்டினைக் குறிப்பிடுகின்ற கல்வெட்டுப் பாடலொன்று,

**பேர் பெறும் தென் திருக்கோவில்**
**சிவாலயம் சிவபூசை தேவாரமும்**
**செய்முறைகள் என்றென்றும் நீடூழி காலமும்**
**தேசம் தளம்பாமலும்**
**ஏர் பெருகு பரிதி குலராசன்**
**குளக்கோட்டார் எவ்வுலகமுய்வதாக**
**ஏழு கோபுரம் கோயில் தொழுவார் தினம்**
**தேட எங்கெங்கு மியற்றினரே**



என்று குறிப்பிடுவதிலிருந்து நாம் கண்டு தெளியலாம். மேலும் கோணேசர் கல்வெட்டிற் கூறப்பட்டுள்ள தொழும்புப் பணிகள், தம்பலகாமத்தில் இன்றுவரை பரம்பரை பரம்பரையாகப் பேணப்பட்டுவருகின்றன என்று பண்டிதர் இ.வடிவேல் குறிப்பிடுவர். அவ்வாறு குளக்கோட்டு மன்னனால் வகுக்கப்பட்ட தொழும்பாளர் பணிகள் ஆவன:-

1. பாசுபதர் : ஆகமமுறைப்படி பூசை செய்வார்கள்
2. தானத்தார் : அன்றாடம் வரும் வரவு செலவுகளைக் கணித்தல், இறைவனுக்குத் தினமும் ஆராத்தி எடுத்தல், நடனமாடுதல், பன்றி குற்றல், முதலிய கடமைகளைச் செய்வர்.
3. வரிப்பத்தார் : பட்டாடை கொய்தல், கட்டல், புஷ்பபத்திர மெடுத்தல், விளக்கேற்றல், கோவிற் தளபாடங்களை விளக்குதல், தீர்த்த மெடுத்துக்கொடுத்தல், நெல்லுக் குத்தல், சந்தனமரைத்தல், கொடியேற்றல், இறக்கல், கட்டல், சுற்றல் போன்ற பணிகளைச் செய்தல் என்பனவாம்.

இங்கு திருமூலர் கூறிய,

**முன்னவனார் கோயிற் பூசைகள் முட்டிடின்**
**மன்னற்குத் தீங்குள வாரிவளங் குன்றுங்**
**(திருமந்திரம் 518)**

எனத் திருக்கோவிற் பூசைகள் நாட்டுவளத்தை மிகுவிக்கும், அன்றேல் வாரிவளம் குறையும் என்ற கருத்தினையும் ஒப்பிட்டு நோக்கல் உகந்ததாகும். மேலும் மட்டக்களப்புத் திருப்படைக் கோவில்களிற் பூசைகளை நிகழ்த்துவதற்கென நாகார்ச்சுன புரத்தலிருந்து இலிங்கத்தை அணிந்த "சங்கமர்" எனும் குருக்கள் மார் கொண்டுவரப்பட்டு நியமிக்கப்பட்டனர். இவர்களைக் குளக்கோட்டான், தான் திருப்பணி செய்த கோவில்களிலே நியமித்தான். இக்கோவில்களிற் பதினெண்சிறைகள் செய்ய வேண்டிய தொண்டுழியங்களுக்குத் தலைமைதாங்கு பவர்களாகத் தூய்மையும், பொறுப்புமுடைய வேளாளரே நியமிக்கப்பட வேண்டுமென்ற நியதியுமிருந்தது. மட்டக்களப்புச் சைவ மக்கள் வழிபட்டுவரும் பெரும்பாலான திருக்கோவில்கள், தமது பண்டைய வழமைகளை இன்றுவரை பேணியிருப்பதும், இவற்றின் சிறப்பியல்புகளில் ஒன்றாம்.

இனிக், காந்தத்திலுள்ள தட்சிணகைலாசபுராணம் அகத்தியர் கரசைக்கோவிலை மகுடாகமவிதிப்படியும், வன்னிராசன் தான் தோன்றீசுவரத்தைச் சிவாகமப்படியும், குள்க்கோட்டன் திருக்கோணேசுவராலயத்தை "அருங் காரணாகமத்தின் புரிசிசித்தம் பூண்டவரைப் பூசனை" எனக் காரணாகம விதிப்படி பூசை முறைகளை நிகழ்த்தினன் எனவும் கூறுதலால், இலங்கையிற் பேணப்பட்டிருந்த சைவாகம முறைக் கோவில் வழிபாடு களை வழிபட்ட மக்களும் உணர்ந்திருந்தனர் என்பதனையே உணர்த்தி நிற்கின்றது எனலாம். (இத்தட்சிண கைலாசபுராணம் குளக்கோட்ட மன்னன், வன்னிராசன் முதலானோர்பற்றிக் கூறுவதனாலும், இவர்களுக்குப் பிற்பட்டோர் தகவல்கள் எதனையும் குறிப்பிடாமையாலும் கி.பி.13ம் நூற்றாண்டைச் சார்ந்த நூலெனக் கருதமுடிகின்றது.)



கி.பி. 16ம் நூற்றாண்டிற் பண்டிதராசராற் தமிழிற் பாடப் பட்ட தட்சிணகைலாசபுராணம், கி.பி. 13ம் நூற்றாண்டு முதலாக யாழ்ப்பாணத்தை ஆண்ட ஆரியச் சக்கரவர்த்திகளை "சைவந்தோன்றிடத் தோன்றினான்" எனப்போற்றும். ஆரியச்சக்கரவர்த்திக்கு முற்பட்ட சிங்கையாரிய மன்னனின் பிரதம அமைச்சர் புவனேகவாகரினாற் கி.பி.884ல் கட்டப்பெற்றுப், போர்த்துக்கேயரால் இடிக்கப்பெற்ற நல்லூர்க் கந்தசுவாமி கோவிலைத் திரும்பவும் இரகுநாத மாப்பான முதலியார் கி.பி. 1734ல் கல்லினாலும், செங்கற்களினாலும் கட்டினார் எனச் ஸேர் விலீயம் குறொப்ரன் துவைனம் (கி.பி.1869 - 1896) வடமாகாண அதிகாரியாகக் கடமையாற்றியகாலத்துத் தயாரித்த இந்து ஆலயங்களின் அட்டவணை என்ற கையெழுத்து நூற்குறிப்பிடும். மேலும் இந்நூலிற் கண்ட குறிப்புப்படி, "55 திருவிழாக்கள் வருடந்தோறும் நடைபெறும். ஆறு காலப்பூசை, மகோற்சவம் ஆடி - ஆவணியில் 25 நாட்கள் நடைபெறும். சுவாமியை மக்கள் தோளிற் காவிக்கொண்டு நடந்தும், வாகனத்தில் வைத்தும் வீதிவலமாகச் சுற்றி வருவார்கள்" எனவும் தெரிகின்றது.

மட்டக்களப்பிற்போலல்லாமல், யாழ்ப்பாணத்து மக்களின் ஆரம்பகாலச் சைவ மரபுகள் சிலவற்றை ஆங்கிலேயரே பேணித் தந்துள்ளனர் என்பது வெள்ளிடைமலை. ஆனால் இந்தச் சைவ மரபுகளைச் சங்க இலக்கியங்களிலொன்றான மதுரைக் காஞ்சி

எமக்குப் பேணித்தந்துள்ளமையையும் இங்கு குறிப்பிடல் உகந்ததாம். அதன்படி மதுரையிற் சிவபெருமான் முதலான தெய்வங்களின் கோவில்களின் விழாவில் ஏழாம் நாள் சிறந்தது என்றும், ஏழாம் நாள் அந்தியிற் கடவுள் தீர்த்தமாடுதல் கொண்டாடப்படும் (மதுரைக்காஞ்சி - வரி 427 - 428 ; 453 - 455) என்றும் கூறுகின்றது. எனினும், கி.பி. 18ம் நூற்றாண்டில், மரபுக் கதைகளையும், கைலாயமாலை, வையாபாடல், பரராசசேகரனுலா, இராசமுறை முதலான நூல்களை அடிப்படையாகக் கொண்டு, மயில்வாகனப் புலவராலியற்றப்பட்ட யாழ்ப்பாண வைபமாலை, விஜயன் இலங்கையையடைந்த காலத்து (கி.மு.483) நகுலேசுவரம், முனிசுவரம், தொண்டேசுவரம், திருக்கேதீசுவரம், திருக்கோணேசுவரம் முதலான ஈசுவரங்களிற் திருப்பணிகளைச் செய்தனன் எனக் குறிப்பிடும். இவற்றுட் தென்னிலங்கையில் அமைந்த தொண்டேசுவரர் (சந்திரசேகரர் கோவில்) கோவிலுடன் தொடர்பான வரலாறுகள், அக்கோவில் வழிபாட்டு முறைகள் கிறிஸ்து சகாப்தம் முதலாகச் சைவாகமுறைப்படியமைந்து விளங்கினவாம் என்பதனை எடுத்துணர்த்துவனவாம்.

இத்தகைய பின்னணிகளினூடாக இலங்கையிற் பேணப் பட்டிருந்த சைவசித்தாந்த மரபுகள், காலப்போக்கிற் தமிழகத்து மெய்கண்ட சாத்திர வளர்ச்சிகளினாற், சைவசித்தாந்த ஆராய்ச்சிப் படிப்புகளைக் கோவில்களிலும், பிரபுக்களின் மாளிகைகளிலும், திண்ணைப் பள்ளிகளிலும் பண்டிதர்களும், புலவர்களும் மேற் கொண்டிருந்தனர் எனிற் தவறாகாது. காலப்போக்கில் மேலை நாட்டு மதங்களின் வருகையுடனும், மத, மொழி மாற்றங் களுடனும், பல பெரியார்கள் தம் மதத்திற்காகவும், மொழிக்



காகவும் தம் வாழ்க்கையையே தியாகம் செய்யலாயினர். போர்த்துக் கேயர் யாழ்ப்பாணத்தில் 500க்கு மேற்பட்ட சைவாலயங்களைத் தரைமட்டமாக்கிச் சமய வழிபாடுகளுக்கு தடை போட்டிருந்தனர். ஒல்லாந்தரும் மக்களை வலிந்திழுத்து மதம்மாற்றிக் கிறித்தவப் பெயர்களையும் வழங்கலாயினர். அதனாற் சிலர் உள்ளத்தே சிவவழிபாட்டைப் பேணிக்கொண்டு புறத்தே கிறிஸ்தவர்போல் நடிக்கலாயினர். இதனை யாழ்ப்பாண உத்தியோகத்தர் லட்சணக்கும்மி,

**ஒவ்வோர் புருஷர்க்குந் தங்கள்பேர் சூட்டினர்**
**உயர்சிவ பத்திசெய் யாதுத டுத்தனர்**
**சைவர்க ளானாலும் தொம் பிலிப் பென்றபேர்**
**சொன்ன தறியாயோ ஞானப் பெண்ணே**

என விபரிக்கும். இத்தகைய சூழ்நிலையில் வாழ்ந்து, பின் தன் வாழ்வைச் சைவத் தொண்டிற்காக அர்ப்பணித்த பெருமகனே திருநெல்வேலி ஞானப்பிரகாசர் ஆவர். (கி.பி.17ம் நூற்றாண்டு) இவர் வாழ்க்கையுடன் தொடர்பான தகவல்களின்படி, டச்சுக்காரர் யாழ்ப்பாணத்துச் செல்வந்தர்களை ஆடுமாடுகளை வழ்ங்குமாறு கேட்டிருந்தனர் என்றும், சைவசமயக்கோட்பாடுகளுக்கு எதிரான உயிர்க்கொலையை விரும்பாத சுவாமி ஞானப்பிரகாசர், தமது முறைவந்ததும் யாழ்குடாவைவிட்டு நீங்கிச், சிதம்பரத்தை அடைந்து வாழ்ந்துவந்தனர் என்றும் தெரிகின்றது. பின் இவர் வங்கத்திற்குச் (Bengal) சென்று வேதாகமங்களைக் கற்றுப், பின் காசியிற் துறவு நிலையையடைந்தனர். அதன் பின்னர் தமிழகத்திற் திருவண்ணாமலை ஆதீனத்தின் தலைவராக இருந்தகாலத்திற் சைவசித்தாந்த நூல் ஆராய்ச்சிகளிலும், எழுத்துக்களிலும்

ஈடுபட்டிருந்தனர். அருணந்தி சிவாசாரியாருடைய சிவஞானசித்தி யாருக்கு அறுவர் எழுதிய உரையைத் திருவாவடுதுறை ஆதினத்தார் பேணிவந்துள்ளனர். அவ்வுரைகளில் ஒன்று சுவாமி ஞானப்பிரகாசர் எழுதியதாம். இவர் வடமொழியில் எழுதிய நூல்களாவன, பௌட்கராகமவிருத்தி, சிவஞானபோதவிருத்தி, சித்தாந்தசிகாமணி, பிரமாணதீபிகை, பிரசாததீபிகை, அஞ்ஞான விவேசனம், சிவயோகசாரம், சிவயோகரத்தினம் என்பனவாம். சைவசித்தாந்தத்தில் இறைவனுக்கும், உயிர்களுக்குமுள்ள தொடர்பு ஆண்டான், அடிமை அல்லது ஆள்பவன், ஆளப்படுபவன் என்பதாம். அதாவது உயிர் பிறவியற்ற நிலையான சிவானந்தப் பேரின்பத்தில் அதுவதுவாக அழுந்தித்திளைத்து நிற்பினும், சிவனேயாகி விடமுடியாது என்பதே இதன் பொருளாம். ஆனால் சுவாமி ஞானப்பிரகாசர் உரையானது முத்தியிற் சிவமும், உயிரும் சமம் என்ற கோட்பாட்டை நிறுவுவதாக அமைந்ததாம். இக்கோட்பாடு சைவசித்தாந்திகள், அகச்சமயத்தார் எனக்கருதும், சிவசமவாதச் சைவர் கோட்பாடாகும். அதனால் "என்னைப் பவத்திற் சேராவகை எடுத்து" என்ற சி.சித்தியார் சுபக்கச் செய்யுளுக்கு "சிவசமவாதவுரை மறுப்பு" எனும் நூலையியற்றிய மாதவச் சிவஞானமுனிவர், ஞானப்பிரகாச சுவாமிகள் எழுதிய சிவசமவாதவுரைக்கும் "சிவசமவாதவுரை மறுப்பு" என்ற கண்டன நூலை எழுதியுள்ளனர். இதனாலோ என்னவோ திருவாவடுதுறை ஆதீனத்தார் இன்னமும் ஞானப்பிரகாசர் உரையைப் பதிப்பிக்க முன்வரவில்லையெனத் தெரிகின்றது. எனினும் உயிர் முத்தியில் நிற்கின்ற நிலைபற்றி இலக்கணம் கூறுகின்ற வடமொழி சர்வஞ்ஞானோத்திர



ஆகமத்தின் யோகபாதத்தினை விளக்கும் இவரது சிவயோகரத்தினம் எனும் நூலைப் பிரெஞ்சு இந்தியவியல் ஆராய்ச்சி நிறுவனம் பதிப்பித்துள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது. மேலும் இவர்கள் நூல்களெல்லாவற்றையும் ஆராய வாய்ப்புக் கிடைக்கின்ற ஒருவரே, இவர் சைவத்திற்கும், சைவசித்தாந்த வளர்ச்சிக்கும் ஆற்றிய பணிகளைச் சிறப்பாக எடுத்துக்கூற வல்லவர் ஆவர். எனவே இவரது நூல்கள் பற்றி ஆழ்ந்த அறிவு இல்லாத நிலையில், இவர் ஈழத்துச் சைவசித்தாந்த இலக்கிய வளர்ச்சிக்கு வித்திட்ட சித்தாந்தி என்றுமட்டுமே கூறமுடிகின்றது. மற்று, சுவாமி ஞானப்பிரகாசரின் வடமொழியாக்கங்களிலே பல ஆண்டுகளாக ஏட்டுவடிவிலிருந்த சைவசித்தாந்த நூல்களாகிய பிரமாணதீபிகாவிருத்தி, சிவஞானபோதவிருத்தி, சித்தாந்த சிகாமணி என்பனவற்றை நல்லூர் த.கைலாசபிள்ளையவர்கள் அச்சிடுவதற்காக ம.முத்துக்குமாரசுவாமிக் குருக்களும், ச.சுப்பிரமணிய சாத்திரியவர்களும் பரிசோதித்துக்கொடுத்தனர். இவற்றுடன் சிவயோகரத்தினம், சிவபோகசாரம் முதலான நூல்களையும் த.கைலாசபிள்ளை 1927 ம் ஆண்டில் அச்சேற்றினர் எனத் தெரிகின்றது.

சுவாமி ஞானப்பிரகாசரின் சிவஞானசித்தியார் தமிழ் உரையை முதன் முதலில் இணுவில் நடராசையர் கி.பி.1887ல் வெளியிட்டனர் என்றும், பின் சண்முகசுந்தர முதலியார் கி.பி.1888-89ல் பிற உரைகளுடன், இவரது உரையையும் சேர்த்து வெளியிட்டனர் என்றும் நாம் அறியமுடிகின்றது. மேலும் இவரது உரையைக் குறிப்புரைகளுடன் வதிரி வித்துவான் சி.தாமோதரம் பிள்ளை வெளியிட்டனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு சுவாமி ஞானப்பிரகாசர் திருவண்ணாமலையில் சைவ சித்தாந்த ஆராய்வுகளை நடத்திக் கொண்டிருக்கையிற், தஞ்சாவூரிலுள்ள சைவ ஆதினமடத்தைச் சேர்ந்த கனகசபாபதி யோகிகள் (கூழங்கைத்தம்பிரான்) இலங்கையிற் சைவசித்தாந்தப் படிப்புகளை மேற்கொண்டிருந்தனர். கரவைவேலன் கோவைப் பதிப்பாசிரியர் தி.சதாசிவம் தெரிவிக்கின்ற தகவல்களின்படி வடமொழி, தென்மொழிகளிற் சிறந்தவரான கூழைங்கைத் தம்பிரானைக் கொச்சிக் கணேசையர், வில்லவராச முதலியார், கோபாலச் செட்டியார், அவர் மகன் வண்ணை வைத்திலிங்கம் செட்டியார் (இவரே ஒல்லாந்த அரசிடம் அனுமதிபெற்று வண்ணை வைத்தீசுவாமி கோயிளலை கி.பி.1787 - 1791 ல் கட்டி முடித்தவர்) முதலானோர் தமது மாளிகைகளிற் தங்கும் வசதி களைச் செய்துகொடுத்துச் சைவசமய சாத்திரப் பயிற்சிகளைப் பெற்றவர்கள் எனத்தெரிகின்றது. இக்கூழைங்கைத் தம்பிரானிடம் (இவர் கி.பி.1795ல் தேகவியோகமாகினார்) தமிழும் சமய சாத்திரப் பயிற்சி பெற்றோர்களுட் சிறந்து விளங்கியவர் இருபாலைச் சேனாதிராயமுதலியார் ஆவர். இதனை

''சான்ற கனக சபாபதி யோகியாம்
போன்றவர் பிறரிலாப் புண்ணிய னடிதழீஇ,
ஒவ்வொரு நூலையு மொவ்வொரு முறைவினாய்
அவ்வவர் சொற்பொரு ளனைத்தையு மகத்தமைத்
தூழ்படு திறமிதென் றுலக முவப்பக்
காழ்படு கருமையிற் கற்று நிறைந்த
திதமுறு நுண்மதிச் சேனாதி ராய
முதலி பாலினும்....''

(மயில்வாகனப் புலவர் புலியூரந்தாதி, ம.க.வேற்பிள்ளை உரை : சிவசம்புப் புலவர் பாயிரச் செய்யுள்.)



என்று சிவசம்புப்புலவர் கூறுவதிலிருந்து உய்த்துணரலாம். திருவாவடுதுறை மாதவச் சிவஞானமுனிவர் காலத்தவரான கூழங்கைத்தம்பிரான், சைவசித்தாந்த சாத்திரங்களிலேயே இருபாலைச் சேனாதிராயருக்குப் பயிற்சியளித்தனர் என்பதும், இருபாலைச் சேனாதிராயர் சைவசித்தாந்தத்தேனையே அள்ளி, அள்ளிப் பருகிச் சைவசித்தாந்த ஞானம் கைவரப் பெற்றவர் என்பதும் ஐயந்திரிபற்ற உண்மையாம். இதனை இருபாலைச் சேனாதிராயர் நல்லைக்கந்தன்மீது பாடிய திருவூஞ்சலில், தமது சைவசித்தாந்தத் திறனை

நிரஞ்சனமாஞ் சத்திசிவங் கால்க ளாக
நிகரில்பரா பரமணியேநல் வட்ட மாக
பரந்தகலை ஞானமா கமங்கள் சாத்திரம்
பன்னுபுரா ணங்கள்முறு கிளைய தாக
அரந்தையகல் நால்வேதங் கயிற தாக
அழகொழுகு பொற்பலகை குடியலையைதாக
நரந்தநிறை அட்டதிக்குக் கமழுந் நல்லை
நகர்மேவு கந்தரே யாடிருஞ்சல் (பாடல் : 2)

என எடுத்துரைப்பதிலிருந்து நாம் உணரலாம். இவர்கள் காலத்தில் வாழ்ந்த சித்தாந்த சரபம் - சொக்கலிங்க தேசிகர் (கி.பி.1790) சின்னத் தம்பிப்புலவர், கி.பி.1734 ல் ஒல்லாந்தர் ஆட்சியலாளரிடம் நல்லூர்க்கந்தன் கோவிலைக் கட்ட உத்தரவுபெற்ற தொன் ஜுவான் மாப்பாண முதலியார் என்போரும் சைவசித்தாந்த நெறி நின்றவர்களே.

சுன்னாகம் வரதபண்டிதர் கி.பி.18ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். இவர் காசியிலிருந்து யாழ்குடாவிற்குப்

புலம்பெயர்ந்த பாபரத்துவாச கோந்திரத்தைச் சேர்ந்த பிராமணர் குலத்திற் தோன்றியவர். இவர் இறைவன் கோலங்களில் முருகப்பெருமான் வடிவில் மனம் பதித்தவர். இவரியற்றிய சிவராத்திரி புராணம் ஆகமங்களிற் கூறப்பட்ட நெறிகளைத் தழுவித் தமிழில் இயற்றப்பட்டதாம். இந்நூல் சிவன் மகிமையைப் பாராட்டும். இந்நூலுக்கு மாதகல் மயில்வாகனப்புலவர், நல்லூர் சின்னத்தம்பிப் புலவர் இருவரும் சிறப்புப்பாயிரம் வழங்கிப் போற்றியுள்ளனர். இவரது பிறநூல்களாவன ஏகாதசிப் புராணம், பிள்ளையார் கதை, கிள்ளைவிடுதூது, அமுதாகரம் என்பனவாம். இவர் சிவபுராணத்திற் சைவசித்தாந்த உண்மைகளை ஆங்காங்கே விபரிப்பதிலிருந்து இவரின் சைவ சித்தாந்த ஆராய்ச்சி மரபுகளையும், நாம் அறிந்துகொள்ள முடிகின்றது. இவற்றுக் கெடுத்துக்காட்டாக,

ஆதிநடு வீறிலியா யானுடன்பெண் ணலியலனா
யலையுமாகிச்
சோதிபெறு மருவுருவாய்த் தோற்றுசரா
சரமனைத்துந் தோய்ந்துந்தோயாப்
பாதிமதி நுதற்பேதை பாகனுமா யேகனுமாய்ப்
பகர்தற் கெட்டாப்
பூதிபுனை திருமேனிப் புனிதநின்றா மரைத்தாள்கள்
போற்றி போற்றி
(சிவபுராணம், சுகுமாரச் சரிதம் : 162)

எனும் பனுவலில் சிவனின் இயல்புகளையெல்லாம் அடக்கிக் கூறியிருத்தலைக் கண்டு தெளிக.



இவ்வாறு போர்த்துக்கேயர் ஒல்லாந்தர் ஆட்சிகளிலும் பதி - பசு - பாச விளக்கங்களைச் சைவப் பெரியார்கள் தமது மாளிகைகளிலே செய்து "இந்தப்பூமி, சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கி" யிருந்தனர் என்பது வெளிப்படை. எனினும் சுவாமி ஞானப்பிரகாசர் காட்டிய மரபிலே, சைவப் பணியாற்றித் தமிழையும், சைவத்தையும் சைவ சித்தாந்தக் கோட்பாடுகளையும் சிறப்பாக ஈழத்திற் பேணிப் பாதுகாத்தவர் ஆறுமுகநாவலர் ஆவர் (கி.பி. 1822 - 1879) எனின் மிகையாகாது. இவர் யாழ்ப்பாணத்து நல்லூரிலே சைவ வேளாண் மரபிற் தோன்றியவர். ஆங்கிலேயர் தொடர்ந்தும் மதமாற்றங்களைச் செய்து, தமது மதத்தையும், மொழியையும் பரப்பிக் கொண்டிருந்த காலமது. இவர் முதலில் ஆங்கிலேயர் பணியை நிறைவேற்றிவைப்பதற்காக ஆங்கிலக் கல்வியைக் கற்று விவிலிய நூலைத் தமிழில் மொழி பெயர்த்துக் கொடுத்தனர். பின்னர் தம் மதத்தையும், தம்மொழியையும் பேணிப் பாதுகாக்கவேண்டிய தமது பணிக்காகத், தம் வாழ்க்கையையே தியாகம் செய்தனர். இக் கைங்கரியத்தை நிறைவேற்றும் பணியில் முதலில் தமது சமய, தத்துவ சாத்திரங்களை ஐயந்திரிபறக்கற்று, உண்மைகளைக் துருவி ஆராயலாயினர். அதன் பயனாகச் சைவத் திருமுறைகள், சைவ சித்தாந்த நூல்கள், வடமொழியாகமங்கள் என்பன கூறும் உண்மைகளை அறிவிற்கண்டு தெளியலாயினர். பின் தாம்கண்ட உண்மைகளைத் தமது மக்களும் இளமையி லிருந்தே தெளிந்து, ஒழுகவேண்டுமென்று விரும்பியவராய் 1ம், 2ம், 3ம், 4ம் பால பாடங்கள், 1ம், 2ம் சைவ வினாவிடைகள், நித்தியகரும விதிகள், சிவாலய தரிசன விதி, புட்பவிதி, முதலான நூல்களை எழுதி, அச்சேற்றுவித்தும், வேறுபல சைவ சமய நூல்களுக்கு உரைகள் எழுதியும், கந்தபுராணம், பெரியபுராணம்,

திருவிளையாடற்புராணம் முதலானவற்றினைப் பாமர மக்கள் மொழியில் உரைநடையில் எழுதியும் பதிப்பித்தனர். இவர் பால பாடங்களையும், வினாவிடைகளையும் எழுதியதன் நோக்கம், இளமையிலேயே சைவச் சிறார்கள் சைவசமய உணர்வுடைய வர்களாக உருவாகவேண்டுமென்ற நோக்கத்தாலேயாம். இதனோடு நின்றுவிடாமற் சைவத்தையும், தமிழையும் வளர்ப்பதற்கென வண்ணார்பண்ணை நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலையையும், சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியாசாலை யையும் நிறுவிச், சைவக் கல்வியைச் சிறார்களுக்குப் புகட்ட வழியேற்படுத்தலாயினர். தனது இப்பணிகளைச் செவ்வனே நிறைவேற்றுவதற்கென யாழ்ப்பாணத்திலும், சென்னையிலும் அச்சுயந்திரசாலைகளையும் நிறுவலாயினர்.

இக் கைங்கரியங்களைத் தொடர்ந்து கிறிஸ்தவ மத கண்டனங்களுக்கு எதிரான முயற்சிகளிலீடுபட்டு, சைவ தூஷண பரிகாரம் என்ற நூலினையும், யாழ்ப்பாணத்தவரின் சைவ சமய நிலையை விளக்கித் துண்டுப் பிரசுரங்களையும் வெளியிட்டனர். பின்னர் சைவ மக்களுக்குச் சிவனருளிச் செய்த சைவாகம நெறிகள் பற்றியும், தேவார திருவாசகங்கள், திருமந்திரம், ஞானாமிர்தம், மெய்கண்ட சாத்திரங்கள் கூறும் உண்மைகள் பற்றியும், பிரசங்கங்கள்மூலம் எடுத்துரைத்தனர். இதனைத் தொடர்ந்து திருவாவடுதுறை ஆதீன வித்வான்களுக்கும், பிறருக்கும் சைவ சித்தாந்த சாத்திரங்கள் கூறும் பதி - பசு - பாச கோட்பாடுகளை விளக்கிச் சொற்பொழிவுகளாற்றினார். இச் சொற்பொழிவுகளினாற் பயனடைந்த ஆதீனத்தார், இவருடைய சைவ சித்தாந்தமுரைக்கும் நாவன்மையைப் போற்றி "நாவலர்" எனப் பட்டம் சூட்டிப் பாராட்டுதல் செய்தனர். தமிழகத்தில்



மாதவச் சுவாமிகள் சைவ சித்தாந்த வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகளுக்குப்பின், காலத்தின் தேவையையுணர்ந்து இவராற்றிய பணியே சைவத்தை வேரோடு அழிவுறாமற் பேணி, மறுமலர்ச்சி யடையச் செய்தது எனில் மிகையாகாது. அதனாலன்றோ இவரைச் சமய குரவர் வரிசையில் "ஐந்தாங் குரவர்" எனவும் நம்மவர் பாராட்டுவர். இவர்கண்ட சைவ சித்தாந்தத் திறனை,

**சீர்பூத்த கருவிநூல் உணர்ச்சி தேங்கச்**
**சிவம்பூத்த நிகமாக மங்க ளோங்கப்**
**பார்பூத்த புறச்சமய விருள்க ணீங்கப்**
**பரம்பூத்த சைவநிலை பாரோர் தாங்கப்**
**போர்பூத்த சிவானந்தத் தினிது தூங்கப்**
**பிறைபூத்த சடைமௌலிப் பிரானார் தந்த**
**வார்பூத்த அறிவிச்சைத் தொழிலென் றோதும்**
**மதம்பூத்த விநாயகன்றாள் வணங்கி வாழ்வாம்**
**(விநாயகர் வணக்கப்பா)**

எனும் விநாயகர் துதிப்பாடலிற் கண்டுணரலாம். இவர் வேத நூல்கள் கூறும் வேள்வி முதலானவை, உலகோர்க்கு வேண்டிய புகழ், பொருள், ஆயுள்வேண்டிச் செய்யப்படுவன என்றும், பிறவியையறுத்து வீட்டின்பத்தை அளிக்கவல்ல சிவஞானத்தைத் தரவல்ல நூல்கள் சிவாகமங்களே என்றும் வேத, சிவாகமங்களின் பயன்களையும் சைவ மக்களுக்குக் குழப்பமின்றிப் பகுத்துக் காட்டினர்.

மேலும், பரமசிவன் ஐந்தொழில்களைச் செய்யும் பொழுது பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேசுவரன் சதாசிவனென்னும் ஐந்து திருமேனிகளிலிருந்து சுத்தமாயை,' அசுத்தமாயை, சுத்தா

சுத்தமாயையென்னும் முதற் காரணங்களைத் துணைக்கொண்டு செய்வன் என்றும், இவற்றுள் முதல் நான்கு திருமேனிகளும் உருவத்திருமேனியென்றும், சதாசிவம் அருவுருத்திரு மேனியென்றும், இவ்வைந்திற்கும் மேலான குடிலைப்பரம் அருவமெனவும், அது இரகசியமானதென்றும், இந்த ஆறும் தோன்ற நிற்கும் மூர்த்தியே "அறுமுகச்சிவ" என்றும் குமரகுருதாச சுவாமிகள் அறுமுகத்திருமேனிபற்றி விளக்குவர். சதாசிவ மூர்த்திக்கு ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என ஐந்து முகங்கள் உள என ஆகமங்கள் கூறுகின்றன. இவையன்றிக் கீழ்நோக்கியுள்ள ஆறாவது முகத்தை தரிசித்தலே அதோமுக தரிசனமாம். இதனையே திருமூலரும்.

**ஆகமே பிரான்முகம் ஐந்தொடு மாருயிர்**
**ஆமே பிரானுக் கதோமுக மாறுள**
**(திருமந்திரம் - 1569)**

என்றும்,

**எம்பெரு மான்இறை வாமுறை யோஎன்று**
**வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல்ல**
**அம்பவள மேனி அறுமுகன் போயவர்**
**தம்பகை கொல்லென்ற தற்பரன் தானே**
**(திருமந்திரம் - 520)**

என்றும் கூறியருளுவர்.

சிவநெறிப்பிரகாசம் மகேசுவரரின் இதயத்தெழுபவர் கந்தன் என்றும், கணேசர் கண்டத்திலுதிப்பவர் என்றும் கூறும்.

**''களமதனி லுதித்திடுவர் கணேசராறு முகராங்**
**கந்தரித யத்துதிப்பர்'' (பாடல் : 95)**



இச்சைவ சித்தாந்த நுட்பங்களையெல்லாம் மேற்குறிப்பிட்ட விநாயகர் வணக்கப்பாவிலும், நல்லூர்க் கந்தன் வாழிப்பாவிலும்,

**''அமரர்தொழு கனகசபை நடனமிடு பரமசிவ**
**னருண்முருகர் சரணம் வாழி''**

என ஆறுமுகநாவலர் கூறியுள்ளமை கண்டு, நாமும் இத்திருமேனி வடிவங்கள் தத்துவார்த்தங்களைத் தெளிந்துய்வோமாக.

இவ்வாறு இவர் ஆற்றிய பணிகளையெல்லாம்

**''நல்லைநக ராறுமுக நாவலர் பிறந்திலரேற்**
**சொல்லுதமி ழெங்கே சுருதியெங்கே - யெல்லவரும்**
**ஏத்துபுரா ணாகமங்க ளெங்கேபிர சங்கமெங்கே**
**ஆத்தனறி வெங்கே யறை''**

என சி.வை.தாமோதரம்பிள்ளையவர்கள் போற்றும்வழி நாமும் நிற்போமாக.

சைவ மறுமலர்ச்சியை ஏற்படுத்திய நாவலர் பணியைக் கட்டிக்காத்துப் பேணிவந்த பல சைவ சித்தாந்தச் சிந்தையினரே, ஈழத்துச் சைவ சித்தாந்த மரபினை வற்றாத நதியாகத் தொடர்ந்தும் ஓடிக்கொண்டிருக்கச் செய்தவர்களாவர்.

யாழ்ப்பாணத்து மக்கள் சைவ சித்தாந்த ஈடுபாட்டினாற் செய்த சைவத் தொண்டுகள்பற்றிச் சென்னை சிவபாதநேசப் பிள்ளை குறிப்பிடுகையில், இராமேசுவரர் ஆலயத்தை யாழ்ப்பாணத்து அரசனே கட்டினான் என அக்கோவிற் கருவறைக் கல்வெட்டுக் குறிப்பிடுகின்றதென்பர். (ஆதி நாகர் காலத்திலும், பின் சேதுபதி மன்னர்கள் காலத்திலும் யாழ்குடா இராமேசுவர

அரசின் பகுதியாக இருந்தது என்பதனை இங்கு நினைவு கூரத்தக்கது) மற்று ஞானப்பிரகாச முனிவரின் சீடராகிய யாழ்ப்பாணத்து (வரணி) தில்லைநாதத் தம்பிரானே, வேதாரிணியத்து சிவன்கோவிலைக் கட்டினார் என்றும், இன்றுவரை அக்கோயிற் தருமகர்த்தாக்களாயுள்ளோரும், யாழ்ப் பாணத்துச் சைவாசிரியர்களே என்றும், கல்வெட்டுக்கள் உறுதிப் படுத்துகின்றன எனச் சான்று காட்டுவர். மேலும் சிதம்பரத்துள்ள கட்டளைமடங்களுள் எட்டு மடங்கள் யாழ்ப்பாணத்து மக்களால் நிறுவப்பட்டவையென்றும், திருவாவடுதுறையாதீனம், தருமபுர வாதீனம், திருவண்ணாமலை யாதீனம், சொர்க்கபுரவாதீனம் முதலிய சைவாதீனங்களிற் தம்பிரான்களாக இருந்து வருபவர்களுள்ளே பலர் யாழ்ப்பாணத்தவர்கள் என்றும் விபரிப்பர். மற்றுச் சிவபாதநேசப்பிள்ளை தமது காலத்திலே ஆதீனத்தர்களாய் இருந்த சிவசாத்திர பண்டிதரையும், சபாப்பிரசங்க சிங்கமாகிய ஸ்ரீ சரவண சுவாமிகளையும் யாழ்ப்பாணத்தவரே எனக்கூறி யாழ்ப்பாணத்து மக்களின் சைவ சித்தாந்த மரபுகளைச் சான்றுகளுடன் உறுதிப்படுத்துவர்.

மேலும் பண்டிதமணி சி.கணபதிப்பிள்ளை யாழ்ப் பாணத்திலே சைவாலயங்களிலும், மடாலயங்களிலும் வருடந் தோறும் கந்தபுராணத்தை விதிப்படி படித்துப் பொருள் சொல்லப்படும் முறையானது ஐந்நூறு வருடங்களுக்குமுன் தொட்டே நடந்து வருகிறதென்றும், யாழ்ப்பாணத்தை யாண்ட தமிழரசர்களில் யாரோ ஒருவனே இம்முறையை ஏற்படுத்தி யிருக்கலாம் என்றும், இதனாலேயே செந்தமிழ் வழங்கும் சைவ சித்தாந்த உணர்ச்சி ஈழத்தில் வளர்ந்து வரலாயிற்று என்றும் கூறுவர்.



இவ்வாறு எமக்குக் கிடைக்கின்ற வரலாற்றாதாரங்கள் ஈழத்துச் சைவ சித்தாந்த மரபை, நீண்டகால வெள்ளத்தினூடாக எம்மை இட்டுச்செல்கின்றது எனில் மிகையாகாது. இந்த மரபிற்கு இன்றைய சூழ்நிலையில் எழுத்துருவம் கொடுத்துப் பேணிவைப்பது எமது தலையாய பணியாக இருக்கவேண்டும்.

இவர்களிற் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க சில சைவ சித்தாந்த அன்பர்களின் சைவப் பணிகளையும், சித்தாந்த ஆராய்ச்சி களையும் இங்கு சுருக்கமாகக் குறிப்பிடல் அவசியமாம்.

## சங்கர பண்டிதர் :

(கி.பி.1821 -1891) இவர் யாழ்ப்பணத்திற் சுன்னாகத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர். தமிழ்மொழி, வடமொழிகளைக் கற்றுச் சைவ சித்தாந்த ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருந்தவர். அதன்பயனாக இவரியற்றிய நூல்கள், சைவப் பிரகாசம், சிவபூசையந்தாதி உரை, சிவதூஷண கண்டனம் முதலானவை.

## சபாபதி நாவலர் :

(கி.பி.1844 - 1904) இவர் யாழ்ப்பாணத்திற் கோப்பாய் எனும் ஊரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். ஆறுமுகநாவலர் சிதம்பரத்தில் நிறுவிய, சைவப் பிரகாச வித்தியாசாலையிற் தலைமையாசிரியராகப் பணிபுரிந்தவர். பின் திருவாவடுதுறை ஆதீனத்துப் பதினாறாவது சந்நிதானமாகிய சுப்பிரமணிய தேசிகரிடம் அருளுபதேசத்தைப் பெற்று, சைவ சித்தாந்த

சாத்திரங்களிற் பாண்டித்தியமடைந்தனர், அதனால் திருவாவடுதுறை ஆதீனத்தார் இவரை ஆதீன வித்துவானாக நியமித்ததோடு, இவரது உரைவன்மையைப் பாராட்டி "நாவலர்" என்றும் பட்டம் வழங்கினர். இவர் ஏறக்குறைய 14 நூல்களை இயற்றியுள்ளனர். அவற்றுள் சிதம்பரசபாநாத புராணம், சிவகர்ணாமிதம், திருச்சிற்றம்பலயமகவந்தாதி, சித்தாந்தமரபு கண்டன கண்டனம் குறிப்பிடத்தக்கன, மேலும் சிவஞான சுவாமிகளுடைய சிவசமவாத உரைமறுப்பினையும் இவர் பதிப்பித்தார்.

## சபாரத்தின முதலியார் :

(கி.பி.1858 - 1922) யாழ்ப்பாணத்திற் கொக்குவிலைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இவர் வண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலையில் ஆறுமுகநாவலரிடமே கல்வி கற்றவர். இவருடைய சைவசித்தாந்தப் பயிற்சியை எடுத்துரைக்கும் நூல்களாக சீவான்மபோதம், ஈச்சரநிச்சயம், பிரபஞ்சவிசாரம், நல்ல நான்மணிமாலை முதலான நூல்கள் அமைகின்றன.

## ந.ச. பொன்னம்பலபிள்ளை :

(கி.பி. 1836 - 1902) இவர் ஆறுமுகநாவலரின் மருமகர் ஆவர். ஆறுமுகநாவலருக்குப்பின் சைவப்பிரகாச வித்தியாசாலை அதிபராக இருந்து, சைவசமயப் பணியையாற்றியவர். இவர் கி.பி.1888 ல் உருவாக்கிய சைவ பரிபாலனசபையே நாவலர் பணியைத் தொடர்ந்து மேற்கொள்ளும் நிறுவனமாகப் பணியாற்றியது. திருக்கோவில்களிலும், மடங்களிலும் புராண



படனங்களைச் செய்து மக்களுக்குச் சைவசமய தத்துவங்களை எடுத்துரைத்தவர்.

## த. கைலாசபிள்ளை :

(19ம் நூற்றாண்டின் பிற்பகுதி) சுவாமி ஞானப்பிரகாசர் மரபில் நல்லூரிலே பிறந்தவர். இவரும் நாவலருடைய மருமகன் என்று கருதப்படுகின்றது. நாவலரிடமே சைவசித்தாந்த சாத்திரங் களைக் கற்றுத்தேர்ந்து, சைவசித்தாந்த ஆராய்ச்சிகளில் ஈடுபட்டவர். ந.ச.பொன்னம்பலபிள்ளைக்குப் பின், இவரே சைவப்பிரகாச வித்தியாசாலை அதிபராக இருந்து கடமை யாற்றியவர். ஞானப்பிரகாச சுவாமிகளின் பிரமாணதீபிகை விருத்தி, சிவஞானபோதவிருத்தி, சித்தாந்த சிகாமணி முதலான சமஸ்கிருதச் சித்தாந்த ஏடுகளைச் சுப்பிரமணிய சாத்திரிகள் உதவியுடன் பரிசோதித்தவர். சிவஞானசித்தியார் சுபக்கத்தை ஆராய்ந்தும் பதிப்பித்தனர். நாவலர் வரலாற்றினையும் நூல்வடிவில் வெளியிட்டவர்.

## சி. சுவாமிநாதபண்டிதர் :

(ந.ச.பொன்னம்பலபிள்ளைகாலத்தவர்). வண்ணார் பண்ணையிற் கந்தர்மடத்தைப் பிறப்பிடமாகக்கொண்டவர். ந.ச.பொன்னம்பலபிள்ளை தாம் திருக்கோவில்களுக்கும், மடங்களுக்கும் புராணப் படனங்களுக்குச் செல்கையில், இவரையும் அழைத்துச் செல்வர். அதனால் இவரும் புராணப் படனங்களைச் செய்யுமாற்றலைப் பெற்றனர். இவரைக் காலியிலிருந்த சிவன்கோவிலிற் பெரியபுராணம் செய்வதற்காக,

ஒருமுறை அங்கு வர்த்தகம் செய்திருந்த நாட்டுக்கோட்டைச் செட்டிமார் அழைத்துச் சென்றிருந்தனர். அங்கு இவர் புராணபடனம் நிகழ்த்தும் ஆற்றலைக் கண்டு, பின் தேவ கோட்டை, நாட்டுக்கோட்டை முதலான செட்டி நாடுகளுக்கும் புராணபடனங்களுக்காக அழைத்துச் சென்றனர். அங்கிருந்த சமயம் திருவாவடுதுறை ஆதினவித்துவானாக இருந்த ஈழத்துச் சபாபதிநாவலருடன் தொடர்புகொண்டு, சிவஞானபாடியங்களின் பாகங்களைப்பெற்று, அச்சிட்டு வெளிப்படுத்தினர். மூவர் தேவாரங்களையும் ஒப்பிட்டு ஆய்ந்து வெளியிட்ட தோடு, திருக்கோவையாருண்மை எனும் நூலினையும் வெளியிட்டனர்.

## ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள் :

(கி.பி. 1875 - 1950) இவர் கல்வி கேள்களிற் சிறந்தவராய் விளங்கி மதுரைத் தமிழ்ச் சங்கம் உ.வே.சாமிநாதையர் முதலானோருடன் தொடர்புடையவராக இருந்தனர். வடமொழிக் கல்வியிலும் சிறந்திருந்ததனால் திருநெல்வேலி ஞானப்பிரகாசரின் வடமொழி நூல்களைப் பரிசோதித்து ஆராயும் பணியிற் த.கைலாசபிள்ளைக்கு உதவியாக இருந்தனர். கோவிற் புராணபடனங்களிலும் பிறசமய விரிவுரைகளிலும் பங்குபற்றிச் சமயப் பணியிலும் ஈடுபட்டிருந்தனர். தமது இல்லத்தில் "வித்தியாபிவிருத்தித் தருமாலயம்" எனும் நூல் நிலையத்தினையும் நிறுவிக் கல்வி அபிவிருத்திக்காகப் பணியாற்றியவர். இவரியற்றிய நூல்கள் எட்டு. பெரும்பாலானவை கந்தபுராணப் படலங்களுக்கு எழுதிய உரைகள் ஆவன.



## வே.அகிலேசபிள்ளை :

(கி.பி.1853 - 1910) திருகோணமலையைப் பிறப்பிடமாகக் கொண்டவர். சைவசமய, சாத்திர ஞானங்களைப் பெற்றவர். அதனாற் சமய நூல்களை இயற்றியும், கோவிற் புராணங்களைப் பதிப்பிக்கும் பணியிலுமீடுபட்டிருந்தனர்.

## காசிவாசி செந்திநாதையர் :

(கி.பி.1848 - 1924) இவர் ஏழாலையைப் பிறப்பிடமாகக் கொண்டவர். கல்வி ஞானங்களிற் சிறந்து விளங்கியமையால், முதலில் நாவலர் சைவப்பிரகாசசாலையில் ஆசிரியராகப் பணிபுரிந்தவர். பின் திருவனந்தபுரம் சென்று வடமொழிக் கல்வியிற் பாண்டித்தியமடைந்தனர். கி.பி.1888ம் ஆண்டிற் கொழும்பிற் தம்பையா முதலியாரின் தருமசத்திரத்திற் சைவசித்தாந்த விரிவுரைகளை ஆறுமாதங்களுக்கு நிகழ்த்தினர். திரும்பவும் இந்தியா சென்று காசியிற் சிலகாலம் வசித்திருந்தனர். பின்னர் திருப்பரங்குன்றத்துச் சந்நிதி வீதியில் வைதீக சுத்தாத்துவித சைவசித்தாந்த வித்தியாசாலை எனும் வித்தியாசாலையை நிறுவிச், சைவச் சிறார்களுக்குத் தமிழ், வடமொழி, ஆங்கிலம் என்பனவற்றைக் கற்பித்தனர். இவர் ஏறக்குறைய 20 நூல்களை இயற்றியுள்ளனர். அவற்றில் சைவவேதாந்தம், தேவாரம் வேதசாரம், தத்துவவிளக்கம் மூலமும், உரையும், சிவஞானபோத வசனாலங்காரதீபம், நீலகண்டரின் பிரம்மபாடியத் தமிழ்மொழிபெயர்ப்பு என்பன குறிப்பிடத்தக்கன.

## நா. கதிரவேற்பிள்ளை :

(கி.பி.1844 - 1907) இவர் பருத்தித்துறையிற் புலோலியூரைச் சேர்ந்தவர். தமிழகத்திற் தங்கியிருந்து தமிழையும், சித்தாந்த நூல்களையும் கற்றவர். பின் அங்கேயே சைவசமய விரிவுரைகளிலும், பங்குபற்றிச் சைவசித்தாந்த தத்துவ உண்மைகளை விளக்கிவந்தனர். மாயாவாதத்தினைக் கண்டித்து மறுத்துப் பேசும் இவர் திறன்கண்டு சென்னைவாழ் புலவர்கள் இவருக்கு "மாயாவாததும்சகோளரி" எனப்பட்டஞ்சூட்டிப் பாராட்டினர். இப்பட்டமளிப்பு விழாவிற்குத் தலைமைவகித்தவர் காசிவாசி செந்திநாதையர் ஆவர். பின் இவர் ஆரணி சமஸ்தானத்தில் வித்துவானாகக் கடமையாற்றிய காலத்தில், இவருக்கு "அத்துவித சித்தாந்த மகோத்தாரணர்" எனும் பட்டத்தினைச் சமஸ்தானத் தலைவர் வழங்கினார். இவரியற்றிய நூல்களுள் சைவசந்திரிகை, சைவசித்தாந்தச் சுருக்கம், சிவாலய மகோற்சவ விளக்கம் முதலான நூல்கள் குறிப்பிடத்தக்கன.

## வி.கந்தப்பிள்ளை :

(கி.பி.1840 - 1913) யாழ்ப்பாணத்தில் வேலணையைப் பிறப்பிடமாகக் கொண்டவர். தமிழ் இலக்கண, இலக்கியங்களை ஆறுமுகநாவலரிடத்தும், சித்தாந்த சாத்திரங்களை இணுவில் நடராச ஐயரிடமும் முறையே கற்றுத்தேர்ந்தவர். அதனாற் சைவசித்தாந்த அறிவைப்பெற்று விரிவுரைகளை நிகழ்த்தியதோடு, தமது ஊரிலே "சைவசூக்குமமார்த்தபோதினி" எனும் பத்திரிகையை வெளியிடுவதற்கென ஒரு அச்சகத்தையும் நிறுவியவர். மேலும் தத்துவப்பிரகாசம் எனும் சித்தாந்த நூலினையும் ஆராய்ந்து, உரையெழுதிப் பதிப்பித்தனர்.



## நடேசையர் :

(கி.பி.1844 - 1905) இவர் யாழ்ப்பாணத்தில் இணுவிலைப் பிறப்பிடமாகக் கொண்டவர். ஆறுமுகநாவலரிடமே இலக்கண, இலக்கியங்களையும், சித்தாந்த சாத்திரங்களையும் கற்றுக் கொண்டவர். வடமொழியிலும் புலமையுடையவர். இவருடைய பணிகளிற் சிறப்பானது ஈழத்து ஞானப்பிரகாசர் உரையுடன் சிவஞானசித்தியார் சுபக்கத்தை ஆராய்ந்து வெளியிட்டமையாம்.

## அம்பிகைபாகர் :

(கி.பி.1854 - 1904) இணுவிலைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இவர் ஆறுமுகநாவலரிடம் இலக்கண, இலக்கியங்களையும், இணுவில் நடேசையரிடம் சிவஞானசித்தியார் முதலிய சைவசித்தாந்த நூல்களையும் கற்று. சி.வை.தாமோதரம்பிள்ளையவர்களிடம் நட்புடையவராக இலக்கியப் பணியாற்றியவர்.

## சு.ஏரம்பையர் :

(கி.பி.1847 - 1914) இவர் யாழ்ப்பாணத்தில் மாதகலைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இவர் சங்கானை வேலுப்பிள்ளை, நல்லூர்ச் சம்பந்தப்புலவரிடத்தும் தமிழிலக்கண இலக்கியங் களைக் கற்றவர். சங்கரபண்டிதரிடம் வடமொழியைக் கற்றவர். நாவலருடைய சைவ பரிபாலன சபையின் சைவப் பிரகாசகராக விளங்கிச் சைவ விரிவுரைகளை ஆற்றியவர். பல சைவசமய நூல்களையும் இயற்றிச் சைவப் பணியாற்றியுள்ளனர்.

## ச.பூபாலபிள்ளை :

(கி.பி.1856 - 1921) இவர் மட்டக்களப்பைப் பிறப்பிடமாகக் கொண்டவர். சித்தாந்த சாத்திரங்களை முறையாகக் கற்று, ஆராய்ந்தவர். இவரியற்றிய 9 நூல்களுள் சிவதோத்திரம், முப்பொருளாராய்ச்சிக் கட்டுரை என்பன குறிப்பிடத்தக்கன.

## முத்துக்குமாரசுவாமிக் குருக்கள் :

(கி.பி.1853 - 1936) இவர் புலோலியூரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். பதினெட்டுவயதிலே கோவிற் குருவாக ஆசாரியா பிடேகம் செய்யப்பெற்றபின், தமது ஆலயப் பூசைத் திருப்பணிகளைச் செய்வதற்குரிய பத்ததிகளைத் தேடிப்பிடித்து, அறிவைப் பெருக்கியவர். பின்னர் சைவ சித்தாந்த நூல்களையும் கற்றுத் தேர்ந்தனர். சிவபெருமான் அலங்காரம், பசுபதீசுரர் அந்தாதி என்பன இவரியற்றிய நூல்களாம்.

## சி. தாமோதரம்பிள்ளை : (கி.பி. 1863 - 1921)

இவர் யாழ்ப்பாணத்தில் வண்ணார்பண்ணையைப் பிறப்பிடமாகக்கொண்டவர். இளமையில் கல்வி, கேள்விகளிற் சிறந்துவிளங்கியவராய் இருந்தார். பின் சிதம்பரத்திற் தங்கியிருந்து ஒரு பாடசாலையை நிறுவி நடாத்திவந்தார். அதன்பின் சென்னையில் சபாபதிநாவலருடைய 'ஞானாமிர்தம்' எனும் பத்திரிகையாசிரியராகக் கடமையாற்றினார். பின் தேவகோட்டையிற் தங்கியிருந்து செட்டிகுல மக்களுக்கு சைவசித்தாந்த நூல்களைப் போதித்துவந்தார். இலங்கையிற்



கொழும்பு, கண்டி, காலி முதலான ஊர்தோறும் சமய விரிவுரைகளை நிகழ்த்தினார். இவரியற்றிய நூல்கள் ஆறனுள் சைவசித்தாந்த சாரமான மரபு குறிப்பிடத்தக்கது. இவரது சிவஞான சித்தியார் உரை அச்சாகவில்லை. இவர் கரவெட்டியில் நிறுவிய சைவ ஆங்கிலப் பாடசாலை விக்கினேசுவரக் கல்லூரி ஆகும்.

## அம்பலவாண நாவலர் :

(கி.பி.20ம் நூற்றாண்டின் முற்பகுதி) யாழ்ப்பாணத்தில், வட்டுக்கோட்டையைப் பிறப்பிடமாகக் கொண்டவர், தமிழ், வடமொழி, ஆங்கிலமாகிய மொழிகளிற் தேர்ச்சிபெற்றவர். ஆறுமுகநாவலர் வழியைப் பின்பற்றி வட்டுக்கோட்டையிற் சைவப் பாடசாலையை அமைப்பித்தும், சமய விரிவுரைகள் நிகழ்த்தியும், பல நூல்களை இயற்றியும், பரிசோதித்தும், தமிழும், சைவமும் வளர்த்தவர். சிதம்பரத்திலே ஆறுமுகநாவலர் சந்தான ஞானசம்பந்த சுவாமி ஆதீனம் எனும் மடத்தை அமைத்துத், தம் முதுமைக் காலத்தை அம்மடத்திலே கழித்தனர். இவர் பரிசோதித்து வெளியிட்ட நூல்கள் அகோர சிவாசாரியார் பத்ததி, பௌஷ்கர சங்கிதா பாஷியம் என்பன. சிவத்துரோக கண்டனம், திருவாதிரைத்திருநாள் மகிமைப்பிரபாவம், என்பன இவர் எழுதிய நூல்களிற் சிலவாம்.

## இலக்கணச்சாமி, முத்துக்குமாரசாமித்தம்பிரான் :

(கி.பி.1885 - 1949) இவர் வண்ணார்பண்ணையைப் பிறப்பிடமாகக்கொண்டவர். தமது பதினான்காம் வயதிற்

தலயாத்திரை மேற்கொண்டு, தமிழகத்துச் சைவத்தலங்களைத் தரிசித்தனர். இந்த யாத்திரை முடிவிற் சிதம்பரத்துச் செல்லப்பா சுவாமிகள், ஈசானியமடத்து இராமலிங்க சுவாமிகள் ஆகியோரிடத்துத் தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்றனர். பின்னர் சூரியனார் கோவில் ஆதீனமகாசந்நிதானம் முத்துக்குமாரதேசிகரிடம் வடமொழி, தென்மொழிச் சித்தாந்த நூல்களை ஓதித் தீட்சையும் பெற்றனர். பின்னர் சிதம்பரத்திற் தங்கியிருந்து இலக்கண இலக்கியங்களையும், சைவ சித்தாந்த நூல்களையும், தம்மை நாடி வந்தோருக்குக் கற்றுக்கொடுத்தனர். முதன்முதலாக மாதவச் சிவஞான முனிவரின் மாபாடியத்தை ஆராய்ந்து வெளியிட்டவரும் இவரே. சிவாக்கிரயோகிகள் எழுதிய சிவாக்கிரபாடியம், கிரியாதீபிகை எனும் வடமொழிச் சித்தாந்த நூல்களையும் இவரே பதிப்பித்தனர். தருமபுரத்து ஆதீனத்தாரின் கட்டளையின்பேரில், முத்தி நிச்சயப்பேருரை முழுவதனையும் ஒப்பிட்டுநோக்கி, ஆராய்ச்சிக் குறிப்புகளையும் எழுதினர். சைவ சந்நியாச பத்ததி, திருநாரையூர்ப் புராணம் ஆகிய நூல்களையும் பதிப்பித்தனர். இவருடைய திருவுந்தியார், திருக்களிற்றுப் பாடியார் உரைகளும் வெளியிடப்பட்டுள்ளன. இவர் ஆராய்ந்து கொண்டிருந்த ஞானாவர்ண விளக்கம் முற்றுப்பெறவில்லை யெனத் தெரிகின்றது.

## பொன். இராமநாதன் :

(கி.பி.1851 - 1930) இவர் மானிப்பாயைப் பிறப்பிடமாகக் கொண்டவர். தஞ்சாவூர் இலக்கணம் இராமசாமிப்பிள்ளையிடம் தமிழிலக்கண, இலக்கியங்களையும், வேதாந்த, சித்தாந்த தத்துவங்களையும் கற்றுக்கொண்டவர். இவரே கி.பி.1924ல் இந்து சபையை உருவாக்கிச், சைவசமய வளர்ச்சிக்கு உறுதுணையாகவிருந்தார்.



## சு.சிவபாதசுந்தரம் :

(கி.பி.1877 - 1953) இவர் புலோலியூரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். தமது முதுமைக்காலத்தில் கந்தவனம் எனும் முருகன் கோவிலுக்கருகாமையில், திருமடத்தினை நிறுவி வாழ்ந்து வருகையிற், சித்தாந்த சாத்திரமும்; புராண பாடமும் கேட்கச் செல்லும் மாணவர்களுக்குக் கற்றுக் கொடுத்தனர். திருக்கேதீசுவரக் கோயிற் திருப்பணிச்சபைத் தலைவராகவிருந்தும் பணியாற்றினர். இவரியற்றிய நூல்கள் 1ம் 2ம் சைவபோதம், திருவருட்பயன் விளக்கவுரை, சைவக்கிரியை விளக்கம், கந்தபுராண விளக்கம், திருவாசகமணிகள், திருப்பெருவடிவம் என்பனவாம்.

## மு.திருவிளங்கதேசிகர் :

(கி.பி.1859 - 1922) யாழ்ப்பாணத்தில், மானிப்பாயைப் பிறப்பிடமாகக்கொண்டவர். இவருடைய தந்தையார் முருகேசமுதலியார் சித்தாந்த நூலறிவும், திருமுறைப் பயிற்சிமுடைய சிவபக்தர் ஆவர். இவர் தமிழிலும், ஆங்கிலத்திலும் புலமை யெய்திய பின், கொழும்பு தோமசுக் கல்லூரியில் ஆசிரியராக இருக்கும் காலத்திலே, திருவிளையாடற் புராணம், பெரிய புராணம், கந்தபுராணம் முதுலிய சமய நூல்களையும், வடமொழியையும் கற்றுக்கொண்டனர். பின் வழக்கறிஞராகக் கடமையாற்றிய காலத்திற் சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம்,

திராவிடமாபாடியம் முதலான சைவசித்தாந்த நூல்களை ஆராய்ந்து கற்றுவந்தனர். சித்தாந்த சைவமே, உயிர்கள் உய்ய வழிகூறுவதென்று துணிந்து, அச்சித்தாந்த நூல்களிற் கூறப்பட்ட பதி-பசு-பாசம் எனும் முப்பொருள்களின் தன்மைகளை நுணுகிக் கற்றுத் தெளிந்தனர். அத்தெளிவின் பயனாகவே சிவஞான சித்தியார் சுபக்கம், சிவப்பிரகாசம், கந்தரலங்காரம், திருப்புகழ் என்பனவற்றுக்கு, அவர் தெளிவான உரைகளை எழுதமுடிந்தது. இவர் உரைகள் தருக்கம் முதலான கருவி நூல் உணர்ச்சி இல்லாதவரும், படித்துப் பயனடையும் வண்ணம், காலத்திற் கேற்ற நல்ல உரைகளாம். இவ்வுரைகளின் சிறப்பியல்புகளைக் கண்ட பௌதிகவியற் பேராசிரியரான ஆ.வி.மயில்வாகனம், இவரது நூல்களை மறு பதிப்புச்செய்தவற்கான உரிமைகளைப் பெற்று, யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகத்தாருக்கு வழங்கினர். இவ்வுரைகளைப் படித்துச் சைவசித்தாந்த மாணவர்கள் பயனடைவர் என்பது திண்ணம்.

## யோகர் சுவாமிகள் :

(கி.பி.1872 - 1964) "வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற வித்தகச் சித்தர் கணமே" என்று தாயுமானவர் சித்தர் கணத்தைப் போற்றுவர். சிவானுபூதிச் செல்வரான சித்தர்கள் சமயங்கடந்த சமரச மோனநிலையில் நிற்பவர்கள். அட்டமாசித்திகள் கைவரப் பெற்றவர்கள். இந்த யோகநிலை கைகூடியவரே யோகர் சுவாமிகள். இவர் இளமைப்பருவத்திலே சமய வாழ்வை ஆரம்பித்துக் கடும் தியானங்களில் இருந்து, இறையுண்மையை யுணர்ந்தவர். இருபதாம் நூற்றாண்டில் எம்மத்தியில் வாழ்ந்த சித்தர் இவர் ஆவர். திருவிளங்கதேசிகர் சித்தாந்த நூல்களுக்கு



உரை எழுதிய சமயத்திற் புலப்படாத பொருள்களை, யோகர் சுவாமியைத் தரிசித்து, அவருடைய திருவருளாற் தெளிவாக்கினர் என்பர். ஈழத்துப் பிறசித்தர்கள் கடையிற்சுவாமிகள், பரமகுரு சுவாமிகள், குழந்தைவேல்கடையிற் சுவாமிகள், செல்லப்பா சுவாமிகள், ஆகியோர் ஆவர்.

## க. சோமசுந்தரப்புலவர் :

(கி.பி.1878 - 1953) யாழ்ப்பாணத்தில், நவாலியூரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். சைவசித்தாந்தத்திலும், கந்தபுராணத்திலும் பற்றுமிக்கவர். இவரது "உயிரிளங்குமரன்" எனும் நாடகம் சைவசித்தாந்தக் கருத்துக்களையுள்ளடக்கியது. மேலும் நல்லூர்க்கந்தர் பதிகம், நல்லூர் முருகன் திருப்புகழ், நல்லையந்தாதி என்பனவற்றையும் பாடியவராவர். நல்லூர்க்கந்தர் பதிகத்தில் முருக பக்தர் நிலையைக்

''காவடி யெடுப்பர்சிலர் பாவடி தொடுப்பர்சிலர்
 காய்பசி யடக்கியொருமுக்
காலமு மிருப்பர்சிலர் வேலமுரு கப்பபிணி
 காயென வுரைப்பர்சிலபேர்
சேவடி துதிப்பர்சிலர் சாமரை யெடுப்பர்சிலர்
 தேமலர் தொடுப்பர் சிலபேர்
தீபநிரை வைப்பர்சிலர் தூபமுறை யுய்ப்பர்சிலர்
 சீரமு தளிப்பர் சிலபேர்
நாவடி படப்பிறவி வேரறு படக்கருணை
 நாமம திசைப்பர்சிலபேர்
நாதனி னருட்சபையி லேழையோர் திருப்பணியை
 நாடவரு ளைப்புரிகுவாய்

என உள்ளவாறே எடுத்தியம்பி, உயிர்களின் சிறுமையையும், இறைவனின் பெருமையையும் நிலைநாட்டுகின்றனர்.

இவர்களேயன்றிப், பிற்காலத்தில் சைவசமய ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுச் சைவமதத்தின் வரலாறுகளைப், பல ஈழத்துச் சைவசித்தாந்த அன்பர்கள் எமக்கு அறிவுறுத்தியுள்ளனர். இவ்வரிசையிற் பண்டிதமணி சி.கணபதிப்பிள்ளை, சுவாமி விபுலானந்த அடிகள், சைவப்புலவர் கா.அருணாசலம், சி.எஸ்.நவரட்ணம், முதலியார் குல. சபாநாதன், அச்சுவேலி ச.குமாரசுவாமிக் குருக்கள், பண்டிதர் இ.வடிவேல், பண்டிதர் வி.சீ.கந்தையா முதலானோர் தொண்டுகள் அளப்பரியன. சைவசமயமும், சைவசித்தாந்தமும் வற்றாத நதிகளே என்பதனை நாம் இதுவரை ஆராய்ந்து காட்டிய ஈழத்துச் சைவசித்தாந்த வரலாறு கண்டு யாவரும் உணர்வர்.

1. "திருமூலர் கைலை வழிவந்தேன்" எனக் கூறுவதைக் கண்ணுற்ற சேக்கிழார் "கைலாயத்தொரு சித்தர் பொதியில் சேர்வார்" என்றும், திருமூலர் கைலையிலிருந்து வரும் வழியிலே திருவாவடுதுறையில் உயிரிழந்த இடையனாகிய மூலனின் உடலிற் புகுந்தார் என்றும் கூறுவர். ஆனால் உண்மையான கைலைமரபென்பது சிவாகமங்களைச் சிவன் சக்திக்கு அருளச், சக்தி நந்திதேவருக்கருள, நந்திதேவர் சனற்குமாரர் முதலானோருக்கும், அவர்கள் முறையே சத்தியஞான தரிசினி, பரஞ்சோதிமுனிவர், மெய்கண்டதேவர் முதலானோருக்கும் அருளப்பட்டதென்பதாம். எனினும் பூமண்டலத்திலுள்ள கைலாயங்கள், மெய்க்கைலாயத்தினின்றும் வேறுபட்டவை



யென்பதனையும் நாம் மயக்கமின்றித் தெளிதல் வேண்டும். மெய்க்கைலாயம் என்ன என்பதனை,

"சிரமெனுங் குகையினுள்ளே சிவகயிலாய மன்றில் அரனுடைய மாயை வாசியாடல்தான் செய்வரென்று" என நெஞ்சறிவிளக்கம் கூறியருளும்.

எனவே இராப்பகலற்ற மெய்க்கைலாயம் என்பது, சித்தத்தைச் சிவன்பால் செலுத்திய திருக்கூட்டத்தினரின் சிரசிலே தான் இருக்கின்றது. இத்தகைய இறையின்பத்தைத் தம்முள்ளே அனுபவித்திருப்பவர்கள், காடுகள், மலைச்சாரல்களில் மட்டுமன்றி நிலத்தின் கீழும் தியானத்தில் இருக்கிறார்கள் என்பதனை, ஏறக்குறைய 12 வருடங்களுக்கு முன் பழனித்திருப்படிகளைப் புதுப்பித்துக்கொண்டிருக்கையிற் பாரிய கல்லொன்றின் கீழிருந்த இருடியை அவதானித்த கிருபானந்தவாரியார் தகவல்களிலிருந்து நாம் உணரத்தக்கது.

2. ஈழத்துச் சைவசித்தாந்த மரபைப்பேணும்வகையிற் சைவபரிபாலனசபை, அகில இலங்கைச் சைவப்புலவர் பட்டதாரிகள் சங்கம், நல்லை ஸ்ரீ ஞானசம்பந்தர் ஆதீனம், சிவதொண்டன் நிலையங்கள் முதலான பொது அமைப்புக்களின் பங்களிப்புகள் விரிவாக ஆராயப் படத்தக்கனவாம்.

3. சி.சித்தியாருக்கு ஏழாவது உரையான சுப்பிரமணிய தேசிகர் உரை, சிவஞானசுவாமிகளது உரைக்குப் பொழிப்புரை போன்றமைந்ததாம்.

# சைவ சித்தாந்த வரலாற்றறிமுகம்

*சான்று விளக்கம் :*

1. V.S.Parekh, The Depictions of Sivalingas from Gujarat, Journal of the Oriental Institute, M.S.University of Baroda, Baroda Vol. XXXIII, March - June 1984. Nos. 3-4 P.324 - 329.

2. இருக்கு வேதம் VII 18.7; X-27-29 என்பனவும் சிஸ்னா வேத (இலிங்க வழிபாடுடையோர்) பற்றிக் குறிப்பிடுகின்றன. மேலும் பார்க்கவும். தனபாக்கியம் குணபாலசிங்கம், இலங்கையிற் தொல்லியலாய்வுகளும் திராவிடக் கலாசாரமும், கத்தோலிக்க அச்சகம், மட்டக்களப்பு. 1988 பக். 103 -106.

Allen H.Wood, The Gold coin Types of the Great Kushanas, Editor: A.K.Naraian, The Numismatic Society of India 1959.

3. மா.இராசமாணிக்கனார், சைவ சமய வளர்ச்சி, ஔவை நூலகம் சென்னை'1. 1958; சி.சத்தியமூர்த்தி, சிவலிங்க வழிபாடு, திருவருள் வெளியீடு - நாகர்கோவில். 1969. பக் 1-23.

T.B.Siddhalingaiah, Origin and Development of Saiva Siddhanta upto 14th Century, Nepolean Press, Madurai 1. 1979 P.7-10.

ஆ.க.ஆனந்தநாதன், அறக்கருத்துக்களே திருவள்ளுவரின் தலையாய கருப்பொருள். வீரகேசரி, 5-11-1989.



4. A.A.Macdonell, A Vedic Reader for Students, Oxford University Press, 1960 P.56-57, A.L.Basham, The wonder that was India Fontana, 1967. P. 309-311.

4A. Rev.H.Heras, Studies in Proto - Indo - Mediterranean Culture, Bombay Indian Historical Research Institute, 1953.

5. P.T.Srinivasa Iyengar, Translated the Siva - Sutra Vimarsini of Ksemaraja into English, P. 7,19 மேலும் பார்க்கவும், மறைமலையடிகள் மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும், கழக வெளியீடு 1959. முற்பகுதி. பக். 405.

6. Rev. G.U.Pope, The Tiruvacagam, English Translation, Introductions and Notes, Oxford, Clarendo Press, 1900 P. XVIII-XXII

7. மறைமலையடிகள் மு.கு.பக். 839-941; கா.சுப்பிரமணிய பிள்ளை, மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம், கழக வெளியீடு, 1928 பக்.1-9.

8. கா.சுப்பிரமணியபிள்ளை. மு.கு.

9. இருக்கு வேதத்தில் இடம்பெறுபவரான வியாக்கிரபாதர், மற்று ஆதிசேடனின் மாறுவேடமான பதஞ்சலி (மானுடலும் பாம்புருவும் கலந்தது) என்போர் வரலாறுகள் வைதிக மதம் தெற்கே உறுதிபெறத் தொடங்கிய காலத்தில், வேத காலம் முதலாகவே, வைதீகர்களுக்குச் சைவத்துடன் தொடர்புகள் இருந்ததாகக் காட்டிக் கொள்வதற்காக இக்கதைகள்

உருவாக்கப் பட்டன என்று ஜி.யு.போப் கருதுவர். G.U. Pope மு.கு. பக் 1 x 1. ஆனால் மாணிக்கவாசகர் "பதஞ்சலிக்கருளிய பரமநாடக" (கீர்த்தித் திருவகவல் 138) என்றும், தில்லையிலுள்ள புலியூரை "இமயத் தியல்புடைய அம்பொற் பொலிதரு புலியூர்ப் பொதுவினி னடநவில்" (கீர்த்தித் திருவகவல் 140 - 144) என்றும், தொடர்பு காட்டுவர். இதெல்லாம் இறைவன் திருவிளையாடல்களால் விளைந்ததே என்று பெறப்படும். பதஞ்சலி யோகம் எனும் தத்துவ நூலை எழுதியவரே பாணிணீயத்திற்கு உரையெழுதிய பதஞ்சலி முனிவராயின் இவர் காலம் கி.மு. 150 எனத் துணியலாம்.

10. மஹேந்திரம், மலயம், ஸஹ்யம், சக்திமான், விந்தியம், பாரியாத்திரம், ரிஷவான்மலை என்பன குலபர்வதனங்கள் எனப் புராணங்கள் கூறுகின்றன.

11. A.L.Basham, மு.கு.பக்.337.

12. சிவஞானமுனிவர், சிவஞானபோதமும், சிவஞானபாடியமும், கழக வெளியீடு 1952.

13. மறைமலையடிகள், மு.கு.பக்.334-363.

14. T.Bhattacharyya, The Canons of Indian Art or A Study on Vastuvidya, Calcutta, 1947 P.141-146.



15. மறைமலையடிகள் மு.கு. 407-408; கா. கைலாசநாதக் குருக்கள், சைவத் திருக்கோவிற்கிரியை நெறி, இந்து கலாபிவிருத்திச் சங்கம், 1963 பக். 7-8.

16. மறைமலையடிகள். மு.கு.பக். பொருளடக்கம்

17. A.L.Basham, மு.கு.பக். 31-35.

18. H.W. Schormerus, Der Saiva Siddhanta, quoted as an English translation by V.Paranjoti her book titled. ``The Saiva Siddhanta in The Meykanda Sastrs.

19. South Indian Insciptions, 1, 23, 24 and 25, Epigraphica Indica 18.

ஜைன மதத்திலிருந்து சைவத்திற்கு, மகேந்திரவர்ம (கி.பி.610-640) பல்லவனை மாற்றியவர் அப்பர் சுவாமிகள். மன்னன் சைவத்தைத் தழுவியதனோடு சைவத்தை ஆட்சி மதமாகப் பிரகடனஞ்செய்து, சிவனுக்குப் பல கோவில்களையும் எழுப்பினான். இவனதுபேரன் பரமேசுவரவர்மன் (கி.பி. 660 - 680) மாமல்லபுரத்திற் கணேசன் கோவிலிற் பொறித்த கல்வெட்டு "சிவனைப் பிறப்பற்றவன், மேலானவன்" என்று குறிப்பிடுகின்றது. இவனது மகன் இராஜ சிங்கன் (கி.பி.680 - 700) கட்டுவித்த கைலாசநாதர் கோவிற் கல்வெட்டுக்கள், அவனைச் "சிவசூடாமணி, சங்கரபக்தன், ஆகமப் பிரியன்'' எனக் குறிப்பிடுகின்றன. பின் நந்திவர்மன் II.

நிருபதுங்கவர்மன் (கி.பி.800 - 900) முதலானோர் செப்பேடுகள் நந்தியின் உருவங்களைப் பொறித்துள்ளன. பல்லவர் காசுகளிலும் நந்தியின் உருவங்கள் பதிக்கப்பெற்றுள்ளன. மேலும் பார்க்கவும். மா.இராசமாணிக்கனார், பெரியபுராண ஆராய்ச்சி, சென்னை, 1960 2ம் பதிப்பு பக். 103 - 105.

20. ந.சி.கந்தையாபிள்ளை, இந்துசமய வரலாறு, புரோகிரசிவ் அச்சகம், சென்னை - 1960.

21. K.T.W.Sumana Suriya, ``The influence of Pali and Sanskrit on Early Sinhala Literary Trends" Education in Ceylon. A Centenary Vol. I 1969 P. 42. Also see S.Paranavitana, ``The Learning of Pali and Sanskrit and its influeuce on Sinhala Literary Trends of the Period P.164.

22. P.T.S.Iyengar, History of the Tamils. P. 110.

23. காசிவாசி செந்திநாதையர், தேவாரம் வேதசாரம் சென்னை சைவவித்தியாநுபாலன யந்திரசாலை; காசிவாசி செந்திநாதையர், சைவவேதாந்தம், மதுரை ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை 1920, வி.கலியாணசுந்தரனார், சைவத்தின் சமரசம், அரசு புக் டிப்போ, சென்னை 4. 1940. காசிவாசி செந்திநாதையர், ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியார் அருளிய பிரம்ம சூத்திரசிவாத்துவித சைவபாடியம், திருமங்கலம் செந்திநாத சுவாமி யந்திரசாலை. 1907.

24. மறைமலையடிகள் மு.கு.பக். 219.



25. T.Siddhaliugaiah ibid P. 73.

26. ப.இராமநாதபிள்ளை விளக்கவுரை, மெய்கண்ட தேவனார் சிவஞான போதமும் மாதவச் சிவஞான முனிவர் சிற்றுரையும், திருநெல்வேலிக் கழக வெளியீடு, சென்னை 1958; வி.பி.காந்திமதிநாதபிள்ளை, சிவஞான போதச் சொற்பொழிவு நூல், கழக வெளியீடு, சென்னை 1. 1960.

27. கா.சுப்பிரமணியபிள்ளை, சைவ சித்தாந்த வரலாறு, திருநெல்வேலி சைவ சித்தாந்தக் கழகம், 1984. பக். 24.

28. முத்தியில் பதி, பசு, பாசம் ஆகிய மூன்றும் அழிவின்றி நித்தமாய் இருக்கும் என்பதனை உண்மை விளக்கம் "இத்தை விளைவித்தல் மலம்", அதாவது இப்பேரின்பத்தை உயிர் நுகரும்படி அடைவித்து நிற்பது மலமே என்னும் (செய் 50). இருளானது ஒளியினுட் சத்திகெட்டு அடங்கியும், பின் ஒளியில்லாதவிடத்துத் தோன்றி மறைத்தலையும் செய்தல்போல, ஆணவம் பெத்தநிலையில் மேலிட்டு நிற்கும். ஆனால் முத்திநிலையில் இருந்தும் இல்லாததுபோற் தன் சக்திகெட்டு அடங்கி நிற்கும். "ஒன்று மேலிடில் ஒன்று ஒளிக்கும்" என்று கொடிக்கவி குறிப்பிட்டதும் இதனையேயாம்.

29. தே.ஆ.ஸ்ரீநிவாஸாசாரியன், திருவருட்பயன் நூலின் தெரிவுக் கட்டுரை, திருவாவடுதுறை ஆதினம் 1957.

30. தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன், வினாவெண்பா விடை விளக்கக் கட்டுரை, திருவாவடுதுறை ஆதீனம், 1956.

31. த.ச.மீனாட்சி சுந்தரம்பிள்ளையாற் பதிக்கப்பெற்றது. சங்கற்ப நிராகரணம், (பழையவுரையுடன்) திருவாவடுதுறை ஆதீனம், 1953.

32. த.ச.மீனாட்சி சுந்தரம்பிள்ளை பதிப்பித்தது, கவிராட்சஸ ஸ்ரீ கச்சியப்பமுனிவர் பிரபந்தங்கள், திருவாவடு துறையாதீனம், முதற்பகுதி 1953. பக். 103-131.

33. கோ.சுந்தரமூர்த்தி, வடமொழி நூற்களில் சைவ சித்தாந்தம் பகுதி I, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை 1. 1979.

## ஈழத்துச் சைவ சித்தாந்த வரலாற்றறிமுகம் பயன்பட்ட நூல்கள்

1. திருக்கோணேசர் ஆலய கும்பாபிஷேக மலர் - 1963.

2. செ.குணசிங்கம், கோணேஸ்வரம், பேராதனை, 1983.

3. C.S.Navaratnam, A short History of Hinduism in Ceylon, Sanmuganatha Press, Jaffna. 1964.

4. காந்தத்திலுள்ள தசஷ்ண கைலாச புராணம், மொழி பெயர்ப்பு: சி.நாகலிங்கபிள்ளை.

5. தனபாக்கியம் குணபாலசிங்கம், மு.கு.



6. குல. சபாநாதன், இலங்கையின் புராதன சைவாலயங்கள், நல்லூர்க் கந்தசுவாமி, நல்லூர்த் தேவஸ்தான வெளியீடு. 1971.

7. இ.வடிவேல், திருக்கோணமலை மாவட்டத் திருத்தலங்கள், இந்து கலாச்சார அமைச்சு 1981.

8. வி.சீ.கந்தையா, மட்டக்களப்புச் சைக் கோவில்கள், இந்து காலாசார அமைச்சு 1983.

9. சின்னத்தம்பிப் புலவரியற்றிய கரவை வேலன் கோவை, சதாசிவ ஐயர் அரும்பதவுரை சைவப்பிரகாச யந்திரசாலை 1935.

10. சின்னத்தம்பிப் புலவர், பறாளை விநாயகர் பள்ளு, சுழிபுர சங்கப் பிரசுரம், 1956.

11. தென் புலோலியூர் மு.கணபதிப்பிள்ளை, ஈழநாட்டின் தமிழ்ச் சுடர்மணிகள் 1967.

12. சிவஞான சித்தியார் சுபக்கம், மு.திருவிளங்கம் உரை. 1971.

13. சி.சிவரெத்தினம், நாவலர் சமயப்பணி, 83 குரு பூசைத் தின ஞாபக வெளியீடு யாழ்ப்பாணம் 1962.

14. கலைக் களஞ்சியக் குறிப்புகள்.

15. மகா வித்துவான் F.X.C. நடராசா, ஈழத்துத் தமிழ் நூல் வரலாறு, அரசு வெளியீடு, 1970.

16. க.சொக்கலிங்கம், இந்து சமய பாடம், ஸ்ரீ லங்கா புத்தகசாலை, யாழ்ப்பாணம். 1979.

17. சிவபாதநேசப்பிள்ளை, "நல்லறிவுச் சுடர் கொளுத்தல்", நாவலர் பிரபந்தத் திரட்டு, முதற்பாகம் 3ம் பதிப்பு, 1954. பக். 127- 128.

18. கலாநிதி செ.இராசதுரை, "ஞானப்பிரகாச முனிவர், கோபுரம் - இந்து சமய, தமிழ் அலுவல்கள் அமைச்சு, சித்திரை 1983. பக். 6-8. "இந்து தர்மத்தில் விஞ்ஞானம்" கோபுரம், கார்த்திகை 1985. பக். 9-12.

19. மு.கணபதிப்பிள்ளை, கந்தபுராணம் தரும் கவினுறு காட்சிகள், கோபுரம், 4. 1983. பக்.17.

20. கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த கந்தபுராணம், உற்பத்திக் காண்டம், ச.சுப்பிரமணிய சாஸ்திரிகள் செய்த உரை, யாழ்ப்பாணம். 1984. கச்சியப்ப சிவாசாரியார், சுப்பிரமணிய சாஸ்திரியார். சரித்திரச் சுருக்கம் பார்க்க.

21. வரதராசகவிராசர், சிவராத்திரி புராணம், மூலமும், குமாரசூரியப்பிள்ளை பதவுரையும், யாழ்ப்பாணம், ஸ்ரீகந்தா அச்சக வெளியீடு 1970.

22. உண்மை விளக்கம் மூலமும் உரையும், சைவப் புலவர் இ.செல்லத்துரை உரையும், அகில இலங்கைச் சைவப் புலவர் பட்டதாரிகள் சங்க வெளியீடு, 1963.



23. சி.க.சிற்றம்பலம், "வரலாற்றிற்கு முற்பட்ட காலத்திலேயே சிவவழிபாடு இலங்கையிற் செழித்திருந்தது" வீரகேசரி 29-7-1984.

24. Saddhamangala Karuuaratne reported from Anuradhapura ``Precious bronze image of uma found" Daily News. 8-5-1986.

25. Dr. A.H.Mirando, ``Ardhanari Bronze from Abhayagiriya" Daily News. 30-10-1985.

26. க.சி.குலரத்தினம், "வேதாகமங்கள்" கோபுரம் இந்து சமய, தமிழ் அலுவல்கள் அமைச்சு வெளியீடு, சித்திரை 1983.



# பிரபஞ்ச ஆய்வில் விஞ்ஞானமும் சைவசித்தாந்தமும்



"நம் கண்ணுக்குத் தெரியாது, உருப்பெருக்கியால் மட்டுமே கண்டுகொள்ளமுடிகின்ற அமீபா என்ற நுண்ணுயிர், தான் வாழும் ஆழ்கடல்தன்னை எந்த அளவுக்குப் பார்க்க முடிகின்றதோ, அந்த அளவுக்குத்தான் மனிதன் இரவில் விண்மீன்களை எண்ணுகின்றபொழுது, அண்டத்தின் ஒரு பகுதியை அவனால் காணமுடிகின்றது. அவன் பார்க்கின்ற விண்வெளி அண்டம் என்ற கடலில் உள்ள ஒரு துளி தண்ணீர் தான்" என்று உயிர்வேதியற் போரசிரியர் ச.சதாசிவம் இவ்வண்டத்தின் பருமனை மதிப்பீடு செய்வர். எனினும் இந்த அண்டப்பிரபஞ்சத்தின் மாதிரி வடிவிலமைந்த சிறு அண்டமே (a little universe) மனிதன் என்பர் தத்துவ ஆசிரியர்கள். இச்சிறிய அண்டத்திலுள்ள ஊனக்கண்களுக்குப் புலனாவது



போற்தோன்றி, பின் அளப்பரிய நிலைக்கு விரிந்து விரிந்து சென்று, அந்தரத்தில் இமைப்பொழுதும் தவறாது, தன்னியக்கமென்ற நியதிக்குட்பட்டு இயங்கிக் கொண்டிருக்கின்ற இப்பிரபஞ்சத்தைப் பற்றிய உண்மைகளைத் தேடுபவர்களாக, விஞ்ஞானிகள் கடந்த ஒரு நூற்றாண்டுக்காலமாக இடையறாது தொழிற்பட்டு வருகின்றனர். அவர்களின் ஆய்வும், அறிவும் விரிய, விரியப் பிரபஞ்சத்தின் எல்லைகளும் அறிவாய்வுகளுக்கப்பால் விலகிச் சென்று கொண்டேயிருக்கின்றன. விஞ்ஞான ஆய்வுகளின் வளர்ச்சி நிலைகள் இப்படி விரிந்துகொண்டிருக்கையில், தொடர்ந்தும் விஞ்ஞானிகள் நாம் காணும் இப்பிரபஞ்சமெல்லாம், இன்றைய உருவில் எப்பொழுது? எவ்வாறு? ஏன்? உருவாகின என்ற கேள்விகளுக்கெல்லாம் விடைகாண முயன்று வந்துள்ளார்கள். இவர்களின் ஆய்வுகள், அண்டவெளியில் விண்மீன் கூட்டங்கள், எமது சூரிய மண்டலமும் ஒன்பது கோள்களும், துணைக் கோள்கள் (Satellites), நுண்கோள்கள் (Asteroids), வால்நட்சத்திரம் (Comets), விண்கற்கள் (Meteorites), என்பனவெல்லாம் எவ்வாறு முதன் முதலிற்தோன்றின என்பதனை விளக்க முயல்கின்றன. கி.பி. 1610ல் இத்தாலிய வானவியலாளரான கலிலியோ (Galileo) முதன்முதலாகத் தூரப்பொருள்களைக் காட்டவல்ல கண்ணாடியைக் கண்டு பிடித்து, வியாழனைச் சுற்றுகின்ற நான்கு சந்திரர்களையும், சூரியனிலுள்ள கரும் துவாரங்களையும், சுக்கிரனும் சந்திரனைப் போலவே கலைகள் வளர்ந்து, தேயும் இயல்புடைத்து என்றும், சந்திரனில் மலைகள், பள்ளத்தாக்குகள் உள்ளன என்றும் தெரிவித்தனர். இவருக்குப் பின் கெப்லர் (Johannes Kepler கி.பி.1570-1630) கோள்கள் யாவும் நீள் வட்ட

வடிவத்திற் சூரியனைத் சுற்றுகின்றன என்றும், தூரத்திலுள்ள கோள்களின் சுழற்சி சூரியனுக்கருகிலுள்ளவற்றைக் காட்டிலும் இருமடங்கு வேகமானவை என்றும், இவை சூரியனைச் சுற்ற எடுக்கின்ற காலம் அவற்றின் தூர இருப்பு நிலைகளின் அடிப்படையில் அமைந்துள்ளது என்றும் தெரிவித்தனர். கி.பி.1675ல் ஒல்ப்ஃரோமர் (Olaf Romer) சூரிய ஒளி நம்மை வந்தடைய எட்டேகால் நிமிடமாகின்றதெனக் கணக்கிட்டு கூறினர். பின் ஐசாக் நியுட்டன் (Sir Isaac Newton கி.பி.1642 0 1727) இவர்கள் காடடிய இயக்க விதிகளைப் பின்பற்றி சூரியனைச் சுற்றிக் கோள்கள் சுழல்வதற்கான அண்ட ஈர்ப்பு விசையைக் (Law of universal gravitation) கண்டுபிடித்தனர். எனினும் இவ்வண்டத்தின் அமைப்புகளெல்லாம் தெய்வீகசக்திக்குட்பட்டவை என்று கருதினார். அவர் தமது இயற்கை விஞ்ஞானத்தின் கணித அடிப்படைகள் (Mathematical Principles of Natural Philosophy) எனும் நூலில் "சாதாரண யாந்திரீகக் காரணங்களால் இதுபோன்ற பல்வேறு ஒழுங்கான இயக்கங்கள் தோன்றமுடியும் என்று கருதக் கூடாது. ஏனெனில் வால்நட்சத்திரங்கள் அண்டவெளியின் எல்லாப்பகுதிகளிலும் மிகவும் நீண்ட பாதையில் வியாபித்து உள்ளன. இவ்வித இயக்கத்தின்மூலமாக அவை கிரகப்பாதையின் வழியாக மிக விரைவில் செல்கின்றன. அவற்றின் தூரப்புள்ளி களில் அவை மெதுவாகச் செல்கின்றன. அங்கு நீண்ட காலம் இருக்கின்றன. எனவே அவற்றிற்கிடையே குறைந்த அளவுதான் கவர்ச்சி சக்தி இருக்கிறது. சூரியன், கிரகங்கள், வால் நட்சத்திரங்கள் ஆகியவை அடங்கிய இந்த அழகியமண்டலம், எல்லாம்வல்ல, அறிவுப் பிழம்பான ஒருவனின், சிந்தனையிலிருந்துதான் பிறக்க முடியும்"[2] எனக் கூறுவர். கி.பி. 1755ல் ஜெர்மனிய விஞ்ஞானியான



காண்ட் தாம் எழுதிய நூலில் பரவும் தன்மையுள்ள பொருளி லிருந்து சூரிய மண்டலம் உருவாகியதென்றும், அதன்பரிணாம வளர்ச்சிகள்பற்றியும் குறிப்பிட்டபின்னர், மேலும் "பொருளைக் கொடுங்கள் அதைக்கொண்டு உலகை எவ்வாறு படைக்கவேண்டும் என்று நான் காட்டுகின்றேன்" என்றும் குறிப்பிட்டனர்[3]. வானவியலாளரும், கணித மேதையுமான லாப்லேஸ் காண்ட் கருதியதுபோலவே பெரியதளவான நெபுலா வாயுவிலிருந்து (nebula) தான் அண்டத்திற் சூரியனும், கோள்களும் உருவாகின என்று தமது "உலக அமைப்புபற்றிய விளக்கம்" என்ற நூலில் (கி.பி. 1796ல் ஆண்டளவிற்) குறிப்பிட்டிருந்தனர். காண்ட்டின் உலகபரிணாமம் பற்றிய நூல், லாப்லேஸின் கொள்கை வெளிவந்தபின்பே வெளியிடப்பட்டது. எனினும் இவர்கள் இருவரும் தெய்வீகச் செயலுக்கிடமில்லாமல் அண்டப் பொருளின் ப்ரிணாமங்களை வற்புறுத்தினர். அதாவது ஆரம்ப காலச் சூரியனைச் சூழ்ந்திருந்த அழுத்தம் குறைவான வெப்பமான வாயுமண்டலத்தின் சுழலும் வேகம் அதிகரித்த பொழுது, வாயு வளையங்கள் வெளியேறிச் சுருண்டு, உருண்டு தாமாகவே சுழன்றுகொண்டு, சூரியனையும் சுற்றலாயின என்றனர். இவையே காலப்போக்கிற் கோள்களாகவும், மையத்தில் எஞ்சிய நெபுலாமண்டலமே சூரியன் என்றும், பரிணாம வளர்ச்சி நிலைகளைக் காட்டுவர்.

இவர்களுக்குப் பின்னர் 19ம் நூற்றாண்டின் முடிவில் அமெரிக்க விஞ்ஞானிகளான மோல்டன் (Moulton) சேம்பர்லின் (Chamberlin) என்போர், கோள்பிறப்புக் கொள்கை மூலம் தம் கொள்கையை வெளியிட்டனர். இவர்கள் கோள்கள் ஒரேயொரு

நெபுலா வாயுமண்டலத்திலிருந்து உருவாகியனவல்ல என்றும், இரு விண்மீன்கள் அணுகும்போது தூக்கியெறியப்பட்ட பொருள்கள், நுண்ணிய திடப்பொருள்களாகக் குளிர்ந்து, பின் சிறு கோள்களாக மாறிச் சூரியனைச் சுற்றின என்றனர்[4]. இதே காலத்தில் பெல்ஜிய நாட்டைச் சேர்ந்த லிக்னோடெஸ் (Lignodes) என்பவர் சூரியமண்டலத்தின் தோற்றம்பற்றி விளக்க, விண்கற்கள் கொள்கையை (Meteroitic hypothesis) வெளியிட்டார். இவர் நுண்பொருள்கள் ஒன்றுசேர்ந்து தட்டையாகச் சுழலும் தட்டாக உருவாகிக், கோள்களாக உருவெடுத்தன என்றனர்.

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் (கி.பி. 1920 - 1930) பிரித்தானிய வானவியலாளரான ஜீன்ஸ். சூரியனருகில் விரைவாகச் சென்ற விண்மீன்கள் ஈர்ப்பு, விசையினாற் கிழித்தெறியப்பட்ட பொருளிலிருந்தே, கோள்களாக உருவெடுத்தன என்றும், விண்மீன்கள் அதிக தூரத்திலிருப்பதால் இவற்றிடையே ஏற்படும் கவர்ச்சி அற்புதமான தெய்வீகச் செயலெனவும் கருதினர்.

கி.பி. 1940 - 1950க்கும் இடைப்பட்ட காலத்தில் ஜேர்மனிய பௌதிக விஞ்ஞானியான சி.வான். வெய்சேக்கர், ஒரு காலத்திற் சூரியனைச் சுற்றிச் சுழலும், பரவுந் தன்மையுள்ள வாயுத்துகற் படலம் மேகம் போலிருந்தது. (Circum Solar - gas - dust - Cloud) இந்த வாயுப்படல மேகத்திலிருந்து அண்டவெளியிற் சிதறப்பட்ட பொருள்கள் படிப்படியாக ஒன்றுசேர்ந்துதான், கோள்கள் உருவெடுத்தன என்றனர். இவருடைய கொள்கையை ஆதரிக்கும் வகையிற் சோவியத்ரஷிய விஞ்ஞானியான ஒட்டோஷ் மிட்டும் (Schmidt - கி.பி.1892 - 1956) பல்வேறு அளவுள்ள பொருள்கள் ஒன்றாகத் திரள்வதன்மூலம் கோள்கள் உருவெடுத்தன என்றனர். இவ்விருவர் கருத்துக்களைப் பின்பற்றி அமெரிக்க வானவியலாளரான குய்ப்பர் கி.பி.1949ல் சூரியனைச் சூழ்ந்து காணப்பட்ட வாயுத்துகள் படலத்திலிருந்தே தம் ஆய்வுகளைத் தொடங்கினார். இவர் முதலில் வெய்சேகர் கருதியதுபோல் கோளுருவாக்க முன்னிலைப்படலத்திற் கொந்தளிப்புக்கள் இருந்தன என்று கருதினாலும், கோள்கள் படிப்படியான வளர்ச்சியல்ல என்றனர். அதனாற் தூசிமேகப் படலத்திற் கொந்தளிப்புச் சுருங்கியபின் பிரமாண்டமான முதல்நிலைக்கோள் வெடித்துச் சிதறியதனாலே, கோள்கள் உருவாகின என்றனர். சூரியனின் தோற்றம் நெபுலாக் காற்றுமண்டலத்தின் சுருக்கத்தினால் ஏற்பட்டதென்பர். எனினும் காலப்போக்கிற் சூரியனின் அருகிலிருந்த நுண்துகள்களின் ஒன்றுசேர்க்கையால் உருவானவையே கோள்களெனக் கருதலாயினர். இவ்வாறு நுண்ணிய திடப்பொருள்கள் ஒன்றுதிரள்வதன் மூலம் உருவாகியவையே கோள்கள் என்ற கருத்தினை பிரித்தானிய விஞ்ஞானிகளான எட்ஜ்பெர்த் (1949), ஹோயில் (1955), கோல்ட் (1956) என்போரும் ஆதரித்தனர்.



இவ்வாறு, பூமியும், மற்றக் கோள்களும் நீண்ட கால வளர்ச்சிக்குட்பட்டவை என்பதும், இப்பரிணாம வளர்ச்சி பல்வேறு கட்டங்களைத்தாண்டியே இன்றைய நிலையை யடைந்தது என்பதும் மேற்குறிப்பிட்டோர் கருத்தாகும். தரையியலாரும் இக்கருத்தினையே ஆதரிப்பர்.

ஆனால் 1988ம் ஆண்டில் ஒரு நெருப்புக்கோளம் (நெபுலா வாயுமண்டலம்) வெடித்துச் சிதறியே விண்மீன்கள், எமது சூரிய மண்டலக் கோள்கள், மற்றும் விண் பொருள்கள் யாவும்

தோன்றின என்ற கருத்துத் திரும்பவும் வலியுறுத்தப்படுகின்ற நிலை உருவாகியுள்ளது . இக்கருத்தை ஊர்ஜிதப்படுத்தும் வகையிற் புதிதாக ஒரு விண்மீன் கூட்டத்தை 60,00000000000 (அறுபது கோடானுகோடி மைல்கள்) மைல்களுக்கப்பாற், தாம் கண்டுபிடித்திருப்பதாக அமெரிக்காவிற் பால்டிமோரில் விண்மீனியலாளர் சங்கம் கூடியபொழுது விண்மீனியலார்கள் தெரிவித்தனர்[5]. இவர்கள் இவ்விண்மீன் கூட்டம் பெரிய பிரபஞ்ச வெடிப்புக்குப் பின் நூறுகோடி வருடங்களுக்குப்பின் ஏற்பட்ட வெடிப்புச் சிதறல்களினால் ஏற்பட்டதென்பர். எனினும் அவர்கள் உலகத்தோற்றம்பற்றி எதுவும் அறுதியாகக் கூறவில்லை. ஆனால், இக்கண்டுபிடிப்பு பிரபஞ்சத் தோற்றம்பற்றிய கருத்துக்களைத் தெளிவுபடுத்தலாம் என எதிர்பார்க்கப்படுகின்றது. மேலும் இவ்விண்மீன் கூட்டத்தில் நமது வியாழன்கோளைவிட இருமடங்கு பெரிதான கோளொன்றினையும் கண்டுபிடித்து உள்ளனர். வேறு கோள்களில் உயிர்கள் வாழலாம் என்ற விஞ்ஞானிகளின் ஊகத்திற்கு இது வலுவூட்டுவதாக அமைந்துள்ளது எனலாம்.

இவ்வாறான ஆய்வுகளெல்லாம் ஒரு பக்கம் இருக்க, மேலைநாட்டு விஞ்ஞானிகள் சோவியத் ரஷிய விஞ்ஞானிகளைப் போலல்லாமல், வேறோர் சக்தியும் இவற்றுக்குப் பின்னாற் தொழிற்பட்டு வருகின்றது, என்பதனை மறுக்கவில்லை என்பதனை மேலே குறிப்பிட்டிருந்தோம். மேலும் பிரித்தானிய நாட்டுப் பேராசிரியரான ஸ்மார்ட், ஒக்ஸ்போர்ட் பல்கலைக் கழகத்தால் 1951ல் பிரசுரிக்கப்பட்ட "பூமியின் தோற்றம்" எனும் நூலில் "எல்லோருக்கும், விஞ்ஞானிகளுக்கும், விஞ்ஞானி



யல்லாதவர்களுக்கும் தெய்வீகப்படைப்பாளி (கடவுளிடம்) ஒருவனிடத்தில் முன்பு எவ்வளவு நம்பிக்கை இருந்ததோ அதேபோல் இப்பொழுதும் இருக்க வேண்டும்" என்று குறிப்பிட்டு உள்ளனர்[6].

அண்டவெளியில் எல்லாமே ஒரு நெறியைப் பின்பற்றிச் சுழல்கின்றன. ஓரணுவும் இவ்வண்டத்தில் இயக்கமற்று இருப்பதில்லை. அணுவுக்குள் இயங்கும் சிற்றுணுக்களும் சுழன்று கொண்டே இவ்வண்டத்தை இயக்கிவருகின்றன. (Albert Einstein கி.பி.1879 - 1955) விண்வெளியிற் சூரியனுக்கருகாமையில் இடத்திற்கிடம் காலதிசை (time space continum) என்பன பேதப் படுகின்றன என்றும், அதனாற் கோள்கள் சூரியனுக்கருகாமையிற் சுழல்வது கால திசையினடிப்படையிலேயன்றி, சூரியனின் ஈர்ப்பு விசையினால் அல்ல என்பர்[7]. இவ்வாறு அண்டவெளியில் முறை மாறான நிகழ்ச்சிகள் இருப்பினும், அவற்றிலும் ஓர் நியதி இருக்கத்தான் செய்கின்றது. எல்லாமே ஓடிக்கொண்டிருக்கின்ற அண்டத்தில், நியதியென்ற ஒன்று இல்லாவிடின் யாவும், தாம்போன, போன இடங்களில் ஒழுங்கின்றி ஓடி முட்டிமோதி, அண்டத்தை எப்பொழுதோ முற்றாக அழித்து விட்டிருக்கலாம். அவ்வாறில்லாமல் இவற்றின் ஓட்டத்திற்குப் பின்னாடியுள்ள ஆக்க அறிவுச் சக்தியே இவையெல்லாவற்றையும் நெறிப்படுத்தி நிற்கின்றது.

இதனையே மாணிக்கவாசகரும் "வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க" எனப்போற்றினர். இது வரை நிகழ்ந்த விஞ்ஞான ஆய்வுகள் யாவும், ஆராய்பவனைக் கணக்கி

லெடுக்காமல், தனியே ஆராயப்படுகின்ற பொருளைமட்டுமே ஆய்ந்துவந்துள்ளன. ஆனால் ஐன்ஸ்ரின் காலமும், இடமும் பொருள்களல்ல, காண்பவனின் மனக் குறிப்புகளே காலம், இடம் எனப்படுகின்ற பொருள்களில் உள்ள பொருள்கள் என்றனர். எனவே ஆராய்விற் காண்பானைத் தழுவாது, ஆராய்வது தவறு என்றும், காண்பானும், காட்சிப்பொருளுமாய் இயைந்து காண்பதே முறைமையாம் என்றனர். எடுத்துக்காட்டாக ஓரணுவில் இயங்கியும், இயங்காததுமான தன்மைகளை நோக்கியறிவது பார்க்கிறவனின் சார்புநிலையிற் (Theory of relativity) தங்கியிருக்கிற தென்பதும், சார்புநிலை கெட்டாற்றான் அணு இயங்கியும், இயங்காததுமான இருநிலைகளில், அதன் நியதி இருக்கிறதென்ற உண்மையைப் புரிவன் என்றனர். இவ்வாறு ஐஸ்ன்ரினும் தனது விஞ்ஞான ஆய்வுகளுக்கப்பாலான, புரிந்துகொள்ள முடியாத சக்தியைப்பற்றி மதித்திருந்தனர் என்பது தெளிவாம். அந்தச் சக்தியைச் சைவசித்தாந்தம்

**நீதியாய், நிலனாகி, நெருப்பாய், நீராய்**
**நிறைகாலாய் இவையிற்றின் நியமமாகிப்**
**பாதியா யொன்றாகி, இரண்டாய், மூன்றாய்ப்**
**பரமாணு வாய்ப் பழுத்த பண்க ளாகிச்**
**சோதியா யிருளாகிச் சுவைகளாகிச்**
**சுவைகலந்த அப்பாலாய், வீடாய், வீட்டின்**
**ஆதியாய், அந்தமாய் நின்றான் தன்னை**
**ஆரூரிற் கண்டடியேன் அயர்ந்தவாறே**
**(அப்பர் : திருத்தாண்டகம்)**

என்கிறது.



எனவே இதுவரை விஞ்ஞானிகள் ஆய்ந்ததெல்லாம் அண்டவெளியின் பலவிதப் பண்புகளைப் பற்றியதேயாம். இப்பண்புகள் யாவை எனச் சுருக்கமாக இங்கு குறிப்பிடல் ஏற்றதாகும். எமது சூரிய மண்டலத்தில் ஒன்பது கோள்கள், பல்லாயிரக்கணக்கான நுண்கோள்கள், துணைக்கோள்கள், வால்நட்சத்திரங்கள், விண்கற்கள் என்பன பல நியதிகளினாற் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன. எமது சூரியமண்டலத்திலும், மற்றைய விண்மீன் மண்டலங்களிலும், விண்பொருள்கள் நீண்ட பாதையிற் சுழன்றுகொண்டிருக்கின்றன. இக்கோள்களின் பாதைகள் ஒன்றிற்கொன்று சாய்வாக இலேசான கோளவடிவில் அமைந்துள்ளன. எல்லாக் கோள்களும் சூரியனைத் தத்தம் அச்சில் நின்று ஒரே திசையாகச் சூரியனைச் சுற்றிச் சுழல்வதோடு, துணைக்கோள்களும், அதே திசையிற் தத்தம் கோள்களைச் சுற்றுகின்றன. இவ்வியக்கத்தை பூமியின் வட துருவத்திலிருந்து அவதானித்தால் யுரேனசைத் தவிர (இது தன் பக்கவாட்டிற் சுழல்வதாகக் காணப்படுகின்றது) மற்றவை யாவும் வலப்பக்க மாகவே சுழல்கின்றன எனத்தெரிகின்றது. எமது சூரிய மண்டலத்தின் முதற் சுற்றிற் புதனும் (Mercury), இரண்டாம் சுற்றிற் சுக்கிரனும் (Venus), மூன்றாம் சுற்றிற் பூமியும் (Earth), (எமது பூமி நீள்வட்ட வடிவமாயினும், வட கோளார்த்தத்தில் நீண்டு ஒடுங்கியும், ஈர்ப்புவிசை கூடியதாயும், தெற்கே ஓரளவு தட்டையாகவும், சாதாரண ஈர்ப்புவிசையுடன் கூடியதாயும் உளது என்பதனை அண்மைக்கால விஞ்ஞான ஆய்வுகளே கண்டு பிடித்தன). நான்காம் சுற்றில் செவ்வாயும் (Mars) சுழல்கின்றன. இவை உள்நிலைக் கோள்கள் (Terrestrial Planets) எனப்படுகின்றன.

இவற்றுட் புதனும், சுக்கிரனும் சூரியனுக்கருகில் இருப்பதனால் மெதுவாகவே சுழல்கின்றன. இவற்றுள் புதனுக்கும் சுக்கிரனுக்கும் துணைக்கிரகங்கள் இல்லை. ஆனால் இவற்றிற் கப்பாலுள்ள பூமிக்கு ஒன்றும், செவ்வாய்க்கு இரண்டு துணைக்கோள்களும் உள. இக்கோள்கள் யாவும் தூரத்திலுள்ள பெருங்கோள் களைவிட அடர்த்தி கூடியவையாம். பெரிய கோள்களான வியாழன் (Jupiter), சனி (Saturn), யுரேனஸ் (Uranus), நெப்ரியூன் (Neptune) என்பன அடர்த்தி குறைந்தவையானபடியால், இவற்றிற் பாரமற்ற இலேசான பொருள்களே இருக்கலாம் எனக்கருதுவர். 1930 ல் கண்டுபிடிக்கப்பட்ட புளுதோபற்றிய விபரங்கள் எதுவும் இதுவரை தெரிவிக்கப்படவில்லை. இவற்றுள் வியாழனுக்கு 12 துணைக்கோள்களும், சனிக்கு ஒன்பது துணைக்கோள்களும், யுரேனசுக்கு 12 துணைக்கோள்களும், நெப்ரியூனுக்கு இரண்டு துணைக்கோள்களும் உள என இதுவரை கண்டு பிடிக்கப் பட்டுள்ளன. மேலும் தூரத்துக்கோள்களான வியாழன் முதலானவற்றின் சுழற்சிவேகம் பூமி, செவ்வாய் போன்ற அண்மைக் கோள்களைக் காட்டிலும் இருமடங்கு அதிகமானவை. இனி சூரியனின் ஐந்தாம் சுற்றில் செவ்வாய்க்கும், வியாழனுக்கு மிடையிலுள்ள 30,000,000 மைல்கள் அகலமான பாதையில் ஏறக்குறைய 50,000 (ஐம்பதாயிரம்) நுண்கோள்கள் சுழல்கின்றன. ஒரு காலத்தில் தனிக்கோளாக இருந்த கோளொன்று வெடித்துச் சிதறியதனால், இச்சிறு நுண்கோள்கள் உருவாகியிருக்கலாம் எனச் சில வானவியலாளர் கருதுவர். இவற்றுள் முப்பது தான் பார்வைக்குப் புலனாகின்றன என்றும் தெரிவிக்கப் பட்டுள்ளது.



இவற்றுக்கப்பாலுள்ள வெளிநிலைக் கோள்களில் (Superior planets) வியாழன், சனி, யுரேனஸ், நெப்ரியூன், புளுதோ (pluto) என்பன அடங்குகின்றன. இவை சூரியனை ஒருமுறை சுழன்றுவர முறையே 11.9; 29.5; 84.0; 164.8; 248.4 வருடங்கள் செல்கின்றன. இவை சூரியனுக்கருகாமையிலுள்ள கோள்களைப்போலன்றி அடர்த்தி குறைந்து நீராயும், வாயுவாயும் நெகிழ்ந்துள்ளன. இவற்றுள் சூரியனின் ஆறாம் சுற்றில் வியாழனும் ஏழாம் சுற்றில் சனியும், எட்டாம் சுற்றில் யுரேனசும், ஒன்பதாம் சுற்றில் நெப்ரியூனும், பத்தாம் சுற்றில் புளுதோவும் இடம்பெற்று உள்ளன. இவற்றுள் யுரேனஸ், நெப்ரியூன் கோள்களை நம்முன்னோர் இராகு, கேதுக்கள் என்னும் நிழற்கோள்கள் என வருணித்தனர். அதாவது இவற்றின் இயக்கமானது ஏனைய கோள்களின் இயக்கங்களை விடப்புறநடையானதென்றும், குறிப்பிட்ட கால எல்லையில் இவை சூரியனையும், சந்திரனையும் பற்றுவதாகவும், அதனால் சூரிய, சந்திர கிரகணங்கள் ஏற்படுகின்றன என்றும், சனிக் கோளின் பின் நிழலடைந்தாற்போல் இவையிருக்கின்றன என்றும் கருதிவந்தனர். இவற்றை விஞ்ஞானிகள் கண்டுபிடித்தது, அவற்றின் ஈர்ப்புவிசையினாலே இவற்றின் பாதைகள் ஒழுங்கற்றிருக்கின்றன என்பதனை உணர்ந்தபின்னரேயாம். (யுரேனசைக் கி.பி.1781ல் ஹேசர் (Herschcl) என்பவராற் கண்டு பிடித்தனர். பின் நெப்ரியூனை கி.பி. 1846ற் கண்டுபிடித்தனர்.) யுரேனசை முதலிற் கண்டுபிடித்தபின், இக்கோளைப் பின்னிருந்து வேறொன்று இழுப்பதனை அவுதானித்த பின் 64 வருடங்களுக்குப் பின்னரே நெப்ரியூனைக் கண்டுபிடித்தனர். பின்னர் நெப்ரியூனை வலித்திழுப்பது போன்ற இன்னோர்

கோளின் அவதானிப்பின் பேரிலே புளூதோவை கி.பி.1930ம் ஆண்டிற் கண்டுபிடித்தனர். தற்பொழுது யுரேனஸ், நெப்ரியூன் பாதைகள் ஒழுங்கற்றிருப்பதற்குக் காரணம் புளூதோ மட்டுமன்றி வேறோர் பத்தாவது கோளும் இருக்கலாம் என்ற நம்பிக்கையில் விண்வெளி ஓடங்கள் ஆய்ந்துவருகின்றன. அமெரிக்காவின் கென்னடி விண்வெளி ஆய்வு நிலையத்திருந்து வொயேயா I (Voyager I) வெயோயர் II (Voyager II) எனும் விண்வெளி ஓடங்கள் கி.பி.1977ம் ஆண்டு விண்மண்டலத்தை நோக்கி ஏவப்பட்டன. இவை 1979ல் வியாழனையும், 1981ல் சனியையும் அடைந்து தகவல்களை அனுப்பின. பின் வெவேயர் I பிரிந்து, சூரியமண்டலத்தைக் கடந்துசெல்ல, வொயேயர் II யுரேனஸ் கோளை நோக்கிச் சென்று தகவல்களைக் கொடுத்தது. பின் 1989 ஆம் ஆண்டில் நெப்ரியூனை அடைந்து ஆராயும் எனவும் எதிர்பார்க்கப் பட்டது. யுரேனஸ் கோளினைத் தொலைக்காட்சிக் கருவிகளினூடாகப் பார்த்த, பேராசிரியர் எட்வேட் ஸ்ரோன் அது மேற்பரப்பில் கரடுமுரடான பள்ளங்களையும், மலைகளையும் கொண்டதெனவும், பார்வைக்கு எருதின் கண்களைப்போற் தோற்றமளிக்கிறதென்றும் விபரித்தனர். சில ஆண்டுகளுக்கு முன் யுரேனசில் ஒரு காந்த மண்டலம் உண்டெனத் தெரியவந்தது. யுரேனசை முதன்முதலாக அடைந்த விண்வெளி ஓடம் வொயேயர் II தான் யுரேனசைச் சுற்றிப் 12 சந்திரர்கள் உள என அறிவித்தது. முன்னர் ஐந்து சந்திரர்கள் இருப்பதாகவே கருதப்பட்டுவந்தது. அமெரிக்க நாஸா விண்வெளி ஆய்வாளர் (The National Aeronautics and Space Administration - NASA) பயனியர் - 10 (Pioneer - 10) பயனியர் - 11 (Pioneer - 11) என்பன 1972 பங்குனியில் ஏவப்பட்டனவாய் பதினாறு வருடங்களாக அதிதொலைவிற்குச் சென்று ஆராயும் விண் ஓடங்களாவன. பயனியர் - 10 1983, ஆனி மாதம் புளூதோவைக் கடந்துசென்றது. பயனியர் - 11 சூரியனின் எல்லையின் மறுதிசையை நோக்கிச் செல்ல, பயனியர் - 10 பத்தாவது கோளொன்று உளதா? என்ற ஆய்விலும், ஐஸ்ரின் தெரிவித்த ஈர்ப்பு அலைகள் (gravity waves) பற்றியும் ஆராயும். இதுவரை ஈர்ப்பு விசை இழுப்புக்கள்பற்றி அறியப்படவில்லை. எனினும் இவ்விரண்டு விண் ஓடங்களும் பொன்முலாமிடப்பட்ட அலுமினியத் தகட்டில், எமது சூரிய மண்டல அமைப்பினையும், ஆண், பெண் உருவங்களையும் பொறித்துச்கொண்டு, பூமிவாழ் மக்களின் வாழ்த்துச் செய்திகளை எடுத்துக்சென்று உள்ளன. எதிர்காலத்திற் பிறகோள்களில் வாழும் மக்களின் பதில் வாழ்த்துக்கள் கிடைக்கலாம் என்றும் எதிர்பார்க்கப் படுகின்றது[s].



மற்று, இதுவரை சோவியத் ரஷிய விஞ்ஞானிகளும், சந்திரனின் தரையில் மட்டுமே இறங்கி ஆய்வுகாளை நடாத்தியுள்ளனர். இவர்களின் ஆய்வுகளின்படி செவ்வாய்க் கோளே விண்கலன்களை அதன் தரையில் இறக்கி ஆராய வாய்ப்புடைய கோளாகத் தெரிகின்றது. எனினும் கி.பி.1988 - 89 ஆண்டுகளில் சோவியத் ரஷியா விஞ்ஞானிகளும், பிரெஞ்சு விஞ்ஞானி ஒருவரும் இணைந்து சென்ற விண்வெளி ஓடம், செவ்வாயின் தரையில் இறங்க எடுத்த முயற்சிகள் கைகூடவில்லை எனத் தெரிகின்றது. எனினும் விண்வெளி ஓடத்தலிருந்து தாம் வாழும் பூமியின் புறஅழகைக் கண்டு வியப்படைந்ததோடு, அக்காட்சி தம் கற்பனைக்கப்பாற்பட்டதென்றும் வருணிப்பர். அமெரிக்க விண்வெளி ஆய்வு நிலையமான நாஸா கி.பி.1990ம்

ஆண்டின் முற்பகுதியிலேயே செவ்வாய்க் கோளின்மீதான ஆய்வுகளை நடாத்த ஆரம்பித்தது. இவ்வாய்வுத் திட்டத்தின்கீழ்ச் சூரிய மண்டல உருவாக்கம்பற்றியும், அவற்றின் பௌதிக அமைப்புகள்பற்றியும் ஆய்வுகளை நடத்துவதோடு, விண்ணிலேயே அமைக்கப்படுகின்ற நிரந்தர ஆய்வுநிலையங்கள் மூலமும், தொலையுணர்வுச் செயற்கைக் கோள்கள், அதிவேகக் கம்பியூட்டர்கள் முதலியவற்றையும் பயன்படுத்தி, பூமியின் அமைப்புக்களையும் ஆராயுமெனத் தெரிகின்றது. ஏற்கனவே கி.பி.1877ல் செவ்வாய்க்கோளை கியோவனி ஷியப்பரெலியும் (Giaovanni Schiaparelli), பின்னர் லௌவலும் (Lowell) தொலைக் கருவிகளினூடாக ஆராய்ந்துள்ளனர். இவர்களின் ஆய்வின் போது செவ்வாய்க்கோளின்மீது, கோடுகள், கால்வாய்கள், பச்சை நிறம், பழுப்பு நிறம் என்பன அவதானிக்கப்பட்டுள்ளன. லௌவல் இக்கால்வாய்கள் செயற்கையானவையென்றும், செவ்வாயின் வெப்பநிலை நமது துருவப்பகுதி வெப்பநிலையை நிகர்த்த தென்றும், எமது துருவப்பகுதிகளில் மக்கள் வாழ்வதனாற், செவ்வாயக் கோளிலும மக்கள் வசிப்பர் என்பர். மேலும் இங்கு வாழ் மக்கள் தெய்வீகச்சக்தி வாய்ந்தவர்களாகவும், மனோசக்தி யாலும், தொலைவிலுள்ளவர்களுடன் பேசவல்லவர் என்றும் நம்பப்படுகின்றது9. அண்மையிற் (27-9-1989) சோவியத் ரஷியச் சிறுவர்கள் அவதானித்த வேறுகோள் வாசிகளுடன் விஞ்ஞானி ஒருவர் தொலைவிலிருந்து ஒளி சமிக்ஞைமூலம் உரையாடிக் கொண்டதாக் கூறப்படுகின்றது. இவர்கள் இச்செவ்வாய்க் கோளின் வாசிகளாகுமா? என்ற வினாவிற்கு செவ்வாய்க்குச்



சென்று மெற்கொள்கின்ற ஆய்வுகளே விடை தரலாம். எனினும் 11 வருடங்களுக்கு முன் வைக்கிங் - 10 விண்வெளி ஓடம் செவ்வாயிற் போட்டுவந்த தொலையுணர்வுக் காட்சிக் கருவிகள், தொடர்ந்து வெவ்வேறு காலங்களில் ஏற்படும் இயற்கை மாற்றங்களைப் பச்சை, சிவப்பு போன்ற நிறங்களைக் கொண்ட படங்களை அனுப்பிக் கொண்டிருப்பதாற், செவ்வாயில் உயிரணுக்கள் உள்ளன என்பதுமட்டுமன்றி, இதனிலும், இதுபோன்ற பிறகோள்களிலும் மனிதனுக்குச் சமமான அல்லது சிறிது வேறுபட்ட புத்தி ஜீவிகள் வாழலாம் என்பதோடு, அவர்களும் எம்மைப்போல் ஆய்வுகளை நடத்திப் பிற்கோள் களுக்கு சமிக்ஞைகள் அனுப்பிக்கொண்டிருக்கலாம் என்று பிரித்தானிய கணித விண்மீனியற் பேராசிரியர் எஸ்.சி.விக்ரமசிங்க கருதுவர்[10]. இவ்வாறு கடந்த இரண்டு, மூன்று நூற்றாண்டு காலமாகப், பிண்ட உலகம் செய்த ஆய்வுகளின் பயனாக, இவ்வண்டத்தின் ஒழுங்கான நியதிகளுக்கு கோள்களின் ஈர்ப்புவிசை, மின்காந்தசக்தி, அணுசக்தி என்பன மட்டுமன்றி, இவற்றுக்குப் பின்னாடி இயக்கி நிற்கின்ற இன்னோர் சக்தியையும் உதவுவதாகவே கருதப்பட்டு வருகின்றது. 1988ல் வெளியான விஞ்ஞானச் செய்திகளில், இவ்வண்டத்தை இயக்கிக் கட்டிக் காக்கின்ற அபூர்வ சக்தி பற்றிய குறிப்புகளுக்கும் இடம் அளிக்கப்பட்டுள்ளன.

உண்மையில் இம்மாபெரும் இயக்கத்திற்குப் பின்னாடி உள்ள சக்தி விஞ்ஞான ஆய்வுகளுக்கு அப்பாற்பட்டதாம். ஏனெனில் இவ்வண்டத்தில் அணுமுதல் அண்டம்வரை எல்லாமே

ஒருவித உன்னத ஒழுங்கின் கீழ்ச் செயற்பட்டு வருகின்றன. இதெல்லாம் இயற்கையாகவே உள்ளன எனில், இந்த இயற்கையும், அறிவு நுணுக்கமுள்ள பேரறிவுடைய அறிவுப் பொருளாகிவிடும். இப்பிரபஞ்சத்தில் யாவும் நியதிப்பட்டு இயங்குவதனால், அதன் பின்னாடி ஓர் ஆக்க அறிவு தொழிற்படுகின்றது என்பது உய்த்துணரத்தக்கதாகும். இந்தப் பிரபஞ்சத்தின் முழுமையான இயக்கத்திற்கு அணு முதலான யாவுமே, பகுதிகளாக நின்று தொழிற்பட்டு நிற்கின்றன. எனவே இந்தப் பிரபஞ்சம் எதனால்? யாரால்? எப்பொழுது? உருவாக்கப்பட்டதென்ற கேள்விகளுக்கெல்லாம், பிண்ட உலகில் சிறை வைக்கப்பட்டிருக்கின்ற, சிற்றறிவுடைய விஞ்ஞானிகளிட மிருந்து விடைபெறமுடியாது. பிண்டவடிவிலுள்ள மனித ஆற்றலுக்கும், அறிகருவிகளுக்கும், ஆராய்ச்சிகளுக்கும் எட்டாத உண்மைகளைச், சைவசித்தாந்தம், இன்றைய வளரும் விஞ்ஞான விளக்கங்களுக்கு ஏற்றவகையில் அறிவியலடிப்படையில், தர்க்க ரீதியாக விளக்கியுள்ளது. இறைவன், உயிர்கள், சடமாகிய உலகங்கள் என்றும் உள்ள பொருள்கள் என்ற உண்மையை, உலகுக்கு உணர்த்திய பெருமை சைவ சித்தாந்தத்தையே சாரும். இவற்றுள் இறைவன் மிகமிக நுண்ணிய அணுவிலும் அணுவாய் வியாபித்திருப்பவன். எனினும் அவன் அணுவிற்கும், அண்டத் திற்கும் அப்பாற்பட்டவனாக வேறாகியும் நிற்பன். அவனுடைய பேரறிவினாலேயே இப்பிரபஞ்சம் நியதிப்பட்டு வருகின்ற தென்பதனை மாணிக்கவாசகர்

**...............................நாடொறும்**
**அருக்கனிற் சோதி அமைத்தோன் திருத்தகு**



**மதியிற் றண்மை வைத்தோன் திண்டிறற்**
**றீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்**
**வானிற் கலப்பு வைத்தோன் மேதகு**
**காலி னூக்கங் கண்டோன் நிழறிகழ்**
**நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட**
**மண்ணிற் றிண்மை வைத்தோன் என்றென்**
**றெனைப்பல கோடி எனைப்பல பிறவும்**
**அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன்**
**(திருவண்டப்பகுதி 19-28)**

என்று எல்லாவற்றையும் அவனே தோற்றுவித்து, இயக்குகின்றான் எனக் கூறியருளுவர். சடப்பொருகள் யாவும் மிகச்சிறிய இறுதியான பிரிக்கமுடியாத அலகுகலாளானவை என்பதனைத் தத்துவ ஆசிரியர்கள் 2500 ஆண்டுகளுக்கு முன்னமே குறிப்பிட்டிருந்தனர். இக் கருத்தினை முதன் முதலாக விஞ்ஞான ஆய்வுகளால் எடுத்துக்காட்டியவர் கி.பி.1792 ல் டால்ட்டன் (Dalton) என்பவரே. ஜே.பி.ரிக்டர் (J.B.Richter) வேதியற்தனிமங்கள் எப்பொழுதும் ஒரு குறிப்பிட்ட அளவிற் சேர்ந்துதான், வேதியற் கூட்டுப்பொருள்கள் உருவாகின்றன என்பதனைக் கண்டு பிடித்தனர். இதனை டால்ட்டன் வடிவ கணிதமூலம், ஓர் ஆக்ஸிஜின் அணுவும், இரு ஹைட்ரஜன் அணுவும் 1:2 சேர்ந்தே நீர் மூலக்கூறு உருவாகும் எனக் காட்டினர். பின் மைக்கல்பாரேடே (Michael Faraday கி.பி.1791 - 1867) மின்னாற்றல்கூட அணு அமைப்பினைக் கொண்டது என்பதனைக் காட்டினார்.

லாஷ்மிட் (Loschmidt கி.பி. 1865) நூறுலட்சம் அணுக்களை, ஒன்றன்பின் ஒன்றாக வரிசையாக அடுக்கினால் அவற்றை 1 மில்லி மீற்றர் நீளத்திற்குள்ளே அடக்கலாம் என்றுகூறி அணுக்களின் பருமனை விளக்கமுயன்றனர். ஆனால் இரு நூற்றாண்டுகள் கடந்தும், அணுவின் ஆற்றலை மனிதன் பயன்படுத்திக்கொள்ளும் சூழ்நிலைகளுக்குப் பின்னரும், அவற்றின், அமைப்பைப்பற்றிக் கண்டு பிடிக்கப்படவில்லை. நாம் அணுவின் அமைப்பைப்பற்றித் தற்பொழுது அறிந்திருப்ப தெல்லாம் அது கிட்டத்தட்ட வீட்டினுட்பாயும் சூரியக் கதிரினுள்ள ஒரு சிறுதுகளின் பருமனாகவோ அல்லது அதைவிடச் சிறியதாகவோ இருக்கலாம் என்பதே. அதன் உள்ரகசியத்தை ஞானக்கண்களே காணலாம் என்பதனை

> அருளினா லாகமத்தே யறியலா மளவினாலும்
> தெருளலாஞ்சிவனை ஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே
> மருளெலா நீங்கக் கண்டு வாழலாம்
>
> (சி.சி.செய்.6)

என அருணந்தி சிவாசாரியார் கூறியருளுவர்.

எனினும் இன்றுவரை விஞ்ஞானிகள் சடப்பொருள்யாவும் அடிப்படை மூலகங்களான (ஹைட்ரஜன், காபன், நைட்ரஜன், ஒக்சிஜன்) சேர்க்கையாலுருவாகிய ஏறக்குறைய 105 மூலங்களால் ஆக்கப்பட்டவையென்றும், இவ்வெல்லா மூலகங்களும் மிகச்சிறிய அணுக்களாலானவை என்றும், இவ்வணுக்களின் கருவில் நேர்மின்னணுக்கள் (Protons), நடுநிலை மின்னணுக்கள், (Neutrons), புறத்தே எதிர் மின்னணுக்கள் (Electrons) இயங்கிநிற்கின்றன என்றும் கூறுவர். இவ்வாறு சடப்பொருளின் நுண்ணிய அணு நிலைகளைப் பௌதிகவியலாளர், ஆய்வுகள்முலம் எமக்கு உணர்த்தியமை அறிவியலிற் பெரும் சாதனையாகும். எனினும் விஞ்ஞானிக்கு விஞ்ஞானி கருத்துக்கள் வேறுபட்டுக் கிடக்கின்றன. எல்லா ஆய்வு முடிவுகளிலும் ஒத்த நிரூபணங்கள் கிடைப்பதாக இல்லை. பிரபஞ்சத்தின் இயல்புகள்பற்றி விளக்குகையில், ஒருவருடைய கருத்து மற்றவருடைய கருத்திலிருந்து வேறுபட்டுக் கொண்டேயிருந்தன என்பதனை மேலே அவதானித்திருந்தோம். அவ்விதமே அணுவைப்பற்றிய ஆய்வுகளும், அதன் அமைப்பு, இயல்பு, உருவம், இயக்கம் என்பனபற்றிய கருத்துக்களும் நாளுக்குநாள் வளர்ச்சி பெறலாயின[11]. எனவே இறுதியிற் சடப்பொருள்கள்பற்றிய ஆய்வில் விஞ்ஞானிகள் ஊகங்களிலேதான் தங்கியிருக்கின்றனர். அதனாற் பௌதீகத்தின் உண்மையைக் காணமுடியாதவர்களாக இருக்கின்றார்கள். ஒலி, ஒளி, மின்சாரம், காந்தம், மின்காந்தம் முதலானவற்றின் தோற்றம், வியாபகம் என்பனபற்றிய கருத்துக்களும் ஊகத்திற்கிடமான நிலைகளையே ஏற்படுத்தி யுள்ளன. இத்தகைய பின்னணிகளில், இவற்றின் உண்மைகளைத் திட்டவட்டமாகக் கூறமுடியாவிடினும், சடப்பொருளையும், சக்தியையும் புதிதாக உருவாக்கவோ அல்லது அதனை முற்றாக இல்லாமற் செய்யவோமுடியாது. எனவே இவை என்றுமுள்ள சடசக்தியேயாம். சடம் ஓய்வுநிலையில் இருக்கையிற் சக்தியதனுள் உறைந்திருக்கும்[12]. விஞ்ஞானிகளின் இந்த முடிவு இறுதியில் "எல்லாமே உள்பொருள்கள்" என வற்புறுத்தும் சைவ சித்தாந்தக் கோட்பாட்டினை மேலும் உறுதிப்படுத்தும் முடிவுகளாம்.

சைவ சித்தாந்தம் உள் பொருளாகிய மாயையிலிருந்தே உலக விரிவை விளக்குகின்றது. அக்காரண வடிவிலிருந்த சக்தியின் விரிவே நாம் காண்கின்ற சட உலகமாகும். இதனையே பௌதீகவியலாளர் ஐன்ஸ்ரின் "சக்தியின் பெருக்கம் சடமும், சடத்தின் பெருக்கம் சத்தியுமாம்" என்றனர். மேலும் இவருடைய சார்புகொள்கைப்படி, ஒரு பொருளின் பொருளுண்மைக்கும், அதன் முழு ஆற்றல் அளவிற்குமிடையே உறவுமுறையைக் காட்டினர். அணுவிலுள்ள இந்தச் சக்தியையே விஞ்ஞானிகள் அணுச்சக்தி என்பர். பிரபஞ்ச விரிவிற்கு அடிப்படையாக அமைந்த அணுக்களை ஏறக்குறைய ஐம்பத்தொரு வருடங் களுக்குமுன் 1938ல் ஜெர்மனிய விஞ்ஞானிய ஓட்டாஹன் (Ottohahn) யுரேனியத்துடன் இணைத்து வெடிக்கவிட்டபொழுது, அது அழிவுச்சக்தியாக மாறி வெடித்துச் சிதறிற்று[13]. இந்த அழிவுச் சக்தி, அந்த அணுக் கருவாகிய நடுநிலை மின்னணுக்களில் (Neutrons) அடங்கியேயிருந்தது. மேலும் அணுசக்தியினின்றும் கிடைக்கப்பெற்ற, மின்சக்தியே இன்று விண்வெளி ஓடங்களிற் பொருத்தப்பட்டு, வானொலித் தொடர்புகளை மேற்கொள் வதற்குரிய மின்சக்தியை வழங்கி வருகின்றன. எனவே அணுக்களும், அவற்றின் மின் சக்தியும் எங்கும் பரந்திருந்தும் எமக்குப் புலனாகும்வகையில் அவை இருப்பதில்லை. எனவே அருவமாக இருக்கின்ற இம் மின்சக்தியைக் கருவிகள்மூலம் தொழிற்படுத்தியே, நாம் பயன்பெற முடிகின்றது. இவ்விதமே அண்டங்களிடையேயுள்ள ஈர்ப்புவிசையும் அருவமானதேயாம் என்பதனை விஞ்ஞான ஆய்வுகள் தெளிவுபடுத்தியுள்ளன. இவ்வாறு விஞ்ஞானிகள் பஞ்சபூதங்களையும், அவற்றின் நுண்ணியற் கூறுகளாகிய அணுக்களின், ஆக்க அழிவுச் சக்திகளையும் விரிவுபட ஆராய்ந்துள்ளார்கள். எனினும் பிரபஞ்சப் படைப்பில் இவற்றினை ஆயுமிடத்து, அருவமாக உள்ள இன்னும் சில விடயங்கள் அவர்களுக்குத் தெளிவாக வில்லை என்ற உண்மையை அவர்கள் ஒப்புக்கொண்டுள்ளார்கள் என்பதனை மேலே அவதானித்திருந்தோம்.



ஏற்கனவே, தத்துவ உலகில் பிற்கால விஞ்ஞான ஆய்வுகள் எல்லாம் எடுத்தாராயப்பட்டிருந்தன. கி.மு. 600ல் வாழ்ந்த தேலஸ் (Thales) எனும் கிரேக்க மெய்ப்பொருளியலாளர் நீர்தான் எல்லாப் பொருள்களுக்கும் மூலம் என்றனர். பின் இவருடைய மாணவர் அனாக்ஸிமாண்டர் (Anaximander) ஒரே ஒரு அடிப்படைப் பொருள்தான் உலக உருவாக்கத்திற்கு மூலமாக இருப்பின், இந்த முடிவிலாத பொருளே அகிலம் முழுவதும் நிரம்பிக்கிடக்கும். அதனால் அகிலத்தின் பல்வேறுபட்ட தோற்றங்களின் அடிப்படை களை விளக்கமுடியாமற் போய்விடும். எனவே அவர் முடிவிலா எண்ணிக்கையுடைய அடிப்படைப் பொருள்கள் உள என்றும், அவை என்றும் உள் பொருளென்றும், அவற்றை அழிக்க முடியாதென்றும், அப்பொருள்கள் இயக்கம்பெறும்பொழுது இவற்றிடையேயுள்ள தற்செயலான சேர்க்கையே உலகிலுள்ள நிகழ்ச்சிகளை இயற்றி, அவற்றைத் தொடர்ந்து நீடிக்கவும் செய்கின்றன என்றும் கூறினார். இவருக்குப்பின் பத்து ஆண்டுகள் கழித்து எம்பிடாக்கிலிஸ் (Empedocles) என்பவரே இவ்வுலகின் தோற்றத்திற்கு மண், காற்று, நெருப்பு, நீர் என்னும் தனிமங்களே அடிப்படைப் பொருள்கள் என்றனர். பின் டெமாக்ரீட்டஸ் (Democritus) என்பவரே அணுக்கொள்கையைத் தெரிவித்தனர்.

இவர் அழிவற்ற பிரிக்க முடியாத துகள்கள் உள்ளன. இவையே எல்லாச் சடப்பொருள்களின் அடிப்படை அலகுகள் எனக் காட்டினர். இவர் அணுக்களும், அவை இயங்கும் வெட்ட வெளியுமே நிலையானவை, மற்று, ஒரு பொருள் நிறத்தைப் பெற்றிருப்பதும், அஃது சுவை முதலான குணங்களைப் பெற்றிருப்பதும் வெறும் தோற்றங்களே என்றனர். இவருக்குப்பின் பிளேட்டோ (Plato) முதலானோர் இக்கருத்துக்களிற் சில திருத்தங் களைச் செய்தனர். இதன்பின் கிரேக்க மெய்ப் பொருளியலில் அணுக்கொள்கையில் வளர்ச்சிகள் ஏற்படவில்லை".

இந்திய தத்துவ உலகில் கிறித்து சகாப்தத்திற்கு முற்பட்ட காலம் முதலாகப் பஞ்சபூத இயல்புகளைப் பற்றியும், அணுக்களின் இயல்புகள் பற்றியும் தெளிவாக எடுத்து ஆயப்பட்டுள்ளன.

**நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்**
**கலந்த மயக்கம் உலகம் ஆதலின்**
**(தொல்காப்பியம். பொருள் மரபு 89)**

என்பர் தொல்காப்பியர். நிலனும், தீயும், நீரும், காற்றும், ஆகாயமும் எனும் ஐம்பெரும் பூதங்களின் சேர்க்கையின்றி உலகத் தோற்ற மில்லை என்பது இதன்பொருளாம். மதுரைக் காஞ்சி

**''நீரும் நிலனும் தீயும் வளியும் மாக விசும்போடு**
**ஐந்து னியற்றிய மழுவாள் நெடியோன்"**
**(வரி 453 - 455)**

என இறைவனே இவற்றைத் தோற்றுவித்தனன் என்னும். இதே கோட்பாட்டினைப் புறநானூறு



**மண்திணிந்த நிலனும்**
**நிலனேந்திய விசும்பும்**
**விசும்புதைவரு வளியும்**
**வளியிற்தலைஇய தீயும்**
**தீமுரணிய நீரும் என்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்து இயற்கைபோல் (புறம் - 2)**

எனக்கூறும். இதனைப் பழைய உரை நூலார் அணுச்செறிந்த நிலனும், அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தடவிவரும் காற்றும், அக்காற்றின்கண் தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீரும் என ஐவகைப்பட்ட பூதத்தினது தன்மைபோல, எனப் பொருள் கொள்வர். மணிமேகலையிற் சைவ வாதி தெரிவித்த படைப்புத் தத்துவத்தினையும் இங்கு நினைவு கூரல் ஏற்றதாம். (27: 86-95)

இறைவனே இவ்வைம்பூதங்களிற் கலந்திருக்கின்றனன் என மணிவாசகர்,

**பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி**
**நீரிடை நான்காய் திகழ்ந்தாய் போற்றி**
**தீயிடை மூன்றாய் திகழ்ந்தாய் போற்றி**
**வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி**
**வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி**
**(போற்றித் திருவகவல் 137 - 141)**

எடுத்துரைப்பர். பஞ்சபூத தத்துவங்களின் விரிவினை இதனடிப்படையிலேயே திருநாவுக்கரசரும் விளக்கியருளுவர்.

மின்னுருவை விண்ணகத்தில் ஒன்றாய் மிக்கு
வீசுங்கால் தன்னகத்தில் இரண்டாய்ச் செந்தீத்
தன்னுருவின் மூன்றாய்த் தாழ் புனலில் நான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி எஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை

(அப்பர் 63)

தருக்கநூலார் பரமாணுக்களே என்றும் உள்பொருள்கள் என்றும், இறைவன் உலகைப் படைக்க இச்சை கொள்கையில் இவைகள் தொழிற்படுகின்றன என்றும் கூறுவர். இப்பரமாணுக் களில் இரண்டுகூடி ஈரணுத்தோன்றும், பின் ஈரணு மூன்றுகூடி மூவணுத்தோன்றும் என்றும், இவ்வாறு அணுக்களின் கூட்டுச் சேர்க்கையினாற் பெரும்பூமி, பெருநீர், பேரொளி, பெரியவாயு, என்பன தோன்றுகின்றன, பின் இறைவனின் இச்சைப்படி தோற்றிய முறைப்படியே அழிவனவாம்[15] என்றும் கூறுவர்.

ஆசீவகர் உயிரணு, நிலவணு, நீரணு, தீயணு, காற்றணு என ஐந்தணுக்களும் பரமாணுக்கள் என்பர். அதாவது இவை என்றும் உள்பொருள்களே என்பர். அதனால் இவை அழிவற்றவை என்றும், இவை தத்தம் வகை அணுக்களிலே புகுதலையும், பிரிதலையும் செய்கின்றன. ஆனால் ஒன்று ஒன்றினோடு புகும்பொழுது இரண்டு அணுக்களும் ஒன்றாகா. இவ்வாறு இவ்வணுக்களே மலை, மரம் உடல் எனத்திரண்டு, பின் வேறு வேறாகப் பிரிவதும் உண்டு. நிலம், நீர், தீ, காற்று எனும் நால்வகை அணுக்களும் நாற்பூதங்களாக நிலவும்பொழுது சில விதிப்படியே



சேருகின்றன அதாவது நிலமாகிய பூதம் உருவாவதற்கு நில அணுக்கள் ஒன்றானால், நீரணுமுக்கால், தீயணு அரை, காற்றணு கால் என்றளவிற் சேரவேண்டும் என்பர். எந்த அணு அதிகமாக ஒரு பூதத்தில் இருக்கின்றதோ அதன் பெயராலே அப்பூதம் அழைக்கப்படும். கண்முதலிய பொறிகளால் எளிதில் காண முடியாத ஒவ்வோர் அணுவையும் ஞானக்கண்ணுடையோரே தம் நுண்ணுணர்வாற் காண்பர்[16].

வைசேடிகர், அகிலத்தின் பொருள் தொகுதிகள் யாவற்றுக்கும் காரணமாயிருப்பது நிலம், நீர், தீ, காற்று, விண், திசை, காலம், ஆன்மா, மனம் எனும் ஒன்பது பொருள்களே என்பர். இவற்றுள் நிலம், ஒலி, ஊறு, நிறம், சுவை, நாற்றம் எனும் ஐவகைக் குணங்களும் பொருந்தியது. நீர், தீ, காற்று, விண் என்ற ஏனைய நான்கும் மேற்குணங்களில் முறையே ஒவ்வொன்றாகக் குறைந்து எஞ்சிய குணங்களை உடையனவாம் என்பர் [17].

இவை தவிரப் பதஞ்சலியோக சூத்திரமும் அணுவின் நுட்பங்களையும், அதன் பரிணாம இரகசியங்களையும் சான்றுகளுடன் விபரிக்கும்.

"சைவ சித்தாந்தம் "இன்னுழை கதிரின் றுன்னணுப்புரைய" (திருவாகம் - திருவண்டப்பகுதி வரி.5) என அணுக்களுக்கு வடிவமைப்புக்கூறும். அதனாற் பிரபஞ்ச விரிவிற்கு உறுப்புக்களை யுடைய அணுக்கள் காரியப்பொருள்களேயன்றி. முதற்காரணப் பொருள்களல்ல. உறுப்புகள் தன்மையில்லாத மாயையே இப்

பிரபஞ்சத்திற்கு முதற்பொருள் என்னும் (சி.சி.33; சிவப்பிரகாசம். செய். 21, 22) மேலும் உலகம் முழுவதும் ஒடுங்கும்பொழுது உருவமுடைய அணுக்களும் ஒடுங்குதலால், அவ்வணுக்கள் நித்தமாயின் காரிய உலகமாகித் தோன்றி, நின்று அழிதல்கூடாது என்று தருக்கவாதிகள் அணுக்கள் நித்தம் என்று கூறும் வாதத்தையும் மறுப்பர். (சி.சி.செய்.31)

சைவ சித்தாந்தம், இவ்வண்டமனைத்தும் மாயையிலிருந்து விரிந்த 36 தத்துவங்களின் விரிவினால் உருவற்றதும், உருவு உடையதும், உருவும் உருவில்லாததுமான காரியப் பிரபஞ்சம் யாவும் இத் தத்துவங்களின் வடிவேயாம். (இத்தத்துவ விளக்கப் படத்தைப் பார்க்கவும்) இத் தத்துவங்களுடன் உயிர்களைக் கூட்டி வைப்பவன் இறைவனே. எனவே இப்பிரபஞ்ச விரிவில் அளவற்ற உயிர்கள், மாயை (யிலிருந்து விரிந்த தத்துவங்கள்) இறைவன் ஆகிய மூன்று பொருள்களும் ஒன்றியைந்து தொழிற்படு கின்றனவாம். அதனாலே திருமந்திரம் "அத்தன் அருளின் விளையாட்டிடம் சடம்" எனக் குறிப்பிடும். எனவே இவை யாவற்றையும் விரித்துக், காத்து, ஒடுக்குகின்ற அந்த ஆக்க சக்தியே, இவை யாவற்றிலும் ஒன்றாய், உடனாய், வேறாய் நின்று இயக்குபவன் ஆவன். அதனாலே அவனை மாணிக்கவாசகர்,

**அனேகன், ஏகன், அணு அணுவில் இறந்தாய்**
**(திருச்சதகம் வரி 97)**

என்றனர்.



மேலும் உயிர்களின் வியாபகத் தன்மையை, ஆணவம் அணுவாக்கி வைத்திருப்பதனாற் சைவ சித்தாந்தம் உயிர்களையும் அணுக்கள் என்றே குறிப்பிடும். திருமூலர் உயிரைக் குறிப்பிடும் தோறும் அணுவென்றே குறிப்பிடுவர். (திருமந்திரம் செய். 239, 648, 2401, 2421, 2242) சிவஞான சித்தியாரும்,

**அணுவினோ டெல்லாமாகி யடைந்திருந் தத்துவங்கள்**
**(செய். 168)**
**எல்லாமாய்த் தத்து வங்க ளியைந்ததென்**
**னணுவுக் கென்னின் (செய் 169)**
**தத்துவந் தன்னிற் சாரு மணுக்கள் (செய். 161)**
**அணுவா யோநி சேர்ந்திடும் (செய். 126)**

என உயிரை அணுவென்றே குறிப்பிடுவர். உமாபதி சிவாசாரியாரும்

**"அணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே"**
**(சிவப்பிரகாசம் 18)**
**"கன்மாந்த மணுக்க ளியார்க் மாவாரமாய்"**
**(சிவப்பிரகாசம் 22)**

என்பர்.

இவ்வாறு சைவ சித்தாந்தம் பதி, பசு, பாசம் ஆகிய மூன்று பொருள்களிலும் அணுநிலையை விளக்கியிருப்பது விஞ்ஞான ரீதியால் இன்னும் அணுகப்படாததொன்றாகும். இம்மூன்று நித்தியப் பொருளாகிய அனாதி நுணுக்குகள் அணுவில் சுழலுகின்றன என்பதனைத் திருமூலர்,

அணுவில் அணுவினை ஆதிப்பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங்கூறிட்டு
அணுவில் அணுவை அணுக வல்லார்கட்கு
அணுவில் அணுவை அணுகலுமாமே
(திருமந்திரம் 1971)

என்பர்.

இத்தகைய அணுவின் மாபெரும் ஆற்றலையே, இன்றைய விஞ்ஞானம் தனது அறிவாற்றலை, உலகியல் ரீதியில் வளர்ப்பதற்குப் பயன்படுத்தி வருகின்றது. இறைவன் அணுவில் ஆடிக்காட்டும் தாண்டவம்போல், இன்றைய அறவியலில் மின்னணுவின் தாண்டவம் எண்ணற்றவையாம். இது இன்னும் "அணுவிற்கணுவாய் அப்பாலுக் கப்பாலாய்" நிற்கும் இறைவனின் பெருமையை வெளிக்கொணரும் சாதனமே யாம்.

சைவசித்தாந்தம் பிரபஞ்சவிரிவில் அறுபது புறத் தத்துவங்களையும், முப்பத்தாறு உள்தத்துவங்களையும் தொழிற்படுகின்றன எனக்கூறும். இதனைத் திருமூலர்

ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொது என்பர்
ஆகின்ற ஆறா றருஞ் சைவர்தத்துவம்
(திருமந்திரம் 2138, 2139)

என விபரிப்பர்.

எல்லாமாக நான்குகோடியே நாற்பத்தெண்ணாயிரத்து ஐந்நூறு (40048500) தத்துவங்களெனவும், அவையாவும் தொண்ணூற்றாறில் அடங்கும் எனவும், அவற்றை இன்னும்



முப்பத்தாறில் அடங்கும் எனவும் கூறுவர். 40048500 தத்துவங்களை சித்தர்களே யுணரவல்லவர். 96 தத்துவ சேர்க்கையால் உயிர்கள் உருவெடுத்து, வாழ்ந்து, மடிந்து, பின்பும் 96 தத்துவங்களிலே ஒடுங்குகின்றன. இவையாவும் உயிர்கள் இன்ப துன்பங்களை அனுபவிக்கக் கொடுத்த கருவிகளாம். தொண்ணூற்றாறு தத்துவங்களாவன: அவத்தைகள் 5, ஆதாரங்கள் 6, மண்டலம் 3, மலம் 3, தோடம் 3, ஈடணை 3, குணம் 3, இராகம் 8, நாடி 10, வாயு 10, அந்தக்கரணம் 4, உயிர் (அறிவு) 1, கன்மேந்திரியம் 5, தன்மாத்திரை 5, பொறிகள் 5, புலன்கள் 5, பூதங்கள் 5, ஆசயம் 5, கோசம் 5, வினை 2 என்பனவாம்.

உள்தத்துவங்களான முப்பத்தாறு தத்துவங்களும் நித்தமாய், சடமாய், மெய்ப்பொருளாய், அருவமாயுள்ளதும், பிரபஞ்சத்திற்கு முதற்காரணமுமான மாயையிலிருந்து நாதம் முதற் பூமி ஈறாக விரிந்தனவாம். இத்தத்துவங்களுக்கு மேலாகச் சிவனும், சக்தியும் நிற்பர். முதலிற் சுத்தமாயையிலிருந்து சுத்தப் பிரபஞ்சமாகிய ஐந்து சிவ தத்துவங்களை இறைவன் தன் ஞானசக்தியால் நோக்கிச் செயற்படுத்துவன். அதனால் இவை நாதம் (சிவம்), விந்து (சக்தி), சதாக்கியம் (சதாசிவம்), ஈசுரம், சுத்தவித்தை என்று முதல்வனுக்குரிய பெயர்களாலேயே அழைக்கப்படுவனவாம். இவ்வைந்து சுத்த மாயை தத்துவங்களும் மயக்கமின்றி அறிவை விளக்குவனவாம். சிவத்துக்கும், சக்திக்கும் நிலைக்களமான நாதமும், விந்துவும் சுத்த மாயையிற் தொழிற்படும் வகையை எவரும் அறியமாட்டார்கள். இப்பகுதி, உயிர்களின் மலகன்மங்களோடு விரவாது சுத்தமாயிருந்தலால் சுத்தமாயை எனப்படும். இதிலிருந்தே சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி

என்னும் ஒலிவடிவான பேச்சுக்கள் தோன்றும். சிவம் அறிவு வடிவினன் ஆகையினால், அவன் தொழிலுக்கு இடமாக அமையும் பகுதியே சுத்த மாயை என்றும், சிவன் அதிட்டித்து நிற்காது விரிகின்ற கலைமுதற் பூமி ஈறாகிய முப்பத்தொரு தத்துவங்களும் உடல், கருவி, உலகம், இன்பம் என்பன தோன்றுவதற்கு இடமாக இருந்து, உயிரின் மல கன்மங்களோடு விரவுகின்ற பகுதியானபடியால் அசுத்த மாயை என்றும் கூறப்படும். எனினும் பிரபஞ்ச விரிவிற்கும், ஒடுக்கத்திற்கு மிடமான மாயை ஒருபொருளேயாம். எடுத்துக்காட்டாக வினையொன்றே நல்வினை, தீவினை என இருவகைப்பட்டுப் பயன்தருவதுபோல, மாயை ஒன்றே உயிர்களுக்கு முறையே மயக்கமின்றி அறிவிப்பதாயும், மயக்கியறிவிப்பதாயும், இருவகைப்பட்டுப் பயன்தருதலால் சுத்தமாயை, அசுத்தமாயை என அழைக்கப்படுகின்றதாம். உயிருக்கு அறிவை வளர்க்கும் சுத்தமாயை காரியமான சொற் பிரபஞ்சம் தோன்றியதும், மாயையில் அநந்ததேவர், சீகண்டருத்திரர் முதலியோராற் காரியப்படுத்தப்படும் அசுத்த மாயை காரியமான, அசுத்தமாயை (மோகினி) காலம், நியதி, கலை, வித்தை அராகம், என்பன வந்து பொருந்தி வினைப்பயன்களை அனுபவிக்கக் கருதும் காலத்தில், அது புருடதத்துவமாய் நிற்கும். இவ்வித்தியாதத்துவங்கள் தொழிற்படுகையில் கலை, வித்தை, அராகம், காலம், நியதி என்ற முறைமையிற் தொழிற்படுவனவாம். இவ்வாறு சுத்தமாயை காரியமான சொற்பிரபஞ்சங்களுடனும், அசுத்தமாயை காரியமான ஏழு வித்தியாதத்துவங்களுடனும், பின் உயிர்த் தத்துவ கருவிகளான இருபத்துநான்கு தத்துவங்களுடனும் (தத்துவ விளக்கப் படத்தைப் பார்க்கவும்.) கூடிய உயிர், இவ்வாறு இறைவன் வைத்த தத்துவ இரகசியங்களுடன் கூடுதலினால், ஆணவமலம் சிறிது விலகப்பெற்று விடயங்களைப் பொருந்தி, இன்பங்களைத் துய்க்க விரும்பும். இவ்வாறு உயிரின் ஆணவமலமறைப்பை நீக்குவதற்காக, இறையருளாற் சுத்தமாயையிலான ஒலிகளும், கலை முதலிய வித்தியா தத்துவங்களும் உயிருடன் கூடியவுடன், உயிரின் மூலாதாரத்தில் விளங்கும் விந்து தத்துவத்திலிருந்து சூக்குமை எனும் ஒப்பற்ற நுண்ணொலி தோன்றி, வயிற்றை அடையும். இந்நுண்ணிய வடிவான ஒலியானது, எழுத்துக்கள் பிரிந்து ஒலிக்காத வகையில் இதயத்தையடைந்து, சிந்தையில் நிற்கும். இந்நிலையில் இவ்வொலி விகற்பமான உணர்வுகளை ஏற்படுத்துதலாற் பைசந்தி எனப்படும். பின் ஒலிகள் கழுத்தை அடைகையில், எழுத்துக்கள் பிரிந்து தோன்றினும், தன் செவிக்குமட்டுமே எட்டுவதாய்ப், பிறர் செவிக்குக் கேட்கப்படாததாய் விகற்ப உணர்வுகளுடன் கூடியதாய் இருக்கும் நிலையில், மத்திமை ஒலி எனப்படும். இவ்வாறு இருக்கையில் வயிற்றிலுள்ள பிராணவாயுவினால் ஒலிகள் வெளியே தள்ளப்படும்பொழுது, எழுத்துக்கள் நுண்வடிவிற் தோற்றம்பெற்று தன் செவிக்கும், பிறர் செவிக்கும் கேட்கப்படும் நிலையையடைந்து, நினைத்த பொருளைச் சொல்லும் சொல்லாக உருவெடுக்கும். இந்நிலையில் இது வைகரி எனப்படும். இவற்றுள் மூலாதாரத்திற் தோன்றிய சுத்தமாயை வடிவான நுண்ணொலியே அழியாதது. மற்றவை யாவும் அழியும் இயல்புடையனவாம். (இவற்றின் விரிவை சி.சி.செய் 39-46) சிவப்பிரகாசம் செய் 37 -39 களிற் கண்டு தெளிக.)

இனி, மாயையில் அநந்ததேவர் சக்தியினாற் கலக்குண்ட பாகத்தில் வித்தியாதத்துவங்களான காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்பன தோன்றி இவற்றின் சேர்க்கையாற் புருடதத்துவம் ஏற்படுகையில், உயிர் இந்நிலையில் விடயங்களில் அழுந்தி நிற்கும். இங்ஙனம் வித்தியாதத்துவங்களின் சேர்க்கையால், இன்பங்களை அனுபவிக்கும் நிலையைப்பெற்ற உயிருக்குப் பின், குணம் முதல் நிலம் ஈறாகவுள்ள இருபத்துநான்கு உயிர்த்தத்துவங்களின் இன்பங்கள் உளவாம்படி செய்வதற்காகக் கலையினின்றும் மூலப்பகுதி (பிரகிருதி) தோன்றிச் சீகண்டருத்திரராற் சக்தியிற் கலக்கக் கலக்குண்டு, தன்னின்றும் குணதத்துவத்தைத் தோற்றுவிக்கும். இந்த ஆன்ம தத்துவங்களின் விரிவையும், தொழிற்பாட்டையும் ஆராயமுன், வித்தியா தத்துவங்களின் தொழில்களையாராய்வோமானால், காலதத்துவம் இறந்தகாலத்து எல்லையையும், நிகழ்காலத்துப் பலத்தையும், எதிர்காலத்துப் புதுமையையும், வரையறை செய்து நிற்கும். நியதிதத்துவம் உயிர்கள் முன்னே சுயேச்சையாகச் செய்த வினைகளை, அவரவர் அனுபவிக்கும்படி நிச்சயம் பண்ணி, அணுமுதல் அண்டம்வரை நியதிப்படுத்தி நிற்கும். கலை எனும் தத்துவம் ஆணவவிருளிற் செயலற்றுக்கிடந்த, உயிரின் ஆணவமலத்தைச் சிறிது விலக்கி, உயிரினைச் செயற்படத்தூண்டி, விடயபோகங்களிற் செலுத்தி நிற்கும். வித்தை, உயிரானது விடயங்களைப் பொருந்துவதற்குரிய அறிவை உயிரிடத்தில் விளக்கி, அவ்விடயங்களிற் செலுத்திநிற்கும். அராகம் உயிர்கள் தத்தம் வினைப்பயனுக்கீடாகப் பெற்று அனுபவிக்கும் இன்பங்களிற் திருப்தியையேற்படுத்தாது, மேலும் போகங்களில் ஆசையை மிகுவிக்கும்.



இனி, உயிர்தத்துவங்கள் இருபத்துநான்கின் விரிவையும், அவற்றின் தொழிற்பாட்டையும் நோக்குவாம். கலையிலிருந்து தோன்றிய மூலப்பிரகிருதியில் உருவற்ற குணவடிவம், சீகண்ட ருத்திரரின் சக்தியினாற் கலக்கப்படுத்துமிடத்து முக்குணமாய்ப் பகுப்புற்றுத், தம்முட் சமமாய் நிற்கும் நிலையே குணதத்துவமாம். இக்குணதத்துவம் மூலம் பகுதியின் வளர்ச்சியேயன்றிப் பரிணாமமன்றாதலால், மூலப் பகுதியோடு ஒன்றாகவும் கருதப்படும். அக்குணதத்துவத்திலே புத்தி தத்துவம் தோன்றும். இப்புத்தி தத்துவம், உயிருக்கு வித்தையால் விளங்கிய ஞானசக்தியைக் கொண்டு, உயிர்கள் செய்த பாவ, புண்ணியங் களுக்கேற்ப விடயங்களை இது, அது எனத்தீர்மானித்தும், வருஞ் சுக, துக்க, மோக மயக்கங்களில் அழுந்தி, உயிரின் அறிவையும், தொழிலையும் வளர்த்து நிற்கும். இப்புத்தி தத்துவத்திற் தோன்றிய அகங்கார தத்துவம், இது என்னாலே முடியும், என்னோடு ஒப்புவர் யார்? என்று செருக்குற்றும், இது யான், எனது என்ற உயிரை ஊக்குவித்தும் நிற்கும். இது சாத்துவிகம் (தைசதம்), ராஜசம் (வைகாரிகம்), தாமதம் (பூதாதி) என மூவகைப்படும். மனமானது சாத்துவிக அகங்காரத்தினின்றும் தோன்றி, எதிர்பட்ட பொருளை இது யாதோ என்று, சித்தநிலையிற் சிந்தித்து ஐயமடைந்து நிற்கும். இங்கு மனம் ஒரு பொருளைக்கண்டு இது யாதோ என்று, சிந்தித்து நிற்கும் நிலை சித்தம் என்றும், அவ்வாறு சிந்தித்த பின் இதுவோ, அதுவோ என்று ஐயப்படுகின்ற நிலையே மனம் எனப்படும். எனவே சித்தம் என்ற ஒரு தனித்தத்துவம் இல்லையென்றும், மனம் எனும் தத்துவமே, தொழில் வேறுபாட்டால் இருவகையாயிற்று என்றும் சைவசித்தாந்தம் விளக்கினும், புத்தி அகங்காரம், மனம், சித்தம் என அந்தக்காரணம் நான்கு எனக்கூறும். பின் அதே

தைசத (சாத்விக) அகங்காரத்தினின்றே ஞானேந்திரியங்களாகிய செவி, உடம்பு, கண், நாக்கு, மூக்கு முதலானவையும், வைகாரிக (ராஜஸம்) அகங்காரத்தினின்றும், கன்மேந்திரியங்களாகிய வாய், கால், கை, மலவாயில், குறி ஐந்தும் தோன்றும். இவற்றுள் ஞானேந்திரியங்களான செவி முதலான ஐந்தும் சூக்கும வடிவிலான உட்பூதங்களைப் (ஆகாயம், காற்று, ஒளி, நீர், நிலம்) பற்றுக்கோடாக நின்று தொழில்களைச் செய்கின்றன. மற்றுக் கன்மேந்திரியங்களான வாய் ஆகாயத்தையும், கால் காற்றையும், கை தீயையும், மலவாயில் நீரையும், குறிநிலத்தையும் பொருந்தி முறையே பேசுதல், நடத்தல், கொடுத்தல், மலம் கழித்தல், இன்புறல் முதலான தொழில்களைச் செய்கின்றன. இனி உட்கருவிகளாகிய தன் மாத்திரைகளின் விரிவையும், தொழிலையும் நோக்குவோம். ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் ஆகிய தன்மாத்திரைகள் தாமத (பூதாதி) அகங்காரத்திலிருந்து தோன்றிப், புறக்கருவிகள் விடயங்களைப் பொருந்தும்படி, ஊக்குவித்து, அவற்றோடு இயைந்து நிற்கும். இச்சத்தம் (ஒலி) முதலான தன்மாத்திரைகளினின்றும் நுண்பூதங்களாகிய (அகப்பூதங்கள்) தோன்றி, உயிர்களுக்கு ஒலிமுதலான விடயங்களுக்குப் பற்றுக்கோடாக உள்ளன. அகப்புறப் பூதங்கள் உடலுடன் உள்ளும் புறமுமாக நிற்பனவாம். புறப்பூதங்களே நமக்குப் புலனாகின்ற வான்வெளி, காற்று, தீ, நீர், நிலம் ஆதியனவாம். இப்புறப்பூதங்களில் ஆகாயத்தின் குணம் வெளியாயிருத்தல், தொழில் இடங்கொடுத்தல், காற்றின் குணம் சலித்தல், தொழில் பரந்தவற்றை ஒன்றுதிரட்டுதல், ஒளிக்குக் குணம் சுடுதல், தொழில் ஒன்றுவித்தல், நீருக்குக்குணம் குளிர்தல்,



தொழில் பதஞ்செய்தல், பூமிக்குக் குணம் கடினம், தொழில் தாங்குதல் என்பனவாம். மாயைவாதிகள் ஆகாயத்தினின்றும் காற்று, காற்றினின்றும் ஒளியும், ஒளியிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் என ஒன்றன்பின்னொன்றாகத் தோன்றுமென்பர். ஆனாற் சைவ சித்தாந்தம் ஒலியாகிய ஒரு குணத்தையுடைய வான்வெளியிலிருந்து, ஒலி, பரிசமாகிய இருகுணங்களையுடைய காற்றும், இவ் இரு குணங்களையுடைய காற்றிலிருந்து, ஒலி, பரிசம், உருவமாகிய மூன்று குணங்களையுடைய ஒளியும், இவ்வொளியிலிருந்து ஒலி, பரிசம், உருவம், சுவை முதலான குணங்களையுடைய நீரும், இந்நீரிலிருந்து ஒலி, பரிசம், உருவம், சுவை, மணமாகிய ஐந்து குணங்களையுமுடைய நிலமும் தோன்றாது என்றும், சூக்கும பூதங்களாகிய (வித்திலிருந்து மரம்போல) சத்தத்தினின்றும் வான்வெளியும், பரிசத்தினின்றும் காற்றும், ஒளி (உருவம்) யிலிருந்து தீயும், சுவையிலிருந்து நீரும், மணத்திலிருந்து நிலமும் தோன்றும் எனக்கூறும். நம் பிண்டத்திலுள்ள பஞ்சபூதங்களின் விரிவே அண்டத்திலுள்ளவையாம், எனக்கண்டு, தெளிக. இப்பஞ்சபூதங்களுக்கு முறையே சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், விட்டுணு, பிரமா எனும் ஐவரும் அதி தேவதைகளாம். நாம் காணும் பிரபஞ்சம் யாவும் மிக நுண்ணிய நிலை, நுண்ணியநிலை, புலப்படும்நிலை என மூன்று நிலைகளில், இவ்வாறே விரிந்தனவாம். அதாவது அருவ நிலையிலுள்ள சக்திகள் அசைவுநிலை (சலன)யை அடைந்து, அந்தந்தப் பூதங்களுக்கேற்ப அணுத்திரளையாகவும், பெரிய அண்ட உருவப்பொருள்களாகவும் உருவெடுக்கின்றன. இத்தத்துவங்கள் யாவும் ஒடுங்கும் காலத்தும், தோன்றிய

முறையிலேயே ஒடுக்கப்படுவனவாம். உயிர்த்தத்துவங்கள் இருபத்திநான்கும் சீகண்டருத்திரரால் ஒடுக்கப்படும். அராகம் முதலிய வித்தியாதத்துவங்கள் ஆறும். (உயிர் நீங்கலாக) அநந்த தேவரால் ஒடுக்கப்படும். உயிர்கள் தத்துவங்களிலும், தத்துவங்கள் அவற்றை அதிட்டித்து நின்ற கருத்தாக்களிலும் ஒடுங்குவனவாம். சுத்தவித்தை மூன்றும் இலயசிவனால் ஒடுக்கப்படும். (உயிர்களுக்கு அருள் புரிய விரும்பிய ஞானவடிவினனான சிவம், ஞான சக்தியைப் பொருந்தியபொழுது, அருவத்திருமேனியுண்டாதலால் அத்திருமேனி சிவம் என்றும் இலயசிவம் என்றும் கூறப்படும்) சக்தி, சிவம் இரண்டும் சுத்தசிவனால் ஒடுங்கும். (சி.சி.செய் 143 - 163, சிவப்பிரகாசம் செய் 14, 26, 27) இறுதியில், இவையாவும் அருவமாகிய காரணமாயையாக நிற்கும். சுத்த சிவம் இவற்றிற் கெல்லாம் அப்பாற்பட்டவராய், வேறாகி நிற்பர். இப்பிரபஞ்சம் யாவும் ஆக்க அறிவுடைய ஒருவனின் காரியமாய் இருத்தலாலும், உயிர், உடல் கருவிகளைப் பெற்றாலன்றி எதனையும் அறிய மாட்டாதிருத்தலாலும், மூலப்பொருளாகிய மாயை அறிவில்லாத சடப்பொருளாயிருத்தலால், இவ்விரண்டுமல்லாத ஒருவனே இப்பிரபஞ்சத்தை விரித்து, நிலைநிறுத்தி, ஒடுக்குகின்றனன் என்பது உய்த்துணரத்தக்கதாம். உயிரின் விடுதலைக்காகவே பிரபஞ்சம் படைக்கப்பட்டு, ஒடுக்கப்படு கின்றதென்பதனால் சட உலகமும், உயிர்களும் ஒரேகாலத்திற் கூட்டப்பெற்றுத் தோன்றுகின்றன என்பதும் பெறப்படும். "அண்டபிண்டமவை சமமாதலால்" (கோயிற்புராணம் பதஞ்சலி சுருக்கம் 70), இத்தத்துவங் களுக்கப்பாற்பட்ட இறைவனைக் கண்டுகொள்க.



**விடிவாம் அளவும் விளக் களைய மாயை**
**வடிவாதி கன்மத்து வந்து (திருவருட்பயன்)**

இவ்வாறு சைவசித்தாந்தம் காட்டும் பிரபஞ்ச விரிவு ஊனக்கண்களுக்கு எட்டாததாம். இவற்றையெல்லாம் ஞானக் கண்களாலே கண்டுகளிக்க முடியும். யோக, ஞான நிலைகளில் ஒருமுகப்படுத்தப்பட்ட மனத்தின் இயக்கமற்ற நிலையிலேயே யாவும் தெளிவாகும். எனவே அறிவியல் வரலாற்றில், விஞ்ஞான ஆய்வுகள் எட்டமுடியாத இடங்களையெல்லாம் சைவசித்தாந்தம் தெளிவாக்கியுள்ளது என்பது தெளிவாம்.

``The unique position of Saiva Siddhanta in the history of thought is the fact that it expounds by Careful reflection the systematic account of the process of Cosmic evolution which attempts to Comprehemd the Universe as a Sum total of 36 categories. This exposition is no more metophysical speculation but is a purely logical account on Scientific Principles.

-Theos Bernad



# உயிரியல் ஆய்வில் விஞ்ஞானமும், சைவசித்தாந்தமும்

இன்றைக்கு ஏறக்குறைய இரண்டரை நூற்றாண்டுகளாக விஞ்ஞானிகள் உயிரியல் ஆய்வில், உயிரியல் (Chemistry), உயிர் வேதியியல் (Biochemistry), உயிர்வேதிய மரபியல் (Biochemical Genetics), கூட்டணு உயிரியல் (Molecular Biology), முதலான அறிவியல் ஆய்விகளினூடாகத் தத்தம் முடிபுகளை வெளியிட்டு வந்தனர். அதனால் உயிரைப்பற்றிய ஆய்வில் இன்று விஞ்ஞானம் பல கிளைகளாகப் பிரிந்து வளர்ந்திருப்பது, அறிவியலின் வளர்ச்சி நிலைகளைப் படிப்படியாக எடுத்துக் காட்டுகின்றன[1]. இத்தகைய



அறிவியல் வளர்ச்சி நிலைகளினூடாக, உயிர்பற்றி விஞ்ஞானிகள் மேற்கொண்ட ஆய்வுகளின் முடிவுகள்பற்றிக் க.கணபதிப்பிள்ளை தமது நூலில் விபரித்துள்ளனர்[2].

மேலும், இதுவரை நடைபெற்றுவந்த ஆய்வுகளின்படி உயிர் பற்றிய கருத்துக்கள், மற்று உயிர்கள் இப்பூமியில் எப்பொழுது? எங்கே முதலிற் தோன்றின? என்பன போன்ற கேள்விகளுக்கு, வெவ்வேறு விதமான கருத்துக்கள் தெரிவிக்கப் பட்டுள்ளன. உயிரியல் வரலாற்றைத் தொகுத்துக் கூறுகின்ற ச.சதாசிவம் "இன்றைக்குக் கிட்டத்தட்ட 250 மில்லியன் வகைப்பட்ட உயிரினங்கள் உலகில் வாழ்வதாகவும் இரண்டு மில்லியன் வகைப் பட்ட உயிரினங்கள் வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுகொடுக்க முடியாமல் அறவே அற்றுப் போய்விட்டதாகக் கணக்கிடப்பட்டு உள்ளது" என்றும் (மு.கு.பக்.3), "அங்கவேதியங்கள் (Organic Compounds) நிறைந்து கிடக்கும் நிலையில் சரியான விகிதா சாரத்தில் சரியாக நிலைப்படுத்தப்பட்டால்தான் ஓர் உயிரினம் தோன்ற முடியும். ஆனால் எப்படி இந்தநிலை உருவாகி முதல் உயிரினம் தோன்றிற்று என்பது இன்றைக்கும் விந்தையாக உள்ளது" (மு.கு.பக்.2) என்றும், "இப்படிப்பட்ட ஒரு வேடிக்கை யான நிலைமைக்கு இடங்கொடாமல் இயற்கையின் நியதியால் பால் அணுக்கள் தோன்றுகின்றபொழுது, வேறு விதமான முறையில் உயிரணுக்கள் பிரிந்து பால் உயிரணுக்களிற் பாதி அளவு இனக்கீற்று (Chromosome) இருக்கும்படி பார்த்துக்கொள்கிறது" (மு.கு.பக்.12) என்றும், "இந்த இரண்டு பால் அணுக்களிலும்தான் அது தாவரமாக இருந்தாலும் சரி, அல்லது விலங்காக இருந்தாலும்

சரி, அந்த உயிரினத்தின் வளர்ச்சியை நிர்ணயிக்கின்ற மரபுக் கூறுகள் இடம்பெற்றிருக்கின்றன. இதுதான் உயிரினம் தோன்றிய நாள்தொட்டு, தினம் தினம் நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற ஒரு மாபெரும் அதிசயமாகத் திகழ்கின்றது" (மு.கு.பக்.38) இக்கூற்றுக்களி லிருந்து நாம் புரிந்துகொள்வதென்னவெனில் இதுவரை விஞ்ஞான ஆய்வுகள் கண்டுபிடித்த முடிபுகளுக்குப் பின்னாடி, நியதி என்ற தத்துவமே இவற்றிற்கெல்லாம் பின்நாதமாக ஒலித்துக் கொண்டிருப்பதென்பதாம். 1953ம் ஆண்டில் ஜேம்ஸ் வட்சன் (James Watson), பிரான்சிஸ் கிரிக் (Francis Crick) இருவரும் இணைந்து நடாத்திய ஆய்வின்போது, மரபியற் கூறு கூட்டணி அமிலமே (D.N.A.) தாவரங்கள், விலங்குகள் என்பவற்றின் உடல் வளர்ச்சி, மற்றும் பிற பண்புகளை நிர்ணயிக்கின்ற காரணி எனக் காட்டினர். ஆனால் இன்று ஜேல் பல்கலைக் கழகத்தில் 700 விஞ்ஞானிகள் கூடிய மகாநாட்டில் ஜேம்ஸ் வட்சன் மனித உடல் வளர்ச்சியில், நீதி நெறி நிர்ணயங்கள் என்பன விஞ்ஞான ஆய்வுகளுக்கு அப்பாற்பட்டதென்று, கூறுவதையும் நாம் கருத்திற்கொள்ளல் அவசியமாம்[3].

உயிர்கள் எண்ணிலடங்கா என்னும் சைவ சித்தாந்தம், இவ்வுயிர்கள் முட்டை, வியர்வை, வித்து வேர்களைப் பிளந்து தோன்றுவன, கருப்பையிற் தோன்றுவன எனும் நால்வகையாகத் தோன்றி, தாவரங்கள், ஊர்வன, நீர் வாழ்வன, பறவை, மிருகம், மானுடர், தேவர் என எழுவகைப் பிறப்பில், எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்களிற் பிறக்கின்றன என்று ஒரு கணக்குப்பட்டியலையும் தருகின்றது. அதனாலன்றோ



**''எழுகடல் மணலை அளவிடின் அதிகம்**
**எனதிடர் பிறவி அவதாரம்"**

என்பர் அருணகிரிநாதர். விஞ்ஞான ஆய்வுகளின்படி தாவரங்களுக்கும், நுண்ணுயிர்களுக்குமுரிய இயற்கை நியதிகள், விலங்குகளிலொன்றாகக் கருதப்படுகின்ற மனிதனுடைய இயற்கை நியதிகளுடன் ஒற்றுமையுடையனவாம் என்பது உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. ஒரே உயிரணுவைக்கொண்ட நுண்ணுயிர்கள்முதல், இலட்சக்கணக்கான உயிரணுக்களைக் கொண்ட மனிதன்வரை இராசாயனச் சேர்க்கைகள் ஒரே மாதிரியானவையாம். எனவே தோட்டத்தில் வளர்கின்ற பயிர்களிலும், அழுக்குகளில் வாழ்கின்ற ஈயிலும் நடாத்தப்பட்ட பரிசோதனைகளின் விதிமுறைகள், மனிதனுக்குப் பொருந்துவது அதிசயத்தக்கதல்ல.

**புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப்**
**பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய் கணங்களாய்**
..............................................................
..............................................................
**எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்**
**(சிவபுராணம் வரி 26-31)**

என மாணிக்காவசகர் உரைக்கையில், இவ்வெல்லாப் பிறவிகளிலும் பிறந்துழன்றனர் என்பதனால், இவற்றிடையே வேறுபாடு காட்டினாரல்லர். இதனாலன்றோ சைவ சித்தாந்தம் உயிர்கள் அச்சுமாறிப் பிறக்கும் என்று கூறி, உயிர்களுக்கு

வேறுபாடு காட்டினாரல்லர். உயிர்கள் தாம்செய்த வினைப் பயனுக்கேற்ப உருவும், அச்சும் மாறிப் பிறக்கும் என்பதற்கு அகலியை கல்லானதும், விஷ்ணு மீன் முதலிய பல பிறவிகளிற் பிறந்ததும், சிலந்தி அரசாளும் கோச்செங்கணான் என்ற அரசனாகப் பிறந்ததும், எலி மகாவலிச் சக்கரவர்த்தியாகப் பிறந்ததும் (சி.சித்தியார் செய். 134), முள்ளி மாமுனீச்சுரர் சிவன்கோவிற் கோமுகியினருகில் முள்ளிச் செடியாய் முளைத்துக் கிடந்ததும் சான்றுகளாம்[4]. உயிர்களுக்கு நிகழும் இறப்பும், பிறப்பும் அவற்றின் வினைக்கீடாக நிகழும் நிகழ்ச்சிகளே. இதனையே திருநாவுக்கரசு நாயனார்,

**''உயிர் வைத்தார் உயிர்செல்லுங் கதிகள் வைத்தார்''**

என்றும்,

**''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா**
**உன்னடி யென் மனத்தே''**

என்றும் குறிப்பிடலாயினர். உயிரானது வினைக்கீடாக உடலை மாற்றிக்கொள்வதனால், அதன் உருவிலும், அறிவிலும் செயலிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன.

இனி உயிர்கள் இப்பூமியில் எங்கே? எப்பொழுது முதற்தோன்றிற்று என்பதற்கு விஞ்ஞானிகள் தரும் கருத்துக்கள் ஆராயத்தக்கதாம்.

ரஷிய விஞ்ஞானியான லியோ ஷ்னீடர் தமது ''உயிரோட்டம்'' எனும் நூலில் ''உலகத்தில் உயிரினங்கள் நிறைந்துள்ளன. கடலின் ஆழத்திலும், மலையின் உச்சியிலும் உண்டு... ஒரு பென்சிலின் நுனியில் கோடிக்கணக்கில் தங்கக்கூடிய மிகச்சிறிய தாவரங்களும் உண்டு. உலகத்தில் எத்தனை உயிரினங்கள் உள்ளன? யாருக்கும் தெரியாது. அவற்றின் எண்ணிக்கையைக் குறிக்க எண்களே இல்லை" என்றும், "முன்பு இவ்வாறு இல்லை. ஒரு இலட்சம் கோடி ஆண்டுகளுக்குமுன் உலகத்தில் உயிரினமே இல்லை. பின்பு, முதல் உயிரினங்கள் தோன்றின. அவை கடலில் வாழ்ந்தன என்பதைத்தவிர அவற்றைப்பற்றிய மற்ற விபரங்கள் நமக்குத் தெரியாது" என்றும் கூறுவர்[5].இன்னோர் ரஷியரான இரினா யருகாவ்லெவா "57 முதல் 320 கோடி வருடங்களுக்கு முன்பு உயிரினங்களின் வரலாற்றில் ஆதியுகம் மிகவும் நீண்டகாலம்; மிகவும் மர்மமான காலம். அந்தக் காலத்தில் பூமி கொடூரமானதாக மற்றவர்களை பயமுறுத்தி விரட்டக்கூடியதாக இருந்தது. சக்திவாய்ந்த எரிமலைகள் குமுறிக்கொண்டிருந்தன. பூமியிலிருக்கும் பிளவுகளின் வழியாக அக்கினிக் குழம்பு மேலேவந்து, அந்த முடிவில்லாத பாலைவனத்தில் பரவிக்கொண்டிருந்தது. சமுத்திரத்தின் சூடான, உப்பில்லாத தண்ணீரில் உயிர் முன்பே தோன்றிவிட்டது. சமுத்திரத்தின் மேற்பரப்பில் பிசுபிசுப்பான, ஊடுருவிப் பார்க்கக்கூடிய சிறு பொட்டுகள் திட்டுத் திட்டாக மிதந்துகொண்டிருந்தன. அவற்றின் எண்ணிக்கை ஏராளம். இவை மிகவும் சிறியவை. இவற்றைப் பார்க்கப் பூதக்கண்ணாடி வேண்டும். இலைகள் இவற்றைக் கரையில் கொண்டுபோய்ச் சேர்த்தன. நீரோட்டங்கள் இவற்றை சமுத்திரத்தின் அமைதியான அடிப்பகுதிக்குள் தள்ளின. இவை ஆயிரம் கோடிக்கணக்கில்

அழிந்தன. ஆனால் உயிரின் தோற்றம் அப்படியே நின்றுவிட வில்லை. ஆயிரம் கோடி வருடங்கள் கழிந்தன. இந்த நுண்ணுயிர்கள் மர்மமான வகையில் மாற்றமடைந்தன... பூமியில் பிற்காலத்தில் வசித்த (இப்பொழுதும் வசித்துக் கொண்டிருக்கும்) எல்லாப் பிராணிகளுமே இவற்றிலிருந்துதான் தோன்றின என்பர்[6].

இவைதவிரப் பொதுவாக இரசாயன மூலக்கூறுகளின் சேர்க்கைகளினால் உயிர்தோற்றமும், உயிர்ப் பெருக்கமும் தோன்றின என்ற கருத்தினின்றும் வேறுபட்ட கருத்துக்களையும் சில விஞ்ஞானிகள் தெரிவித்துள்ளனர். இவர்களின் ஆய்வுகளின் படி பூமியின் தோற்றகாலத்தில் வளிமண்டலத்தில், முதன் முதலாக உயிரிகள் தோன்றியபொழுது பிராணவாயு இருக்கவில்லை. சூரியனின் புற ஊதாக் கதிர்களைப் பூமிக்கு வராமற் தடுக்கின்ற ஓசோன் படலமும் இல்லை. இத்தகைய கடினமான சூழலில் பிராணவாயும், தண்ணீரும் இல்லாமலேயே பல இரசாயனச் சேர்க்கைகள் நடைபெற்றிருக்க வேண்டும். உயிர்களுக்கு ஆபத்தை ஏற்படுத்தக்கூடிய தீவிரமான ஆற்றல் படைத்த மூலங்களிலிருந்தே, உயிரிகள் உண்டாகின என்பது விசித்திரமான உண்மை. மற்று அந்த உயிரிகள் இயற்கையினால் கூட்டிவைக்கப்பட்ட பொருள்களின் செயல்களினால் உண்டாயின என்பதனால் அவற்றுக்கு நீரோ, அல்லது பிராணவாயுவோ தேவைப்படவில்லை. அவை புற ஊதாக் கதிர்களின் தாக்குதல்களையும் சமாளித்து நிற்கக் கூடியனவாம் என்பர்[7].



இனி, பூமியிற் கடலிலேதான் முதலில் உயிரினங்கள் தோன்றின என்று பிரபல அமெரிக்க விஞ்ஞானி கார்ல்சகன் (Carl Sagan) முதலானோர் கருதுவர். இதற்கு அவர்கள் இரு காரணங்களைக் காட்டுவர்.

1. எல்லா உயிர்களின், உயிரணுக்களின் இழையங்களில் நீர் நிறைய உண்டு. அதனால் நீர் உயிரிகளுக்கு அவசியமான மூலகம் ஆகும்.

2. இவ்வுயிரிகளின், உயிரணு இழையங்களிலுள்ள நீர் கூட்டமைப்பிலும், இரசாயனப் பண்பிலும், கடல் நீரைப் பெரிதும் ஒத்திருக்கின்றது. மற்று, கடல்நீர் உயிர்களுக்குப் புற ஊதாக் கதிர்களிலிருந்து பாதுகாப்பை அளித்திருக்கும்.

ஆனால் ரஷிய விஞ்ஞானியான லோட்சினா லோசின்கி (Lodzina Lozinsky) உயிர்கள் பூமியிற் தரையிலே தோன்றின என்பர். இரசாயனமூலங்கள் தொடக்ககால உயிரிகளாக உருவெடுத்தபின், பிராணவாயு இல்லாத சூழ்நிலையில் இவற்றின் பரிணாம வளர்ச்சிக்குரிய தேவையான கனிம வினையூக்கிகள் குகைகளிலும், பாறைகளிலும் நிறைய இருந்தன. மேலும் பிராணவாயு தேவைப்படாத இவ்வுயிரிகள், ஈரலிப்பு, வெப்பம், கதிர்வீச்சு என்பனவற்றின் ஏற்ற, இறக்கங்களுக்கும் தாக்குப்பிடிக்கக் கூடியனவாக இருந்தன. இத்தகைய வெவ்வேறான சூழ்நிலைகளைப் பழகிக்கொள்ளக் கூடிய நிலை நிலத்தில் மட்டும்தான் நடைபெற்றிருக்க முடியும். எடுத்துக்காட்டாகச் சில உயிரிகள்

நீரையிழந்து சுக்காகக் காய்ந்தபின்னரும் (anabiosis) தண்ணீர் பட்டாற் திரும்ப உயிர்பெற்றுவிடுகின்றன. வேறுசில நீண்ட காலங்களுக்கு உணவு உட்கொள்ளாமற் தூங்கிவிட்டுத் (Hypnobiosis) திரும்பச் செயற்படத் தொடங்குகின்றன. இன்று தரையிற் காணப்படும் கடைநிலை உயிரிகளின் சிறப்பியல்புகளாக இவை காணப்படுகின்றன. வளிமண்டலத்திற் பிராணவாயு நிறைந்த சூழ்நிலை உருவாகிக் கொண்டிருந்த சமயத்தின்போது நிகழ்ந்த பரிணாம வளர்ச்சியில், மிக அற்பமான உயிர்களுக்கு மட்டுமே உலர்ந்தபின் மீண்டும் உயிர் பெறும் திறமை எஞ்சியுள்ளது. விலங்குகளுக்கு முன்பே தோன்றிய தாவரங்களுக்கே இத்திறமை முழுமையாகத் தங்கியிருக்கின்றது. அதனாற் தாவரங்களே வளிமண்டலத்திற் பிராணவாயுவின் இருப்பை அதிகரிக்கச் செய்து விலங்கினங்கள் தோன்ற வலிகோலின என்பர்[8]. இந்திய விஞ்ஞானியான ஜே.சி.போஸ் அவர்களே செடிகளின் உயிரியக்கத்தைப்பற்றியும், அவற்றின் உணர்வுகள் பற்றியும் முதலிற் தெரிவித்தவர் என்பதனையும் இங்கு நினைவுகூரல் ஏற்றதாம்.

பேராசிரியர் சிறில் பொன்னம்பெருமாள் (Prof. Cyril Ponnamperuma) கடந்த ஐம்பது ஆண்டுகளுக்குள்ளேயே உயிரைப் பற்றிய ஆய்வுகளைத் தத்துவ ஆசிரியர்களிடமிருந்து, விஞ்ஞானிகள் தமது கைகளுக்கு மாற்றினர் என்றும், அதனால் ஏற்பட்ட பெருந்திருப்பங்கள் என்ன என்றும் ஆராய்வர். இவர் பிரபஞ்சபரிணாமக் கோட்பாட்டில், இரசாயனப் பரிணாமத்தி லிருந்து, டார்வினினின் பரிணாமக் கோட்பாட்டையும் (The extension of Darwinan Evolution back to Chemical Evolution is the concept of Cosmic Evolution) அடிப்படையாகக்கொண்டே இன்றைய விஞ்ஞானம் உயிரியலைப்பற்றிய ஆய்வுகளை அணுகுகின்றது என்பர். மேலும் இவர் பூமி 4.6 கோடானுகோடி (4.6 billion) காலத்திற்கு முன் உருவாகியதென்றும், பழைய பூமியின் இயல்புகளை ஆய்வுசெய்ய 3.8 கோடானுகோடிக் காலப் பழைய பாறைகள் கிடைக்கப் பெற்றிருப்பினும், 3.5 கோடானுகோடிப் பழமையுடைய பாறைகளிலேதான் பூமியில் உயிர்த்தோற்றங் களை ஆராயமுடிகின்றது என்ற விஞ்ஞானிகள் கருத்தினை ஆதாரமாகக்கொண்டு, பூமி தை மாதம் முதலாந் திகதியன்று நடுநிசியில் உருவாகியிருந்தால், அதே வருடம் மார்கழி மாதம் 31ந் திகதி 11-30 க்கு மனிதன் தோன்றியிருப்பான் என்ற தம் கருத்தினைத் தெரிவிக்கத் தயங்கவில்லை. மேலும் ஆழ்கடலுக்குக் கீழுள்ள தீக்குழம்புகளில் 265 சென்ரிகிறேட் (centigrade) வெப்பநிலையில் நுண்ணுயிர்கள் வாழ்ந்து வருவதையும் விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருப்பதனாற், பூமி தோன்றியவுடனே உயிர்த்தோற்றமும் ஏற்பட்டிருக்கலாம் என்ற ஊகத்தையும் ஆணித்தரமாக வற்புறுத்துவர்[9].



சிறில் பொன்னம்பெருமாவின் கருத்துச் சைவசித்தாந்தக் கோட்பாடுகளுக்கு அணித்தானதாகும். சைவசித்தாந்தம் உயிரை அணுவாக்கிவைத்திருக்கின்ற ஆணவமலத்தைப் போக்குவதற் காகவும், வினைப்பயன்களை அனுபவவாயிலாகத் தீர்ப்பதற் காகவுமே இறைவன் உயிர்களை உடல், இந்திரியங்கள், உலகங்கள், போகங்கள் என்பவற்றுடன் இணைக்கின்றனன் என்கிறது. இதனைச் சிவஞானசித்தியார்,

"தனுகரண புவன போகந் தற்பரம் பந்தம் வீடென்
றனுவினோ டெல்லா மாகி யடைந்திருந் தத்துவங்கள்"
(சி.சித்தியார் செய். 168)

என்றும்

எல்லாமாய்த் தத்துவங்க ளியைந்தென் னனுவுக்
கென்னின்
.............................................................................
.............................................................................
பொல்லாத வாண வத்தைப் போக்கவும் புகுத்த தன்றே
(சி.சி.செய். 169)

என்றும் கூறும்.

இதனால் பிரபஞ்சமனைத்தும் 36 தத்துவ வடிவமே என்றும் (சி.சி.செய். 161),

இதனை நிறைவேற்றி வைப்பவன்

"அலகிலா வுயிர்கள் கன்மத் தானையி னமர்ந்து
செல்லத் தலைவனாய்....... நின்றனன்"
(சி.சி.செய்.91)

இறைவனே என்றும் கூறுகின்றது.

பிரபஞ்சவெடிப்பில் இறைவன் உயிர்களைத் தத்துவங்களுடன் கூட்டும் முறையில், இறுதிநிலையிற் பூதாதி அகங்காரத்திற் தோன்றிய தன்மாத்திரைகளாகிய சத்தம், உணர்வு, உருவம், சுவை, மணம் என்பவற்றிலிருந்து (பிண்டத்திலுள்ள ஐம்பூதங்களிலிருந்து அண்டத்துப் பூதங்கள்) முறையே ஆகாசம்,



காற்று, தீ, நீர், நிலம் என்பன தோன்றும் என்பதனால், இவையெல்லாம் ஒரே நேரத்தில் நடக்கின்ற நிகழ்ச்சிகளேயாம். அதுவும் இறுதியாகத் தோன்றியது பூமியேயாம் என்பதும், ஒடுக்கத்திற் பூமியே முதலில் ஒடுக்கப்பட்டு, விரிந்தமுறைப்படி மற்றவையும் ஒடுக்கப்படும். (சிவப்பிரகாசம் செய். 26-27, சிவஞான சித்தியார் செய். 143-155, உண்மை விளக்கம் செய். 5-21) மாணிக்கவாசகருக்கு ஞானதீக்கைக்காக வந்திருந்த 999 சிவனடியார்களும், திரும்புகையிற் தீக்குண்டத்தினூடாகவே சிவபாதமடைந்தனர் என்பதனாலும், உயிரின் ஈடேற்றத்திற்குப் பஞ்சபூதங்கள் உதவும் தத்துவங்களாகவே கருதப்படத் தக்கனவாம். உயிர்களுக்கே பிரபஞ்சமாகையால், இரண்டும் ஒன்றுடனொன்று தொடர்புடையனவாய்த் தோன்றி, ஒடுங்குவனவாம்.

மற்று, பிரித்தானிய கார்டிப் (Cardift) பல்கலைக் கழகக் கணித விண்மீனியற் பேராசிரியர் எஸ்.சி. விக்ரம சிங்க, நாம் வாழும் பூமியில் மட்டும்தான் உயிரினங்கள் என்ற கூற்று ஆதாரமற்றது. அதாவது நாம் வாழும் பூமியிலும், நமது சூரியமண்டலப் பிறகோள்களில் மட்டுமே உயிர்கள் வாழ்கின்றன என்பது தவறு. ஏனைய விண்மீன் மண்டலங்களிலும் உயிர் அணுக்கள் இருக்கின்றன என்பதனோடு, மனிதனுக்குச் சமமான அல்லது மனிதனிலும் சிறிது வேறுபட்ட புத்திஜீவிகள் ஏனைய கோள்களிலும், பிற சூரிய மண்டலக் கோள்களிலும் இருக்கலாம் என்பர்[10]. அண்மையில் (27-9-1989) ரஷியாவில் வெவோனஸ் நகரில் 12, 13 அடி உயரமுடைய முக்கண்ணர்கள் சிப்ரா கிரகத்திலிருந்து வந்திறங்கியதாகத் தெரிவித்த தகவல்கள்

உண்மையாயின் விக்ரமசிங்க அவர்களின் கருத்துக்கள் சான்றுகளுடன் உறுதிப்படுத்தப்பட்டதாகலாம்.

சைவசித்தாந்தம் பிரபஞ்ச விரிப்பின்போது ஏழுலகங்களை வைத்தனன் என்பதோடு, நமது பூமியிலுள்ள உயிர்கள் வினைப் பயன்களை அனுபவித்துத்தீர்க்க சுவர்க்க, நரகங்களுக்குப் பூதவுடம்புகள் எடுத்துச்செல்லும் என்றும், அவ்வாறு இன்பதுன்பங்களை அநுபவித்துவிட்டு மீளவும் நுண்ணுடலுடன் பூமியை அடைந்து பிறக்குமென்றும், கூறும். இவ்வாறு உயிரின் போக்குவரத்தும், பிறப்புக்களும் இடைவிடாது நிகழ்தலுமுண்டு, இடைவிட்டு நிகழ்தலுமுண்டு. உயிர் தூலவுடம்பாகிய முன்னைய உடலைவிட்டு, மற்றோருடம்போடு சுவர்க்க, நரகங்களிலிருக்கும் பொழுது முன்னைய நிகழ்ச்சிகளெல்லாம் மறந்து அறிவு வேறுபட்டிருக்கும். (சி.சித்தியார் செய். 126 - 128)

இன்று, ஒருயிர் பல பிறப்புக்களை எடுக்கின்றதென்ற மறுபிறப்புக் கோட்பாடு, ஆய்வுகள்மூலம் உண்மையென நிறுவப் பட்டுள்ளது. உலகம் முழுவதிலும் தமது முந்தைய பிறப்புக்கள் பற்றி நன்றாக ஞாபகம்வைத்துச் சொல்லிய தகவல்களை வைத்து ஆராய்ந்துவிடத்து, அவையாவும் உண்மையான நிகழ்ச்சிகள் என்றுணர்த்தப்பட்டது. அண்மையில் பல்கேரியாவில் இருமாதக் குழந்தையான சோபியா பெத்கோவ் (Sofia Petkov of Pleven, .Bulgaria) லத்தீன், பழைய அரேபிய மொழி, ஸ்பானியன், பிரெஞ்சு, பல்கேரியன், லித்துவேனியன், ரஷியன், ஆங்கிலம் முதலான எட்டுமொழிகளில் சரளமாகப் பேசியபொழுது, கிழக்கு ஐரோப்பிய விஞ்ஞானிகள் பரபரப்படைந்தனர். இறுதியில் மொஸ்கோ மறுபிறப்புச் சங்கத் தலைவர் (The head of Moscow's



Reincarnation Society). அக்குழந்தை தன் முற்பிறப்பு ஞானங்களுடன் (அறிவுவாசனையுடன்) பிறந்துள்ளது என்பதனை உறுதிப்படுத்தினார்[11]. மற்று, ஐக்கிய அமெரிக்காவில் கெந்துகியியெனும் இடத்தில் 1877ம் ஆண்டு பிறந்தவரும், உலகப்புகழ்வாய்ந்தவருமான எட்கர் கேயிஸ் (Edgar Cayce of Kentucky, U.S.A.) தமது துயிற்தியானத்திற் பலருடைய முற்பிறப்பு வாழ்க்கை நிகழ்ச்சிகளை 10,000 - 50,000 வருடங்களுக்கு முற்பட்ட அத்திலாந்திக் கண்டத்துடன் தொடர்புடையதெனக் காட்டியுள்ளார். இவர் இவ்வாறு தெரிவித்த பலருடைய வாழ்க்கை விபரங்களின்படி, ஓருயிரின் வினைப்பயனே, அது எடுக்கும் உடலமைப்பு, உளச்சார்புகள், ஆன்மீக வளர்ச்சிகள், மற்றும் திறமைகள் போன்ற யாவற்றையும் நிர்ணயிக்கின்ற காரணி என்பது அறிவுறுத்தப்பட்டது. எட்கர் கேயிஸ் கூறிய வாழ்க்கை விபரங்களிலொன்றை ஜினா செர்மினர (Dr. Gina. Cerminara) தனது "பல மாளிகைகள்" (Many Mansions) எனும் நூலில் எடுத்துரைப்பர். அதன்படி கி.மு. 1000ம் ஆண்டளவிற் காட்டுவாசியாக இருந்த ஒருவர், தமதினத்தவர் பிடித்துவந்த எதிராளிகளின் கண்களை சூடான கம்பியினாற் சுட்டுக் குருடாக்கும் தொழிலை மேற்கொண்டிருந்தார் என்றும், அதனாலே அவர் இப்பிறவியிற் குருடராகப் பிறந்தார் என்பதும் தெரிவிக்கப்பட்டது[12]. இவைதவிர, இன்னோர் உண்மை நிகழ்ச்சியின்படி மைக்கல் ஜேவிஸ் கேயன் பங்குனி மாதம் 24 ம் திகதி 1926ம் ஆண்டு புற்றுநோயால் இறந்தபொழுது, அவர் விருப்பப்படி பிளாஸ்டிக் பையில் போடப்பட்டு, அத்திலாந்திக் சமுத்திரத்தில் பேர்மூடா எனும் இடத்திற்கு 75 மைல் தூரத்திலுள்ள கடலுள் விடப்பட்டார். ஆனால் அவரைத் திரும்பவும் உயிருடன் மாசி மாதம் 26ந் திகதி

1989ம் ஆண்டு பனாமா மீன்பிடிக் கப்பலில் வேலை செய்தோர் மீட்டெடுத்தனர். இவரை வைத்தியர்கள் ஆராய்ந்து, விஞ்ஞான அடிப்படையிலான அறிக்கைகள் விடுவார்கள் எனத்தெரிகின்றது. எனினும் கேயனைக் கடலில் மீட்டெடுத்த மாலுமியின் தகவல்களின்படி, அவர் கேயனை மீட்டெடுத்தபொழுது, அவர் பயத்துடன் காணப்பட்டார் என்றும், பின் தான் 1926ம் ஆண்டு இறந்ததுபற்றியும், தனது பழைய வாழ்க்கை விபரங்கள்பற்றியும் கூறினார் என்றும் தெரிகின்றது. பின் வைத்தியசாலையின் விசாரணையின்போது அடிக்கடி "வெள்ளைநிற தூதர்கள்" பற்றிக் கூறினார் என்றும் சொல்லப்படுகின்றது [13].

இவைதவிர, விஞ்ஞான அடிப்படையிலான ஆய்வுகளின் மூலம் நரகம்பற்றிய குறிப்புகளும் எமக்குக் கிடைத்துள்ளன. சைபீரிய நாட்டைச் சார்ந்த சில அகழ்வாய்வாளரான விக்டர் அஸாக்கோவும், அவரது குழுவினரும் கருவிகள்மூலம் பூமிக்கடியில் ஒன்பது மைல் நீளமான துவாரமொன்றையேற் படுத்தியபொழுது, ஒன்பது மைல் தூரத்திற்குப்பின் பூமி 2000 டிகிரி பரனைட் (Degree Fahrenheit) வெப்பமுடைய அகழியாக இருந்ததென்றும், நுண்ணலைத் தொலைபேசியை வைத்து அவதானித்தபொழுது, சில பயங்கர ஒலிகளைக் கேட்க முடிந்ததென்றும் தெரிவிக்கப்பட்டது. இன்னும் மிக நெருக்கமான அவதானிப்பின்படி கோடிக்கணக்கான மனித இனங்களின் பயங்கர ஒலிகளே இவையென்றும் உணரப்பட்டதாம். அதனாற் பயம் காரணமாகவும், வெப்பநிலை அதிகரிப்புக் காரணமாகவும் விஞ்ஞானிகள் தம் ஆய்வுகளை மேற்கொள்ள முடியாமற் போய்விட்டது என்றும் தெரிகின்றது [14].



மேலும் சூரிய சக்தியினால் இயங்கும் நுண்கருவிகள் மூலம் எடுக்கப்படுகின்ற படங்கள், சூரியசந்திரர்களன்றி, இறையொளி யினாற் பிரகாசமாகக் காட்சியளிக்கின்ற மறு உலகத்தின் (சொர்க்கத்தின்) அழகிய நகரங்களையும், இன்பம் மட்டுமே துய்க்கின்ற மக்களின் வாழ்க்கை முறைகளையும் மட்டுமே உணர்த்துவனவாக உள்ளன என்பதனை விஞ்ஞானிகள் அவதானித்துள்ளார்கள் என்றும், இத்தகவல்களை விஞ்ஞானிகள் இரகசியமாகவே பேணி வருகின்றார்கள் என்றும் தெரிவிக்கின்ற பத்திரிகைக் குறிப்புகள் (மறு உலகு குறித்து, "சூரியசக்தி, மூலப் புகைப்படங்கள்" - வீரகேசரி - 17-12-1989) உண்மையானால்,

> **"நாதனா ராணை யுய்க்க நரகொடு சுவர்க்கந் துய்த்துத்**
> **தீதிலா வணுவா யோநி சேர்ந்திடுஞ் சிவ னெல்லாம்"**
> **(சி.சித்தியார் செய். 126)**

எனும் சிவஞானசித்தியார் கூற்றுக்களை விஞ்ஞான ஆய்வுகள் அரண்செய்கின்றன என்பதனை நாமும் உய்த்துணரலாம் அல்லவா?

விஞ்ஞான ஆய்வுகள் இவ்வாறு பல மனிதசக்திக்கு அப்பாற் பட்ட சில உண்மைகளைக் கண்டுபிடித்தபொழுதும், இவற்றின் உண்மைத் தத்துவங்களை முழுமையாக உணர்ந்து கொள்ளப்பட வில்லை. எனினும் விஞ்ஞானிகள் உயிர்தங்குகின்ற உடல்களைப் பற்றிய ஆய்வுகளிற், குறிப்பிடத்தக்க முன்னேற்றங்களை ஏற்படுத்தி வந்துள்ளார்கள். ஆனால் இந்த உடலுக்கு வேறாகியதும், உடலுடன் ஒரேகாலத்திற் சேர்ந்து, கூடியியங்கு கின்றதுமான "நான் யார்?" என்பதுபற்றி ஆராய்ந்தார்களில்லை.

ஓருடலுடன் உயிர் ஏன் கூட்டப்படுகின்றது? சாவின்போது உயிர் ஏன் எவ்வாறு உடலை இயக்கமற்றதாக்கிவிட்டுப் பிரிந்து செல்கின்றது? உயிரின் குறைபாடுகள் யாவை? உயிரின் விடுதலை என்பது என்ன? என்பன போன்ற பல ஐயங்களுக்கெல்லாம் விடைகளைத் தேடித் தத்துவாசிரியர்கள் பல்லாயிரமாண்டுகளாக ஆராய்ந்துவந்துள்ளார்கள், என்பதனை உலகின் பல்வேறு சமயத்தத்துவ வரலாறுகள் தெரிவித்துள்ளன. இந்திய தத்துவ ஆசிரியர்களிற் சிலர் காணப்படும் உலகத்திற் காணப்படாதவை யான உயிரும், கடவுளும் இல்லை என மறுத்தனர். இதற்குக் காரணம் இவர்கள் கையாண்ட அளவைகளின் குறைபாடேயாம். உயிர் என்றொரு பொருள் இல்லை என்று கூறிவிடுவது மிக இலகுவானதாகும். ஆனால் "உயிர் என்றொரு பொருள் உண்டு" என்போர் அதனைச் சரியான அளவைகளின்மூலம் அணுகாவிடின், அவர்களும் எத்தனை வருட காலம் கழிந்தாலும் உண்மையை உணர்ந்துகொள்ள முடியாது. சைவசித்தாந்திகள் இமயத்திற்கும், தென் கடலுக்கும் நடுக்கண்டமான கருமபூமி எனப்படும் பரத கண்டத்தில், இறைவன் உயிர்கள் உய்தற் பொருட்டு ஆகமங்களைத் தோற்றியருளிய குமரிக்கண்டத்திலே தோன்றியவர்களாவர். இவர்கள் வடநாட்டிற் தோன்றிய வேதாந்தங்களையும், குமரிக்கண்டத்து ஆகமங்களையும் உரையெனும் பிரமாணமாகக் கொண்டனர். மற்றுக் காட்சி, அனுமானம் என்னும் அளவைகளையும் துணையாகக் கொண்டு 'கடவுள்' 'உயிர்' 'உலகம்' (பாசம்) எனும் மூன்று பொருள்களும் என்றும் உள்ள பொருள்கள் என நிரூபித்துள்ளனர். எனவே பதி, பசு, பாசம் என்ற முப்பொருளும் உண்மைப் பொருள்களே என்று உலகோர்க்கு அறிவுறுத்தியவர்கள் சைவசித்தாந்திகளே ஆவர்.



அறிவியல் வரலாற்றிற் சைவ சித்தாந்திகள் எடுத்துக்காட்டிய உண்மைகளை, இன்றைய விஞ்ஞானிகள் இதுவரை தகர்த்தார் களில்லை. எனவே அறிவியல் வரலாற்றிற் சைவசித்தாந்திகளின் சித்தாந்தங்களுக்குத் தனித்துவமான இடமுண்டு. இன்றைய விஞ்ஞானம் ஐம்பூதங்களின் இரசாயனச் சேர்க்கையினால் உருவாகிய அணுத் தொகுதிகளாலான உடலையும், இரத்தத்தையும், எலும்பையும் பற்றியே தெளிவாக்கியுள்ளது. ஆனால் இவ்யாக்கைக்குள் உள்ளீடாய் நிற்கும் தத்துவமயமான மனம் முதலிய சூக்கும, காரண உடம்புகளைப் பற்றியோ அல்லது இவ்வுடலை ஒரு நியதிக்குட்பட்டு இயக்கிக் கொண்டிருக்கின்ற உயிரைப் பற்றியோ ஆராய ஆற்றலற்றதாக இருக்கின்றது. 'நானார்? என் உள்ளமார்? ஞானங்களார்?' என்று மணிவாசகர் திருவாசகத்திற் கேட்டிருந்த அல்லது "வந்தவாறு எங்கனே? போமாறு ஏதோ?" என்று திருநாவுக்கரசர் கேட்டிருந்த கேள்விகளுக்கோ பதில் அளித்திருப்பது சைவசித்தாந்தமேயாம். இப்பிரபஞ்சத்தின் செவ்விய அமைப்பிற்கும், அதன் நியதிதவறாத சீரிய இயக்கத்திற்கும் மூலமாக அமைந்த எல்லா உண்மை களையும் சைவசித்தாந்தம் அறிவியல் விளக்கங்களுடன் வகுத்திருக்கின்றது என்பதனை, அதனைத் தெளிந்தவரே உணர்வர்.

இனி, இவ்வுடலுக்கு நான் யார்? என்ற வினாவினை நாமே எழுப்பி, இந்த உடலுடன் ஒரே காலத்திற் தோன்றி, ஒன்றாகி, உடனாகி, வேறாகி இயக்குவதான உயிர் என்றொருபொருள் உளதா? என்பதனைச் சைவ சித்தாந்த நெறி நின்று ஆராய்வோமாக. அறிவு விளக்கமுடைய பொருள்கள் எண்ணி

லடங்காதவகையில் எம் கண்முன்னே இருப்பினும், ஏதொன்றி லாவது "இதுதான் உயிர்" என்று சுட்டிக் காட்டிக், கண்ணாற் கண்டுகளிக்கும் பொருள்களாக உயிர்கள் இருப்பதில்லை. அறிவு விளக்கமற்ற பொருள்களைக் காணும்பொழுது அவை இயக்கமற்ற சடப்பொருள்கள் என்பதனையும் கண்டு உணர்கின்றோம். அறிவு விளக்கமுடைய உயிர்கள் ஓரறிவு முதல் எண்ணறிவுவரை ஈறாகக் காணப்படுகின்றன. எனவே இச் சீவப் பொருட்களை எடுத்து, அவற்றின் உறுப்புக்களைத் தொட்டு, அவற்றின் உயிர் எங்கே? என்று நாம் தொட்டுத் தேடினும் அதனைக் கண்டு கொள்ளமுடியாது. எனவே அந்த உயிர் ''இங்கில்லை'' ''இங்கில்லை'' என்று நாம் நிராகரிக்கின்ற அறிவுநிலை எம்மிடத்தில் ஏற்படுகின்றது. அவ்வாறு "இல்லை", "இல்லை" என்று கழித்துவிடுகின்ற அறிவுடைப்பொருள் ஒன்று எம்முடலிற் கூடிவாழ்கின்றது. அப்பொழுது எம்முள் உயிர் என்றொரு பொருள் உளது என்பதனை நாம் உணர முடிகின்றதேயொழிய, அதையின்ன வடிவுடையதென்று கூறிக் கொள்ள முடியாதவர்களாகின்றோம். இதனை மெய்கண்டா ரியற்றிய சிவஞானபோதத்தின் மூன்றாவது சூத்திரம் குறிப்பிடுகின்ற "இலது என்றலின் ஆன்மா உளது" எனும் சூத்திரப் பொருளை ஆராய்ந்தும் மேலும் தெளிந்து கொள்ளலாம்.

மேலும், "நான் சிறியவன்" "நான் பருத்தவன்" என்று ஒருவன் கூறுகையில் "நான்" என்ற உணர்விற்கு உடல் இடமாகின்றது என்பது உண்மையே. ஆயினும் உயிருக்கு ஏற்படுகின்ற இன்ப துன்பங்கள் உடலுக்குரியனவல்ல. ஒரு உடலுக்கு எற்படுகின்ற குறைபாடுகள் அந்த உயிரின் வினைப்பயனால் ஏற்படுவனவாம்.



எனவே ஒருயிருடன் ஒன்றுபட்டுத் தோன்றுகின்ற சடப் பொருளாலான (பஞ்ச பூதச் சேர்க்கை) உடல், உயிரின், இன்ப, துன்ப நுகர்ச்சிகளுக்காவே கூட்டப்படுகின்றது. அதனால் "எனதுடல்" எனும்பொழுது "எனது" "உடல்" என்ற முற்றிலும் ஒன்றுக்கொன்று வேறுபட்ட இரு பொருள்கள் கூடி இயங்கும் பொழுது, பசுவும் பசுத் தன்மையும்போல் இவை கூடியியங்குவதைக்கொண்டு உடலே உயிர் ஆகாது. உடலே உயிர் எனக் கொள்ளின் உடல் பிணமானபொழுது அதன் இயக்கம் நின்று விடக் காரணமில்லை. உயிர் இருந்து இயக்கும் வரையுமே, உடல் இடத்துக்கிடம் போய்வருகின்றது. ஒளியுடன் தொழிற்படுகின்றது. ஆனால் பௌதீகப் பொருள்களாலான உடலுக்கு நோய்நொடி, முதுமை, அகால விபத்து என்பன போன்ற குறைபாடுகள் ஏற்பட்டதும், உயிர் இயக்கத்திற்கு அவ்வுடல் ஏற்றதன்றெனக் கை விடப்பட்டுவிடுகின்றது. (இது இறைவன் ஆணைப்படி, உயிரின் கன்மத்திற்கேற்ப நிகழ்வதாம்) அப்பொழுது உயிர் நீங்கிய அவ்வுடல் ஒளியற்றதாகி, மற்றைய சடப்பொருள்களைப் போலாகிவிடுகின்றது. ஒருடல் அதுவரை செய்த இயக்கங்கள் யாவும் அவ்வுயிரின் ஆணைக்குக் கட்டுப்பட்டு நிகழ்ந்தவையாம்.

இனி, ஒருடலை இயக்கிவந்த இந்த அறிவுப்பொருள் என்பது யாது? என நாம் அறிய முயலவேண்டும். உடல் ஒரு சடப்பொருள் என்று கூறினோம். ஆயினும் இவ்வுடலின் கண்ணுள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி முதலான ஐம்பொறிகளே தொடுதல், உணர்வு, உண்ணல், காண்டல், மணத்தல், கேட்டல் முதலான செய்திகளைத் தனித்தனியே செய்கின்றன. ஆகையால் இவ்வைம்

பொறிகளே உயிராம் எனில், அன்று. இவ்வைம்பொறிகளும் உயிருடன் பொருந்தியே தத்தம் தொழில்களை உயிரின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து செய்கின்றன. அது எவ்வாறெனில், உயிர், உடலைவிட்டு நீங்கியவிடத்து, இப்பொறிகளும் தமக்கு ஆணையிடுவான் இல்லாதநிலையில், செயலற்று, ஒளியிழந்து பிணத்தின் பகுதிகளாகிவிடுகின்றன. எனவே தத்தம் தொழில் களை மட்டுமே செய்யவல்ல ஐம்பொறிகளின் தொழில்களை, அவற்றின் வேறாகியிருந்தும், ஒன்றாகி, உடனாகி ஒருவனாகவே அறிந்தனுபவிக்கின்ற உயிர் உளது என்பதனை "ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது" எனும் சிவஞானபோதச் சூத்திரம் உணர்த்திநிற்கும். இதனைச் சிவஞான சித்தியார் ஐந்தையுங் கொண்டறிவ தொன்றுண்ட தான்மா வைம்பொறி யறிந்திடாவே (செய். 189) என்று கூறும். இக்கருத்தினைத் தெளிவாக்குகின்ற கடோபநிடத வாக்கியங்களையும் இங்கு ஒப்புநோக்குதல் பொருத்தமாகும்.

"இந்திரியங்களைவிட மேலானவை (அவற்றுக்குக் காரணமான) நுண் பூதங்கள். நுண் பூதங்களைவிட மேலானது மனம், மனத்தைவிட மேலானது புத்தி, புத்தியைவிட மேலானது (நான் எனும்) அந்தராத்மாவே" (3-10)

இனிப் பகலிற் சுறுசுறுப்பாகத் தொழிற்படுகின்ற உயிர் களைப்புறுகின்ற வேளையில் உறக்கத்தை விரும்புகின்றது. விழிப்பு நிலையிலேயே மேலே குறிப்பிட்ட ஐம்பொறிகள் தொழிற்படுகின்றன. விழிப்பு நிலையில் இவை எப்பொழுதும் உசார் நிலையிலே வைக்கப்படுகின்றன. ஆனால் உயிர்களைத்துச்



சோர்வடைகின்ற உறக்கத்தில் இவையும் ஓய்வெடுக்கின்றன. கி.மு.460ல் வாழ்ந்தவரான கிரேக்க வைத்தியர் ஹிப்போகிரட்ஸ் (Hippocrates) உறக்கத்தில் வெளியுறுப்புக்கள் சோர்வடைகையில், உள்ளுறுப்புகள் உசாராகத் தொழிற்படுகின்றன என்றனர். எனவே உயிர்களின் வாழ்வுமுறையில் உறக்கம் என்ற தொழிற்பாடு தனி ரகமானதாகும். பிறந்த குழந்தைகள் இருபத்துநான்கு மணித் தியாலங்களும் உறங்குகின்றன. குளிர் வளையங்களில் வளைதோண்டி வாழ்கின்ற மிருகங்கள் வருடத்தில் ஒன்பது மாதங்கள் உறங்குகின்றன. நடமாடாமல் ஓரிடத்திலேயே அசையாமல் நிற்கின்ற மரங்கள்கூட உறங்குகின்றன, மரங்களினதும், விலங்குகளினதும் தூக்கத்தைப்பற்றி நாம் உணர்ந்துகொள்ள முடியாவிடினும், எமது தூக்கத்தைப் பற்றி நாம் உணரலாம் அல்லவா? ஒருவர் நன்கு உறங்கி, மறுநாட் காலையில் எழுந்தால், முதல்நாள்விட்ட வேலைகளைப் புத்துணர்ச்சியுடன் தொடர்ந்து மேற்கொள்கின்றார். அவருக்குத் தூக்கம் கெட்டிருந்தாற் களைத்தவர்போலவும், அரைத்தூக்க நிலையிருப்பவர்போலவும் அவர் காணப்படுவார். தொழில் களையும் அவரால் உற்சாகத்துடன் செய்ய முடிவதில்லை.

ஒருவரின் இத்தகைய உறக்க நிலைகளை விஞ்ஞானிகள் பல ஆண்டுகளாகப் பரிசோதனைசெய்து வந்திருப்பினும், இன்னும் சரியான உண்மைகளைக் கண்டுபிடிக்க முடியாத நிலையிலிருக் கின்றனர். சோவியத் ரஷ்யாவில் பல விஞ்ஞான ஆய்வு கூடங்களில் உறக்கத்தைப்பற்றிய ஆய்வுகளே நடைபெற்று வந்துள்ளன. விஞ்ஞான ஆய்வுகளின்படி மூளையின் சில தொகுதி

நுண்ணணுக்கள் விழிப்பு நிலையிலும் பார்க்க உறக்கத்திற் சுறுசுறுப்பாக இயங்குகின்றன என்பது அறியப்பட்டுள்ளது. அதனோடு வேகமான கண் அசைவுத் துயில் நிலை (Rapid eye movement Phase - REM) என்றும், வேகமற்ற கண் அசைவுத் துயில் நிலை (Non - rapid eye movement Phase - NREM) என்றும், இருவகைத் துயில் நிலைகளும் அவதானிக்கப்பட்டுள்ளன. முதல் நிலையில் ஒருவன் இன்பதுன்பங்கள் நிறைந்த கனவுலகிற் சஞ்சரித்துவிட்டு எழுகையிற், கனவுகளை நடந்தபடியே எடுத்துரைக்கக் கூடிய வராக இருக்கின்றார். இரண்டாவது நிலையில் ஒருவருடைய மூளையின் மின் அலைகளின் செயற்பாடுகள், தசைநார்களின் செயற்பாடுகள், நாடிகள், சுவாசப்பைகள் என்பவற்றின் செயற் பாடுகள் என்பன மிகவும் மந்தமானதாகவும், கண்குவளைகள் அசைவற்றனவாகவும் காணப்படுகின்றன. இந்நிலையிலிருந்து எழுபவனுக்கு தான் கண்ட கனவுகளை நினைவுபடுத்த முடிவதில்லை. இந்த இரண்டாவது துயிலான (NREM) ஆழ்துயிலைப் பெற்றவனே முழு ஓய்வையும் எடுக்கமுடிகின்றது. இவனே மறுநாட் காலையில் புத்துணர்வுடன் காணப்படுகின்றான். வேறுசில விஞ்ஞானிகள் உறக்கத்தில் நான்கு நிலைகள் உள்ளதெனக் கருதுவர். எனினும் உறக்கம் என்பது ஆளுக்காள் வேறுபடுவதனால், விஞ்ஞானிகளுக்கு இந்த உறக்கத்தின் இயக்கங்கள் பற்றியோ அல்லது கனவுநிலைகள் எப்படி உருவாகு கின்றன என்பதுபற்றியோ அறியமுடியாதவர்களாக இருக்கின்றார்கள். இதற்கெல்லாம் காரணம் உயிர் என்ற பொருளின் அனுபவங்களை, உடலிற் செய்யப்பட்ட பரிசோதனைகள் மூலம் அறியமுடியாத நிலைமையேயாம்[15].



சைவ சித்தாந்தம் உறக்கநிலையிற் பல்வேறு நிலைகளிற் துயில்செய்து, இன்ப துன்பங்களை அனுபவித்து மீண்டும் விழிப்பு நிலைக்கு வருவது உயிரே என்பர். உயிரானது நெற்றி, கழுத்து, இருதயம், பொக்குள் (நாபி), மூலாதாரம் என்னும் இடங்களில் நிற்கும்பொழுது, முறையே விழிப்பு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் முதலான ஐந்து நிலைகளை அடையும் என விளக்கும். விழிப்புநிலையில் ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, சத்தம் முதலான ஐந்து விடயங்கள், பேசுதல், நடத்தல், கொடுத்தல், மலம் கழித்தல், ஆனந்தம் முதலான ஐந்து தொழில்கள், பிராணவாயு முதலான பத்துக் காற்றுக்கள் (காற்று ஒன்றாக இருப்பினும் தொழில் வேறுபாட்டால் பத்தெனப்படும்) அந்தக் கரணங்கள் நான்கு (புத்தி, அகங்காரம், மனம், சித்தம்), புருடன் ஒன்று என முப்பத்தைந்து கருவிகள் தொழிற்படுகின்றன. கனவுநிலையிற் சத்தம் முதலான ஐந்து, பேசுதல் முதலான ஐந்து தொழில்கள், பிராணவாயு முதலான 10 காற்றுக்கள், அந்தக் கரணம் நான்கு, புருடன் ஒன்று என இருபத்தைந்து கருவிகள் தொழிற்படுகின்றன. உறக்கத்திற் சித்தம், பிராணன், புருடன் என்ற மூன்று கருவிகளும், பேருறக்கத்தில் பிராணவாயு, புருடன் என்ற இரு கருவிகளும், உயிர்ப்படங்கலில் புருடன் ஒன்றும் தொழிற்படுகின்றன. நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் முதலான நிலைகளை உயிரடையும்போது, முறையே பருவுடம்பு (அன்னமயகோசம்), நுண்ணுடம்பு (பிராணமய கோசம்), குணவுடம்பு (மனோமய கோசம்), கஞ்சுகவுடம்பு (விஞ்ஞானமய கோசம்), காரணவுடம்பு (ஆநந்தமய கோசம்) முதலான உடல்களில் உறையும். எனவே இந்த உறக்கநிலையில் நுண்ணுடலில்

நின்றறிபவன் நுண்ணுடம்பா? அன்றேல் வேறொன்றா? எனில் நுண்ணுடம்பினின்றும் வேறாகிய உயிரேயாம். கனவிற் கண்டவற்றை மறந்தும், சிலகால் மயங்கியும் விழிப்பு நிலையில் அறிவதனாலும் நுண்ணுடல் உயிராகாது. நுண்ணுடலும் பஞ்சபூதச் சேர்க்கையேயாம். மேலும் துயிலின் மற்ற நிலைகளான உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கலில் அறிவு நிகழாதிருக்கின்ற நிலையும் உயிருக்கே ஏற்பட்டதாம். எனவே துயிலின் கனவு நிலையில் கண்டவற்றையும், தன் துயில் நிலைகளையும் அறிந்து கொள்ளக்கூடியதும், நுண்ணுடலுக்கு வேறானதுமான உயிர் வேறொன்று. அது உளது என்பதனைச் சிவஞானபோதம் "ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது" எனக் கூறுவதிலிருந்தும் நாம் தெளிந்து கொள்ளலாம்.

மற்று பிராணன் என்ற காற்று (பத்துவகையாக) விழிப்பு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் முதலான நிலைகளிற் சமமாக இயங்கிக்கொண்டிருப்பதனாற் பிராணன் என்ற காற்று உயிராகுமோவெனில், அன்று. விழிப்பு நிலையிற்போற் கனவு, உறக்கம் முதலான நிலைகளில் ஒருவர் உண்ணல் முதலான தொழில்களைச் செய்வதில்லை. பிராணன் என்ற காற்று ஒருவரின் எல்லா நிலைகளிலும், உடலிற் சமமாக இயங்கும் தன் தொழிலைச் செய்கின்றதேயொழிய, வேறு எத்தொழிலையும் செய்யும் ஆற்றலற்றது. எனவே விழிப்பு, கனவு, முதலான நிலைகளிற் கருவிகளை ஒடுக்குவது, அறிவுடைப் பொருளான உயிரேயாம். எனவே இக்கருவிகளை ஒடுக்குகின்ற முதலான செயல்களைச் செய்யும் உயிர் வேறொன்று என்பதனைக் "கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா உளது" என்ற சிவஞான போதச் சூத்திரமும், "அறிந்திடும் பிராணன்றன்னை யடக்கியும் விட்டு மான்மா" என்று சிவஞான சித்தியார் (செய்.190) செய்யுளும் எடுத்து விளக்குவதனைக் கண்டு உணர்க.



இனி, நாம்பெறும் அறிவு விளக்கமெல்லாம் நமது வினைப்பயனாக ஈட்டியதாய் இருக்கும் அறியுமாற்றலின், வன்மை, மென்மைகளைப் பற்றியதாகும். இவ்வறிவாற்ற லுக்கேற்பவே, பிரபஞ்சப் பொருள்களின் விரிவு முதலான யாவற்றையும் அறிய இயலுகின்றது. இவ்வாறு ஒருயிர் அறியும் ஆற்றலை ஆன்ம சிற்சக்தி என்பர். இவ்வான்ம சிற்சக்தியானது உலகப் பொருள்களுடன் தானே நேராகக் கலந்து அறியும் சக்தியற்றது. (உயிருக்கு அனாதியே இந்த அறிவு மறைப்புண்டு. அதனாலேயே உடற் கருவிகளுடன் சேர்க்கப்பட்டது என்பதனை நாம் நினைவுகூரல் வேண்டும்) எனவே உடலிற் தரப்பட்டுள்ள உட்கருவி, புறக்கருவிகள் என்பவற்றோடு தொடர்புகொண்டு அறிவைப்பெற்று, நாளாந்தம் கிடைத்த பழைய அனுபவங் களுடனும், நினைவுகளுடனும் தொடர்புபடுத்திச் சில விடயங்களை நன்கு விளங்கிக்கொள்ள முயல்கின்றது. இவ்வாறு எம் உடலில் அறிவு நிகழ்ச்சிக்குரிய கருவிகளாக மனம், சித்தம், புத்தி, அகங்காரம் எனும் உட்கருவிகளே இயங்குகின்றன. மனம் தன் முன் எதிர்பட்ட பொருள்களை இது யாதோ? என்று ஐயப்படுகின்றது. சித்தம் சிந்திக்கின்றது. புத்தி விடயங்களை 'இது அது' என நிச்சயிக்கின்றது. அகங்காரம் அபிமானித்து இன்னதெனத் தெளிந்து அறிகின்றது. இந்த உட்கருவிகளே கனவிலும், விழிப்பு நிலையிற் கவரப்பட்ட புறப் பொருள்களின் வாசனையால் விடயங்களை அறிய உதவுகின்றன. எனவே இந்த

உட்கருவிகளே அறிவு நிகழ்ச்சிகளை அறிய உதவுவதனால், இவையே உயிராகுமோவெனில், அன்று. ஏனெனில் இந்த உட்கருவிகளும் தம்முள் ஒன்று அறிந்தவற்றை மற்றது அறியாது. இவையும் தத்தம் தொழிலை மட்டுமே செய்யும் ஆற்றலுடையன. அதனோடு உயிர் உடலைவிட்டு நீங்கியவிடத்து, இவற்றின் தொழிற்பாடுகள் எதுவும் நிகழ்வதில்லை. எனவே இவ்வுட் கருவிகள் நான்கின் தொழில்களையும், அவற்றின் வேறாகிய ஒருவனாக இருந்து அறிந்து, பின் அவற்றைத் தன்விருப்பப்படி அவ்வவ் விடயங்களிற் செலுத்தியும், தடுக்கவேண்டியவிடத்திற் செல்லவொட்டாது தடுத்தும், அவற்றின் தொழில்களைத் தான் ஏவிச் செய்விக்கின்றவனுமான உயிர் இவற்றிற்கு வேறானதாகும். இதனை "இணைதரு மிவற்றின்வேறா யானெனதென்ப தான்மா" எனச் சிவஞான சித்தியார் (செய்.191) கூறும். மேலும் இதனைச் சாந்தோக்கிய உபநிடதமும் "இதை நான் நினைக்கின்றேன்" என்று எவன் இந்திரிய விடயங்களையும், இந்திரியங்களுக்கெட்டாத விடயங்களையும் அறிகின்றானோ அவ்வறிவை ஏற்படுத்துவது உயிரே (8: 12-5) என்று கூறுவதையும் கருத்திற்கொள்ளல் ஏற்றதாம். ஓருயிர் ஒரு விடயத்தை அறியும்பொழுது ஐம்பொறிகளி லொன்றும், பஞ்சபூதங்களிலொன்றும், அந்தக் கரணங்கள் நான்கும், கலாதிகள் ஐந்தும் ஆகிய 11 தத்துவங்களைப் பொருந்தி நின்று, அவற்றினுதவியால் அறியும். இந்த நியதிப்படியன்றி உயிர் ஒன்றையும் அறியமாட்டாது. உயிரில்லாமல் இத்தத்துவங்களும் இயங்கமாட்டா.

எனவே நாம் இதுவரை ஆராய்ந்ததிலிருந்து சடப் பொருளாலான உடற்கருவிகள் எதுவும், தன்மைத்தாமே அறியும்



ஆற்றலற்றன என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது. எனினும் ஐம்பொறிகள் வாயிலாகவரும் விடயங்களைப் பிரகிருதியிற் (சடப்பொருளிற்) தோன்றியதான புத்தி நிச்சயிக்கையில், உயிருக்கு அறிவை எழுப்பும் வித்தியாதத்துவம் வாயிலாக, அவ்வுயிர் செய்த புண்ணிய பாவங்களுக்கேற்ப விடயங்களை இது, அது எனத் தீர்மானிக்கும். இவ்வாறு உயிர் புத்தி முதலான கருவிகளின் துணைக்கொண்டு அறிவது ஆராய்ச்சி அறிவாகும். அனுபவ வாயிலாக உயிர் ஒன்றினை அறிவதே உயிர் தானே அறிவதாகும். எனவே இன்றைய விஞ்ஞான ஆய்வுகளிற் சடப்பொருளில் உருவாகியதான மூளையை மாற்றுச்செய்து, அதாவது இரு குரங்குகளின் தலைகளையும், உடல்களையும் மாற்றிப் பொருத்திப் பார்த்தவிடத்துக் குரங்குகளின் நடவடிக்கைகள் வழமை போலிருந்தன என்று சொல்லுமிடத்து, அவை புத்தியின் செயற்பாட்டினையே பிரதிபலிப்பனவாம். ஐம்பொறிகள், அந்தக்காரணங்களின் தொழிற்பாடுகள் யாவும் கழுத்தின் மேற்பாகத்து உறுப்புகளின் தொழிற்பாடாம். எனவே துண்ட மாக்கப்பட்ட உயிர்களின் வியாபகம் கழுத்தின் மேற்பரப்பு வரை ஒடுக்கப்பட்டுவிட்டதாம். மற்ற, மூளை பாதிக்கப்பட்டுப் பல ஆண்டுகளாக மயக்கநிலையில் (Coma) இருக்கின்றவரின் மூளைக்கு விஞ்ஞானிகள் பரிகாரம் தேடுவதன் மூலம் பழுதடைந்த அறிவுக் கருவிகளை திரும்பவும் இயங்கச் செய்யலாம். ஆனால் மயக்க நிலையிலுள்ளவரின் உட்கருவி களான பிராணன் முதலானவை தொழிற்படுவதனால், மூளை தான் உயிரென்பதோ அல்லது மூளையின் மேற்பரப்பிற்றான் ஒருவரின் உயிர் கலந்திருக்கிறது என்பதோ தவறாகும். எனவே இன்றைய விஞ்ஞானிகள் உயிர் ஓரிடத்திலேதான்

(மூளையில் மாத்திரம்தான்) இருக்குமெனில், அது உருவமுள்ள பொருளாய் அழிந்துவிடக் கூடியதாகும். இதனைச் சிவஞான சித்தியார்,

> "உடலினி லேக தேசியுயிரெனி லுருவாய் மாயும்"
> (செய் 206)

என்று எடுத்துரைக்கும்[16]. மற்று உயிர் ஆகாயம்போல் எங்கும் வியாபித்து நில்லாமல், ஒரு தத்துவத்தைப் பொருந்தினால், அதிலே வியாபித்து அறியத்தக்க முறையினையுடைத்தாகி, மற்றுத் தான் வசிக்கின்ற உடலெலாம் வியாபிக்கத் தக்கவனாய், உருவமற்றவனாய், என்றுமுள்ளதாய், ஆணவமல சம்பந்தமுடைய தாய் இருப்பதே 'உயிர்' எனச் சைவ சித்தாந்தம் கூறும். அதனாலன்றோ உயிரைச் சைவ சித்தாந்தம் "வசித்திட வரும் வியாபி" (சி.சித்தியார் செய்.210) எனக்கூறும். எனவே வைத்தியர்கள், இறைவன் ஆணையாற் கூட்டப்பட்ட ஓருடலின் இயக்க நியதிகளின் நெறிநின்று சத்திர சிகிச்சைகளைச் செய்கின்ற பொழுதே, அவ்வுடல் உயிரின் வாழ்க்கைக்கேற்றதாக அமைகின்றது. அன்றேல் உயிரை வேறுடலுடன் இறைவன் கூட்டிவைப்பன். எனவே இவ்வுடலுக்கு வேறாகியதும், உடல் தோன்றிய காலம் முதலே அதனுடன் உடனிருந்துகொண்டு, அவ்வுடற் கருவிகளின் துணைக்கொண்டு, மறந்து, மறந்து அறியும் ஆற்றலையுடைய அறிவுப்பொருளே உயிரென அறியப்படுகின்றது. ஆயினும் உயிர், உடலுடன் கூடியியங்கும் பொழுது, ஒவ்வொரு விடயத்தை ஒவ்வொரு பொறியுடனும் அதுவாக அழுந்தி அறிவதனாலும், பின் அவ்வாறு அறிந்த விடய ஞானங்களை மறத்தலாலும், பின் இன்னொருவர் அறிவிக்க அறிதலாலும், மற்று



இவ்வாறு அறிகின்ற தன்னையும் முழுமையாக அறிந்து கொள்ள முடியாதிருப்பதனாலும், உயிர் தானாக எதனையும் அறியும் சக்தியற்றது என்பது தெளிவாம். உயிரை உடலுடன் கூட்டிய இறைவனே அதன் வினைப்பயன் வழிநின்று செலுத்தி, ஒன்றாய், உடனாய், வேறாய் நின்று அறிவுறுத்துவான். இதனைச் சிவஞானபோதம்,

> "உணர்த்த உணர்தலின் மாயா
> இயந்திர தனுவினுள் ஆன்மா உளது"

என்று கூறியருளுவர்.

இறைவன் பேரறிவுடையவன். அவன் முன் உலகங்கள், போகங்கள், உடற்கருவிகள் முதலான அறிவற்ற பொருள்கள் முனைந்து தோன்றமாட்டா. ஆதலினாற் சித்துப் (அறிவுப்) பொருளாகிய இறைவனை அறிவற்ற பொருள்கள் 'இது' 'அது' என்று விசாரித்து அறியமாட்டா. இறைவனும் முற்றுணர்வு உடையவன். ஆகையினால் 'இதோ' 'அதோ' என்று ஐயப்பட்டு ஆராயும் குணம் இறைவனுடையதன்று. ஆகையினால் இதுவரை நாம் உயிர் எது? என்ற ஆராய்விற் பருவுடல், நுண்ணுடல்களை 'இதுவல்ல' 'இதுவல்ல' என மறுத்து, உயிர் என்பது இவற்றினின்றும் வேறுபட்டது என்று காட்டினோம் அல்லவா? இவ்வாறு நம்முள்ளே இருந்து ஆராய்ந்துவந்ததும், பக்குவமுற்ற காலத்து ஞானாசிரியனால் உபதேசிக்கும்பொழுது, தனக்குரிய மேலான வழியைப் பகுத்தறிந்து பற்றிக்கொள்வதும் உயிரேயாம். இவ்வாறு ஒன்றை ஆராய்ந்து அறிவது இறைவனன்று. அது உயிரே என்று உண்மை விளக்கம் கூறும்.

...... சித்தசித்தை ஓராது நின்றிவற்றை
அன்றே பகுத்தறிவது ஆன்மாவே
(உண்மை விளக்கம் செய்.24)

இதனால் உயிர், இறைவனாகாது என்பது தெளிவாக்கப் பட்டது. எனினும் இறைவன் உயிர்க்குயிராய் ஒன்றாய், உடனாய், வேறாய் நின்று அறிவிப்பனென்பதனால் உணர்த்தப்பட்டதென்னவெனில், அவரவர் வினைப்பயனுக்கீடாக ஏற்றத்தாழ்வான அறிவைக் கொடுத்து, அவ்வுயிர்களின் அறிவினுள் அறிவாய் நின்று இயக்குவன் என்பதேயாம். அதனாலன்றோ தேவாரவாசிரியர் களும், மணிவாசகரும்,

"உரைசேரும் எண்பத்து நான்குநூ றாயிரமாம்
யோனிபேதம்
நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய்
அங்கங்கே நின்றான்" (சம்பந்தர்)

"தூயானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத்
தோன்றிய வெவ்வுயிர்க்குந் துணையாய் நின்ற
தாயானை" (அப்பர்)

"ஆண்டு லகே ழனைத்தினையும் வைத்தார் தாமே
அங்கங்கே சிவமாகி நின்றார் தாமே" (அப்பர்)

"மாயங் காட்டிப் பிறவிகாட்டி மறவா மனங்காட்டிக்
காயங் காட்டி" (சுந்தரர்)

"எனைப்பல கோடி எனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயின் அடைந்தோன்"
(மணிவாசகர் - திருவண்டப் பகுதி)

"சிவனவ னென்சிந்தையு ணின்ற வதனால்
அவனருளாலே அவன்றாள் வணங்கி"
(சிவபுராணம்)



என இறைவனின் பெருமையை உயிர்களுக்கு அறிவுறுத்தி னார்கள். உயிரோவெனிற் சிற்றறிவுடைப் பொருளாம். இதன் சிறுமை நிலைக்கிரங்கியே இறைவன் உடல், கருவிகளாகிய அறிவற்ற சடப்பொருளுடன் கூட்டுவன். அதனால் சடப் பொருளுடன் ஒரேகாலத்திற் கூட்டப்பட்டதாய்க் கூடிவாழ்வதே உயிர்களாம் என்ற உண்மையை நாம் உணர்வோமாக.

இனி, விஞ்ஞான ஆய்வுகளால் விளக்கமுடியாத உயிரின் பிற இயல்புகள் யாவை என அறிதல் உகந்ததாம். வேதாந்திகளில் மாயாவாதிகள் பரமான்மாவே, தன் மாயாசக்தியினாற் பல்வேறு உயிர்களாகவும், உலகமாகவும் காட்சியளிக்கின்றது என்பர். ஆனால் சைவசித்தாந்திகள் இறைவனையும், உயிர்களையும், பிரபஞ்ச உலகத்தையும், வெவ்வேறான உள்பொருள்கள் என்பர். சைவசித்தாந்த உண்மைகளை வேதாந்த நூல்களான உபநிடதங்களும் ஆங்காங்கே எடுத்துரைத்துள்ளன.

"இவ்வுலகில் (சரீரந்தோறும்) தாமாகச் செய்த கன்மத்தின் பயனை அனுபவிப்பவர்களாய்ச் சித்பரவெளியில் இருதய குகையில் இருவர் புகுந்து உறைகின்றனர். (கடோப நிடதம் 3.1) இங்கு இறைவனுககு வினைப்பயன் இல்லையாயினும், எங்கும் வியாபித்து உபகரிக்கும் இறைவன் உயிர்களுடன் ஒன்றாய், உடனாய், வேறாய் நிற்கும் தன்மை கொண்டு இருவரும் அனுபவிப்பதாக உபசார முறையில் ஏற்றிச் சொல்லப்பட்டிருக் கின்றது. இதனை "நிலையில்லாப் பொருள்களிடையே நிலையுள்ளவனாகவும், அறிவுள்ள உயிர்களின் அறிவாயும், ஒருவனாய் நின்று அனைவருடைய ஆசைகளையும் அளிப்பன் (கடோபநிடதம் 5.13) எனும் பகுதியிற் தெளிவுறுத்தும். "அழகிய

சிறகுடைய பட்சிகள் இரண்டு இணைபிரியாதவை. சமமானவை அவற்றுள் ஒன்று உருசியுள்ள பழத்தை உண்கிறது. மற்றதோவெனில் உண்ணாமற் பார்த்துக்கொண்டு மாத்திரம் இருக்கின்றது. (முண்டக உபநிடதம் 3:1.1) இங்கு இரண்டு பறவைகள் என்பதனாற் சுட்டப்பட்டது கடவுளும், உயிருமாம். இரண்டும் காணப்படும் உலகத்திற் காணப்படாத அறிவுப் பொருள்கள் என்பதனாலே சமமானவை எனப்பட்டது. உருவெடுத்த உடம்புகளைக்கொண்டு உணரப்படும். உயிரோவெனிற், தன் வினைப்பயனுக்கீடான பலாபலன்களை அனுபவித்துச் செயற்பட்டு நிற்கையில், இறைவனோவெனில் இன்னவுரு, இன்ன நிறத்தவன் என்று அறியமுடியாது எல்லாப் பொருள்களையும் கடந்து நிற்பவனாதலால், இறைவன் உயிரின் செயல்களை மாத்திரம் அவதானித்துக் கொண்டிருக்கின்றனன் என்றும், இவற்றின் வேறுபாடுகள் உணர்த்தப்பட்டது. உயிருக்கும், கடவுளுக்குமுள்ள இத்தகைய வேறுபாட்டினைப் பிருக தாரணியக உபநிடதம், கீதை என்பவற்றிலும் நாம் கண்டு தெளியலாம்.

"எங்ஙனம் அதிகபாரம் ஏற்றினவண்டி (பாரம் தாங்க முடியாமற்) திணறிக்கொண்டு (வண்டிக்காரனுடன்) செல்கின்றதோ, அங்ஙனமே இச்சரீரத்தில் உயிர், பேரறிஞனாகிய பரமாத்மாவினாற் செலுத்தப்பட்டுச் செல்கின்றது (பிருக தாரணிய உபநிடதம் 4:3.35)

(சடப்பொருளோடு கலந்திருக்கின்ற) சஷரன் என்றும், (அசித்துப் பொருளுடன் சேராதவனுமாகிய) அசஷரன் என்றும், இவ்விருவர்களே உலகிற் புருஷர்கள் எனப்படுவோர். உருப்படைத்த உயிர்கள் அனைத்தும் சஷரபுருஷன். மாறு பாடின்றித் தானான தன்மையையுடையவன் அசஷரபுருஷன். (கீதை 15.16)



"எவன் மூவுலகிலும் புகுந்துநின்று தாங்குகின்றவனோ, மாறுதலில்லாதவனோ, இறைவன் என்றும் பரமாத்மாவென்றும் அழைக்கப்படுகின்றானோ, அந்த மேலான புருஷன் வேறானவன் (கீதை 15.17)

இந்த உயிர்கள் யாவும் என்றுமுள்ள நித்தியப் பொருள்களாம். சைவசித்தாந்திகள் வேதாந்திகளைப்போற் "சத்" உள்பொருள் என்றும், "அசத்" இல்பொருள் என்றும் கொள்வதில்லை. "சத்" எக்காலமும் நிலைபெற்று மாறுபாடில்லாது விளங்கும் பொருள், "அசத்" ஒருகாலத்தில் விரிக்கப்பட்டு மற்றொரு காலத்தில் ஒடுக்கப்படும் பொருளாம். அதாவது மாயையாகிய மூலப் பொருளிலிருந்து விரிக்கப்பட்ட உடல், கருவிகள், உலகங்கள், போகங்கள் என்பன பின் ஒடுக்கத்தில் ஒடுக்கப்பட்டுக் காரணப்பொருளாய் நிற்பனவாம். உயிருக்கு இவ்வாறான தோற்றம், ஒடுக்கம் என்பன ஏற்படுவதில்லை. அவை என்றும் அழியா இயல்பின. உயிர்களுக்கு நிகழும் இறப்பும், பிறப்பும் அவற்றின் வினைப்பயனாக நிகழும் நிகழ்ச்சிகளே. இதனையே அப்பர் பெருமான்

"உயிர்வைத்தார் உயிர் செல்லுங் கதிகள் வைத்தார்" என எடுத்துரைத்தனர்.

பல்வேறு உருவுடைய உடம்புகளைக் கொண்டுணரப்படும் உயிர்களின் இயல்புதான் என்ன? என்பதனைச் சைவ சித்தாந்தம் விளக்குகையில், உயிர் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் இயல்புடைத்தென்கிறது. உயிர் அறிவுப் பொருளானபடியினால், முற்றுணர்வுடைய இறைவனைச் சார்ந்த அதனில் வியாப்பியமாக நிற்றலே, அதன் இயல்பாகும். ஆனால் இந்த நிலையை மறைத்து நிற்பது, உயிரை அனாதியே பீடிக்கப்பட்ட ஆணவத்தினால் அணுவாக்கப்பட்டிருப்பதனாலேயாம். இந்த நிலையைத் தாயுமானவர்

> ''காரிட்ட ஆணவக்கரு வறையில் அறிவற்ற
> கண்ணிலாக் குழவியைப் போற் கட்டுண்டு"
> (சின்மயம் 6)

என உவமைமுகமாக எடுத்துரைப்பதினின்றும் நாம் தெளியலாம். சார்ந்ததன் வண்ணமாய் நிற்குமியல்புடைய உயிர், இவ்வாறு ஆணவத்தினாற் கட்டுண்ட நிலையே அதன் பெத்த நிலை எனப்படுகின்றது. இந்நிலைக்கிரங்கியே இறைவன் மாயையினாலான உடற்கருவிகளுடன் கூட்டுவன். இவை செயலற்று இருளிற்கிடந்த உயிருக்கு விளக்குப்போல்வனவாம். உடலும், கருவிகளும் வளர்ந்து இயங்கத் தொடங்கும் நிலையிலேயே, உயிர் அதனை இயக்கிச் சிறிது, சிறிதாகத் தன் அறிவைப்பெருக்கிக் கொள்கின்றது. அதனாலன்றோ உமாபதிசிவாசாரியார் மாயையை "விடிவாமளவும் விளக்குப் போன்றது" என்றும் (திருவருட்பயன் செய். 30) திருமூலர் "உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" (704) என்றும் விவரித்தனர். இவ்வாறு உயிர் பெத்த நிலையில்



இறைவனால் மாயையிலிருந்து கூட்டப்பட்ட தத்துவங்களின் துணையாலும், பின் முத்திநிலையில் இறைவன் துணையாலுமே, அறிவுள்ள பொருள்களையும் (சத்), அறிவற்ற பொருள்களையும் (அசத்) அறிகின்றது. உயிர் பெத்த நிலையிற் தன்னியல்பற்ற அசித்துப்பொருள்களாலான உடல்களைச்சார்ந்து, அவற்றில் வியாபித்து நிற்றல் மலத்தினால் ஏற்படுத்தப்பட்ட செயற்கை நிலையாம். ஒரு உயிரானது எந்த உடலைச் சார்கின்றதோ, அதனைச்சார்ந்து அதன் சுபாவத்தையே தனதாகக்கொண்டு, அதுவதுவாய் நின்று அறியும் இயல்புடையது. தான் சார்ந்த அவ்வவ் உருவங்களில் வியாபித்து நிற்றலின் "வசித்திடவரும் வியாபி" என்பர். ஆனால் மலங்கள் அடங்கியபின் உயிரின் அறிவு வியாபகமாகின்றது. உயிர் பெத்தநிலையில் ஏகதேச அறிவுடனே இயங்கிவந்தது. முத்தியில் அதன் அறிவு வியாபகம் பெறினும், சார்ந்ததன்வண்ணமாய் அழுந்தியறியும் இயல்பினால், இறைவனுள் அழுந்தி இறைவனை மட்டுமேயறியுமன்றி மற்றொன்றினையும் அறியமாட்டாது. இதுபற்றியே உயிர் எப்பொழுதும் இறைவன் அறிவிக்க அறியும் அறிவையே பெறும் என்று சிவஞானசித்தியார் .......

> அறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான்
> அவன்றானே யறியுஞ்சித் தாதலினா லிரண்டும்
> அணைத்தாலு மொன்றாகா தநந்நியமா யிருக்கும்
> (செய் 320)

எனக் கூறியருளுவர்.

உயிர்கள் மலச்சேர்க்கையால் விஞ்ஞானாகலர் - பிரளயாகலர் - சகலர் என மூவகைப்படுவர். இவர்கள் முறையே மூலமலமாகிய ஆணவமலமுடைய ஒரு மலமுடையாரும், ஆணவம், கன்மம் எனும் இரு மலமுடையாரும், ஆணவம் கன்மம், மாயை எனும் மும்மலமுடையாரும் எனப்படுவோராவர். வியாபக வடிவான உயிர்களை அணுப்படுத்திவைக்கின்ற ஆணவம், உயிருக்குக் குற்றமேயன்றிக் குணமன்று. அதனாலே சைவசித்தாந்தம், செம்பினைக் களிம்புபோலும், நெல்லினை உமிபோலும், உயிரை ஆணவம் அனாதியே பீடித்து உயிரின் அறிவை மறைத்து நிற்கும் என்று கூறுகின்றது. (திருமந்திரம் 468, சிவப்பிரகாசம் 25, சிவஞான சித்தியார் 176, தத்துவப்பிரகாசிகை, பாசவிலக்கணம் 35) மேலும் மெய்கண்டார் "வல்லிமல கன்மம்" அன்றுளவாம் என்றும், தேவாரவாசிரியர்கள் "ஒல்லை வல்வினைகள் கெடுப்பானை" (சுந்தரர்), "மேலை வினைகள் அறுப்பாய்" "பந்தித்த வல்வினை தீர்க்க வல்லான்" (அப்பர்), "ஞானத்திரளாய் நின்றபெருமான் நல்ல அடியார் மேல், ஊனத் திரளை நீக்குமதுவும் உண்மைப் பொருள்போலும்" (சம்பந்தர்), மாதவச் சிவஞானயோகிகள் "செம்புறு களிம்பென்ன அநாதிமல மூழ்கி" என்றும் விபரிப்பதனால், ஆணவமலம் அனாதியே உயிரைப் பீடித்துள்ளது என்றும், அதுவும் என்றுமுள்ள பொருள் என்றும் குறிப்பால் உணர்த்தலாயினர்.

ஆணவமலமென்பது பொருளால் ஒன்றானாலும், அது தன் எண்ணற்ற சக்திகளால் உயிரின் அறிவினைப் பல விதமாக மறைத்து நிற்கும். ஆணவம் மறைத்தற் தொழிலால் இருளை நிகர்த்தது என்பர். அது எவ்வாறெனில், இருள்



என்ற ஒன்றே தனியாக நின்று பல கண்களையும் மறைத்து நிற்கின்றது. இருள் வரப்போவதையும், கண்களை மறைப்பதையும், பின் விட்டு நீங்குவதையும் நாம் உணரக்கூடிய தாக இருக்கும். ஆனால் ஆணவமோ தன் மறைத்தற் தொழிலை உயிருக்குக் காட்டிக் கொள்வதில்லை. அதனாலே உமாபதிச் சிவாசாரியார்

"ஒருபொருளுங் காட்டா திருள் உருவங்காட்டும்
இருபொருளுங் காட்டா திது"

(திருவருட்பயன் 23)

என்பர். உயிர் உடல், கருவிகளுடன் கூடிய சகல நிலையில் இருக்குமிடத்தும் அராகம் முதலிய உடற்கருவிகளின் மூலம் மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் (இவை காமம், வெகுளி, மயக்கம் எனும் மூன்றினின்றும் விரிந்த குணங்களாம்) எனும் எழுவகைச் செயல்களால் உயிரின் அறிவைக் கீழ்ப்படுத்தவே முனையும். இந்நிலையிலும் உயிர்க்குயிராய் நிற்கின்ற இறைவன் உயிரின் வினைப்பயனுக்கீடான உடல்களை மாற்றி, மாற்றிக்கொடுத்து பிறப்பு, இறப்பு வட்டத்திற் காற்றாடியெனச் சுழலவைப்பன். இப்பிறவிகளில் அனுபவித்த துன்ப, இன்பங்களினால் உயிருக்கு ஒரு பிறவியில் உவர்ப் பேற்படவே, பற்றுக்கள் அறத்தொடங்குகின்றன. இந்நிலையில் ஆணவத்தின் வழியிற் தானும் நின்று மறைத்தலைச் செய்த திரோதானசக்தி, அருட்சத்தியாக மாறி உயிரைப் பக்குவப்படுத்தும். இவ்வாறு உயிரின் பக்குவம் முதிர்ச்சியடையும் நிலையில், ஆணவமலசக்தி முற்றாக அடங்கிநிற்கும். இந்நிலையே உயிரின் விடுதலையாம்.

உயிருடனுள்ள வினைப்பயனின் தொடர்புகளை ஆராயுமிடத்து, வினையும் (கன்மமும்) உயிர்களுடன் அனாதியே பொருந்திநிற்கும். எனவே மூலகன்மம் அனாதி நித்தியமாம். பிரபஞ்ச ஒடுக்கத்தில், உயிர் ஒடுங்கி நிற்கின்ற கேவல நிலையில் ஆணவமலமேயன்றி, மாயை, கன்மம் முதலான மலங்கள் இல்லை என்று சொல்லப்படுவது, இவற்றின் (மாயை, கன்மம்) காரியமில்லை என்பதனாலேயாம். ஆனால் கன்மமும் பயன்தராது சஞ்சிதமாய் (சேமித்துவைக்கப் பட்டதாய்) இருக்கவே செய்யும். ஒடுக்கத்தில் மாயையினாலான சட உலகம் ஒடுக்கப்பட்டுக், காரணமாயையாய், உயிர்களுக்கு ஒடுக்குமிடமாய் மாத்திரமே இருக்கும். இவ்வாறு இவை யாவும் உள்பொருளாய் இருப்பதனாலன்றோ உயிர்களுக்கு வினைப்பயனுக்கீடாக நால்வகையாகத் தோன்றும், எழுவகைப்பிறப்பில், எண்பத்து நான்கு நூறாயிர உருபேதங்களில் இறைவன் கூட்டியருளுவன். இதனையே

> "அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லும்
> அஃதறிவீர்"

என்றும்

> "வெய்யவினை நெறிகள் செல வந்தணையு
> மேல்வினைகள் வீட்டலுறுவீர்"

என்றும் திருஞானசம்பந்தரும் எடுத்துணர்த்துகின்றனர். கன்மம் என்பது ஒரு உயிர் சுதந்திரமாகத் தன் மனப்போக்கின்படி செய்த செயலேயாயினும், மலநீக்கத்திற்காக இறைவனின் ஆணைப்



படியே உயிரையடைகின்றது. ஒருவன் செய்தவினை சடமானதால், அதுதானே அவ்வுயிருடன் போய்ச் சேரமாட்டாது. உயிர் அறிவுடைப் பொருளாயினும் ஆணவத்தினால் அறிவு மறைப்புண்டு இருக்கும் நிலையிற், தானாய் அறியும் ஆற்றலற்றது. உயிர் இறைவன் அறிவிக்கவே அறியுந்தன்மையுடையதனால் உயிர்களுக்கு "அவ்வினைக் கிவ்வினை" என்று கூட்டுவிப்பவன் இறைவனே. இதனை உபநிடதங்களும்,

"உடல் படைத்தோரிற் சிலர் வேறு உடல்களை வேண்டி யோனித்துவாரங்களையடைகின்றனர். சிலர் தாவர நிலையை யடைகின்றனர். இது அவரவர் கருமத்துக்கும், ஞானத்துக்கும் தக்கவாறு." (கடோபநிடதம் 5.7)

"அறிவு வாசனையும், கரும வாசனையும், முந்தைய நிகழ்ச்சிகளின் அறிவும் இவனைத் தொடர்ந்து செல்கின்றன." (பிருகதாரணியக உபநிடதம் 4.2)

என்று எடுத்துரைக்கின்றன. இவ்வாறு ஒருயிரின் இன்ப துன்பங்களுக்குக் கன்மமே முதற் காரணமாகவும்; மாயை துணைக்காரணமாகவும், ஆணவம் நிமித்த காரணமாகவும் இருக்கின்றன[17]. இம்மூன்று மலங்களின் செயற்பாட்டினால், இறுதியில் உயிருக்கு இறப்புப், பிறப்புக்களில் உவர்ப்பேற்பட்டு, நல்லுணர்வு தலைப்படுகின்றது. இந்நிலையிலே இறைவன் அருள்புரிந்து ஆட்கொள்வன். இதுவே உயிரின் விடுதலையாம். இப்படிப் பிறவித்தளையை நீக்க முயற்சி செய்கின்ற பிறப்புக்களில் மானுடப்பிறப்பே சிறந்ததென ஆகமங்கள் கூறுகின்றன. ஓர்

உயிர் மானுடப் பிறவியை எடுப்பின் அது "கடலைக் கையால் நீந்தியதை நிகர்க்கும்" என்பர் சிவஞானசித்தியார். (செய். 179) எனவே மானுடப்பிறப்பே விடுதலைக்குரிய பிறப்பென்பதை நாமும் உணர்வோமாக.

## இலக்கங்களால் உணர்த்தப்பட்ட விபரங்கள் :

**உயிரியல்....**

1. ச.சதாசிவம், உயிர்வேதிய மரபியல் ஒரு அறிமுகம் (An Introduction to Biochemical Genetics, New Century Book House Private Ltd.) முதற்பதிப்பு 1979.

2. K.Kanapathipillai, This Baffling Existence, Catholic Press, Batticaloa, 1983. P. 111-120.

3. Catherine Arnst, ``Scientists Wrestle with genetics and ethics" Daily News, Sep. 12, 1989.

4. தே.ஆ.ஸ்ரீநிவாஸாசாரியன், வினா வெண்பா விடை விளக்கக் கட்டுரை, திருவாவடுதுறை ஆதீனம், முன்னுரை, 1956. பக்.23.

5. லியே ஷ்னீடர், உயிரோட்டம், தமிழாக்கம் வி.எஸ்.இராமசாமி, கலைக்கதிர் வெளியீடு, கோவை 1. முதற்பதிப்பு 1963.



6. பலகோடி வருடங்களுக்கு முன்னர் தொல்லுயிரியலைப் பற்றிய படப் புத்தகம் (Irina Yakoveleva, Paleontology Picture Book 1977) மொழி பெயர்ப்பு நா.தர்மராஜன், ராதுகா பதிப்பகம் மாஸ்கோ, 1984, பக்.40.

7. கே.என்.ராமச்சந்திரன், "உலகில் உயிரினம் எங்கு தோன்றியது," அறிவியல் இணைப்பு, தினமணிச்சுடர் 6.18.1988.

8. கே.என். ராமச்சந்திரன், மே.கு.

9. Cyril Ponnamperuma (Reported by D.G.A. Perera) ``The beginnings of life" Dharmaraja Centenary Lecture, No. 3, Daily News, Oct. 15, 1986.

10. திருபர் ஜோன்.ரெஜிஸ், "பூமியில் மட்டும் உயிரினங்கள் என்பது ஆதாரமற்றது" வீரகேசரி, 28.8.1988.

11. Kathryn Hruska. ``Two - Months old baby speaks eight languages" Observer, Dec. 11. 1988.

12. Rajah Karuppu, Experiences in Rebirth. Daily News, April 4, 1987.

13. பற்றிஷியா, "மாண்டவர் மீண்ட அதிசயம்" வீர கேசரி, 11.6.1989.

14. இந்திரா, "மண்ணிற்கடியில் மனிதக் குரல்கள்" வீரகேசரி, 12.2.89.

15. Natalia Gorbunova, What is the secret behind Dreams. The Island, 9th april 1985, Prof. Alexander Vein, What is Sleep? Daily News, Nov. 29, 1988.

16. அருணந்தி சிவாசாரியார் அருளிச் செய்த சிவஞானசித்தியார் சுபக்கத்தின் மேற்கோள்கள், மு.திருவிளங்கம் அவர்கள் உரையுடன்கூடிய கூ.த.நூ.ப.வி.க. வெளியீடு 1971 இரண்டாம் பதிப்பிலிருந்து தரப்பட்டுள்ளன.

17. திருவருட்பயன் தெரிவுக் கட்டுரை, திருவாவடுதுறை ஆதீனம் 1957, பக். 116.

## இலக்கங்களால் உணர்த்தப்பட்ட விபரங்கள் :

**பிரபஞ்ச ஆய்வில் விஞ்ஞானமும்......**

1. ச. சதாசிவம், மு.கு.

2. பி.ஓய்.லெவின், பூமியின் தோற்றமும் கிரகங்களின் தோற்றமும், தமிழாக்கம்: எஸ்.தோதாத்திரி, மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், சென்னை 2, 1962, பக். 24-25.



3. பி.ஓய்.லெவின், மே.கு.பக்.22-23

4. சி.விசுவநாதன், புவி அமைப்பு இயல் (Geology) தமிழ் வெளியீட்டுக் கழகம், 1964, பக் 10-11

5. ஜோன் ரெஜிஸ், பிரபஞ்சம் தோன்றியது எப்போது? எவ்விதம்? வீரகேசரி, 1.9.1988.

6. பி.ஓய். லெவின், மு.கு.பக்.45.

7. K. Kanapathipillai, மு.கு.பக். 107.

8. Jim Fuller, US Pioneer Space - Craft Searches for the 10th planet. D.News 6.12.1988.

9. ஈத.இராஜேஸ்வரி, சூரியன். (வெளியீட்டு விபரங்களைத் தரமுடியாமைக்கு வருந்துகின்றோம்)

10. ஜோன். ரெஜிஸ், பூமியில் மட்டும்தான் உயிரினங்கள் என்பது ஆதாரமற்றது, வீரகேசரி, 28.8.1988.

11. ந.சுப்புரெட்டியார், அணுக்கரு பௌதிகம், தமிழாக்கம் 1966 ஆடி, இதன் மூலநூல் : W.Heisenberg, Nuclear Physics.

மேலும் பார்க்கவும், ந.சுப்புரெட்டியார், அதிசய மின்னணு, 1976, சைவசித்தாந்தக் கழக வெளியீடு.

12. K.Kanapathipillai, பக். 106 - 107

13. Joseph Marshall, When the atoms went to war, Observer, 29.1.1989.

14. ந.சுப்புரெட்டியார், மு.கு.பக். 1-8.

15. திருவாவடுதுறைச் சிவஞான சுவாமிகள் மொழி பெயர்த்தருளிய தருக்க சங்கிரகம், சென்னை, 7ம் பதிப்பு, பக்.12.

16. மணிமேகலை, 27; வரி 110 - 150.

17. மணிமேகலை, 27; வரி 241-252

18. பு.மு.வேணுகோபால், உடல் தத்துவம், தமிழ் நாடு அரசு வெளியீடு, பக். 53-55.ள





# சைவசித்தாந்திகள் பேணிய ஆலய விஞ்ஞானம்

## (சங்க இலக்கிய காலத்திலிருந்து தேவாரத் திருமுறைகள் காலம்வரை)

சைவ சித்தாந்த ஆலய விஞ்ஞானம் வளர்ச்சிபெற்ற நிலையில்,

> அண்டசஞ் சுவேத சங்க ளுற்பிஞ்சஞ் சராயு சத்தோ
> டெண்டரு நாலெண் பத்து நான்குநூ றாயி ரத்தாய்
> உண்டுபல் யோநி யெல்லா மொழித்துமா நுடத்து தித்தல்
> கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரி யங்கான்
>
> (சி.சித்தியார் செய். 179)

என, மக்கட்பிறப்பே கிடைத்தற்கரிய பிறப்பாமென எடுத்துக் கூறியருளுவர் அருணந்தி சிவாசாரியார். அதாவது இறைவன்

உயிர்களின் வினைக்கீடாக, உயிர்களுடன் கூட்டுகின்ற நால்வகைத் தோற்றத்து (முட்டை, வியர்வை, வித்து, கருப்பை) எழுவகைப் பிறப்பில் (மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம், மானுடர், தேவர்), எண்பத்துநான்கு நூறாயிரவுரு பேதங்களில் மானுடப் பிறவியெய்தல் மிக அருமையானதாம். மனம், வாக்குக், காயங்களினாலே சிவனை வழிபடல் வேண்டுமென்று வகுக்கப்பட்ட, இம்மானுடப் பிறவியை யெடுத்தல் பெரிய சமுத்திரத்தைக் கையினாலே நீந்திக் கரையேறினதற்கொப்பாம். மேலும் மானுடப் பிறவியிலும் சைவ சித்தாந்தமெனும் வழிபாட்டு நெறியைப் பொருந்துதல் மிகவும் அரிதாம். ஏனெனில் அந்நெறியிலேதான், உயிரை அனாதியே பீடித்துள்ள மலங்களைத் தேயவைத்து, இறப்புப் பிறப்பெனும் வட்டத்திற் சுழலவிடாமல், விடுதலையடைவதற்குரிய வழிகளும், சாதனைகளும் கூறப்பட்டுள்ளன. எனவே மனம், வாக்குக் காயங்களால் வழிபடுகின்ற உயிர்களுக்கு இறைவன், புறத்தே சிவலிங்கத் திருமேனியையும், சிவனடியாரையும் ஆதாரமாகக் கொண்டும், அகத்தே உயிருக்கு உயிரிடமாக நின்று, ஏற்று, அருள்புரிவன் என்பர் அருணந்தி சிவாசாரியார் (சி.சித்தியார் செய்.118) இவ் வழிபாட்டுநெறி பிற்பட்ட காலத்துச் சைவ சித்தாந்த நெறி வளர்ச்சியிற், சைவ சித்தாந்த சாத்திரங்களிற் சுட்டிக் காட்டப் பெற்றதொன்றாகும்.

ஆனாற், தமிழ்மக்களின் ஆதிமதம், சைவமதம் என்பதனையும், இவர்கள் ஆதியிலிருந்தே நிகழ்த்திவந்த வழி பாட்டுமுறைகள் சைவ வழிபாட்டு முறைகளே என்பதனையும், தொல்லியற் சான்றுகளும், சங்க இலக்கியங்களும் எமக்குணர்த்தி யுள்ளன. (இக் கட்டுரை விரிந்துவிடுமென்ற அச்சத்தால் இங்கு இவைபற்றி விரிவாக ஆராயப்படவில்லை) உலகப் பொதுமறை யெனப் பாராட்டப்படும் திருக்குறள், வாழ்த்துப்பா எனும் பகுதியில், இறைவனின் பெருமையையும், உயிர்களின் சிறுமையையும் எடுத்துக்கூறி, மானுடர் மனம், வாக்குக் காயங்களால் இறைவனை வழிபட்டுய்தி பெறல்வேண்டும் என்கிறது. இக் கருத்தினைக்

**கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை (குறள் 1-9)**
**பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தா**
**ரிறைவ னடிசேரா தார் (குறள் 1-10)**

எனும் குறள்களிற் கண்டு தெளிக[2]. அதாவது இறைவனைத் தலை தாழ்த்தி வணங்கி நிற்காத தலை, குணங்கெட்ட பொறிகளிலும் பார்க்கப் பயனில்லாதது என்றும், அதனால் உயிர் இருள் சேரிரு வினையைக் களைந்து, பிறவியாகிய பெருங்கடலை நீந்தி முடிக்காது என்றும் கூறியருளினர்.

திருக்குறள் காட்டிய சைவத்திறனிவ்வாறு இருக்கையில் நாயன்மார்களிற் காலத்தால் முற்பட்டவர்களாகிய கண்ணப்ப நாயனார், சண்டீசர் முதலான சிவபக்தர்கள், இறைவன்மீது காட்டிய பக்தியும், வழிபாட்டு முறைகளும் அறிவைக் கட்டுப்படுத்திய பக்தி வழிபாட்டு முறைகளாம். அதனாலன்றோ சன்மார்க்க (அறிவுநெறி) நெறிநின்று இறைவனை வழிபட்டு நின்றவராகிய மாணிக்கவாசகரும்,

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும்
ஆட்கொண்டருளி (திருக்கோத்தும்பி 4)

என்றும்,

தீதில்லை மாணிசிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் றாதைதனைத்தாள் இரண்டும்
சேதிப்ப ஈசன்திரு அருளாற் றேவர் தொழ
(திருத்தோணாக்கம் 15-17)

என்றும், இவர்கள் இறைவழிபாட்டிற் காட்டிய உறுதியான பக்தியை விதந்தோதுவர். இதே காலகட்டத்தில் மானுடரல்லாத இருவர் சிவ வழிபாட்டில் உறுதியாக நின்று சிவனருளைப் பெறலாயினர். இவ்வாறு சிவ வழிபாட்டில் உறுதியாக நின்றவர்கள் சிலந்தியொன்றும், யானையொன்றுமெனச் சோழ மன்னன் கோச்செங்கணான் (கி.பி.2ம் நூற்றாண்டுப் பிற்பகுதி) வரலாறுகள் தெரிவிக்கின்றன. திருவானைக் காவிலிருந்த நாவல் மரத்தடியில் எழுந்தருளியிருந்த சிவலிங்கத் திருமேனியைச் சிலந்தியும், யானையும் தமக்குக் கிடைத்த அகப், புறக் கருவிகளின் துணைக்கொண்டு பூவும், நீரும், பந்தருமிட்டு வழிபட்டதனால், யானை சிவகணத்துள் ஒன்றாகி வீடுபேற்றினையெய்தச், சிலந்தி கோச்செங்கணான் எனும் சோழனாகப் பிறந்து சிவனுக்கும், விஷ்ணுவிற்கும் எழுபதற்கு மேற்பட்ட கோவில்களை எடுத்துப் பெரும் புண்ணியமீட்டினான் என்று வரலாறுகள் தெரிவிக்கின்றன. இவ் வழிபாட்டுப் பெருமையைத் தேவாரவாசிரியர்களும், ஆழ்வார்களும் மட்டுமன்றிப், பிற்காலத்தில் அருணந்தி சிவாசாரியார், சேக்கிழார், அருணகிரிநாதர் ஈறாகப் போற்றிப் பாராட்டுவர்[3]. தமிழகமெங்கும் பல சிவத் தலங்களுக்குச் சென்று வழிபட்டு வந்த அப்பர் பெருமான், திருவானைக்காவில் எழுந்தருளியிருந்த இறைவனைப் புகழ்ந்துரைக்கையிற்,



புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயின் நூலால்
பொதுப்பந்தர் அது இழைத்துச் சருகால் மேய்ந்த
சித்தியினால் அரசாண்ட சிறப்புச் செய்யச்
சிவகணத்துப் புகப்பெய்தார் திறலான் மிக்க
வித்தகத்தால் வெள்ளானை விள்ளா அன்பு
விரவியவா கண்டதற்கு வீடு காட்டி
(அப்பர் பக். 514)

எனக்கூறி, மானுடரல்லாதார் நிகழ்த்திய சைவ வழிபாட்டு நெறியையும், பயனையும் மானுடர்க்கெடுத்தியம்புவர்.

இறைவனிடம் ஒருயிர் ஈடுபாடு கொள்ளலே பக்தி எனப்படும். இப்பக்தியானது நம்பிக்கை, அன்பு, பயம், திருப்தி முதலான பலவித உணர்ச்சிக் கூட்டங்களின் சேர்க்கையால் உருவானதாகும். இவ்வுலகத்துத் தன் தந்தை, தாய், கணவன், மனைவி, பிள்ளை போன்றோரிடத்துச் செலுத்துவதைக் காட்டிலும் மேலானதான, தூய்மையுடைய அன்பைத் தனக்கு அருளுகின்ற இறைவனிடத்துத் தீவிரமாகக் காட்டி, அவனை இறுகப்பற்றி நின்று, இதயக்கனிவுடன் செலுத்தும் அன்பே இறைபக்தியாகும். இது உயிருக்குயிர் வேறுபடும். எனினும் சைவ வழிபாட்டு நெறியை வகுத்த ஆகமங்கள், இப் பக்திநெறியை ஒன்றுக்கொன்று ஏற்றமான சரியை, கிரியை, யோகம், ஞானம்

(சீலம், நோன்பு, செறிவு, அறிவு) என நான்கு வகைக்குள் அடக்கி, இவற்றுக்குரிய உறவுமுறைகளை முறையே அடிமை, நற்புதல்வன், தோழன், நன்னெறி என நான்கு வகையாக வகுத்துள்ளன. இந்தப்படி நிலைகளிலிருந்து ஈடேற்றமடைகின்ற உயிர்களின் ஈடேற்றத்தைக் கருவூர்த்தேவர்,

**''படிவழி சென்றுசென்றேறி''**
**(திருவிசைப்பா. திருவிடைமருதூர் 5)**

எனக் கூறியருளுவர். மனிதனுக்கும், இறைவனுக்கு மிடையேயுள்ள உறவிற் படைத்தவன், படைக்கப்பட்டவன் (ஆண்டவன் - அடிமை) என்ற உணர்வே அடிப்படையானது. அந்நெறியை நேரியமுறையிற் செயற்படுத்தவே பக்தியுணர்வுகள் உதவவல்லன. இந்தப் பக்தியுணர்வே தமிழர் மதமாகிய சைவத்தின் உயிர்நாடியாகும். ஆதிச் சைவ வழிபாட்டில் முகிழ்த்த பக்தி யுணர்வுகளை, இந்துவெளி - ஹாரப்ப முத்திரைகளிற் காணப்படுகின்ற பல காட்சிகள் வெளிப்படுத்தியுள்ளன. அன்பு கொண்டு, இறைவனை ஆடியும், பாடியும், அழுதும், புரண்டும் வழிபடும் சரியை, கிரியை நெறிகள், மிகப் பழைமையானவை யென்பதனைத் தேவார ஆசிரியர்களுக்குக் காலத்தால் முற்பட்ட (கி.பி.3) மாணிக்கவாசகர் குறிப்புகளிலிருந்தும் நாம் உய்த்துணரலாம். இதனைப்,

**புரள்வார், தொழுவார், புகழ்வாராய்**
**(யாத்திரைப் பத்து 18)**

என்றும்,



**ஆர்க்கோ, அரற்றுகோ, ஆடுகோ,**
**பாடுகோ, பார்க்கோ (திருவெண்பா 6)**

என்றும்,

**இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்**
**இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்**
**துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்**
**தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்**
**சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்**
**(திருப்பள்ளியெழுச்சி 4)**

என்றும் மாணிக்கவாசக சுவாமிகள் கூறுமுகத்தாற் கண்டு கொள்க. ஒரு பக்தனுக்குரிய இந்த நிலைகளை அப்பர் சுவாமிகளும்.

**வேர்த்தும், புரண்டும் விழுந்து மெழுந்தால்**
**என்வே தனையா னவிலக் கியிடாய் (பக்.446)**

எனக் கூறியருள்வார். இந்தவுணர்வுகளுக்கெல்லாம் அடிநாதமாக இருக்கவேண்டியது களங்கமற்ற அன்பே. இவ்வன்பில்லாதார், எவருக்குமன்பில்லாதார் மட்டுமின்றித், தம்மீதும் அன்பு இல்லாதவரே, என்பதனை

**ஈசனுக் கன்பில்லார் அடியவர்க்குமன் பில்லார்**
**எவ்வுயிருக்கு மன்பில்லார் தமக்கு மன்பில்லார்**
**(சி.சி.323)**

என அருணந்தி சிவாசாரியார் கூறியருளுவர்.

திருமூலர் தமக்குக் கிடைத்த உடற் கருவிகளை முதலில் இழுக்கென்று கருதியிருந்தனர் என்பதனை

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்"
(திருமந்திரம்)

என்றும் பின்,

"உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்
றுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே"

என்பதனையும் கண்டுகொண்டு,

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளா மணி விளக்கே"

எனத் தன் ஊனுடலுக்குள்ளேயே தன்னுடனாய் நிற்கும் இறைவனுக்கு ஆலயம் அமைத்து, வழிபாட்டையும் மிக நுண்ணியமுறையில் கூறியருளுவர். இது ஆலய விஞ்ஞானத்தில் ஒருயிர் தன்னுள்ளேயே உடனாய் நிற்கும் இறைவனுடன் ஒடுங்கி நிற்கும் வழிபாட்டு முறையாகும்.

எனினும் திருமூலர் சரியை, கிரியை நெறி நிற்பார் பூமியில் எழுப்பப்படும் திருக்கோவில்களில் எழுந்தருளுகின்ற திருவருட் திருமேனிகளைத் தம் அகப், புறக் கருவிகளால் வழிபட்டு, உய்தி பெறுதலையும் மறுத்தாரில்லை. அதனை

"முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்"

என்றும்,



"சூடுவன் நெஞ்சினை வைப்பன் பிரான் என்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்து நின்றாடுவன்"

என்றும்,

"பரைபசு பாசத்து நாதனை உள்ளி
உரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத்
திரைபசு பாவச் செழுங்கடல் நீந்திக்
கரைபசு பாசங் கடந்தெய்த லாமே"

எனவும் கூறியருளுவதைக் கண்டு தெளிக. மேலும்,

"பாடவல் லார்நெறி பாட அறிகிலேன்
ஆடவல் லார்நெறி ஆட அறிகிலேன்
நாடவல் லார்நெறி நாட அறிகிலேன்
தேடவல் லார்நெறி தேடகில் லேனே"

என்றுகூறி, யோகநெறி நின்றவரான திருமூலர் உயிர்களின் தாரதம்மியத்திற்கேற்ற ஆலய வழிபாடுகளை வற்புறுத்தினா ரெனில், அந்த ஆலய (உயிரை இலகுவாக இறைவனிடத்து ஒடுங்கவைக்கின்ற) வழிபாட்டின் உள்ளார்ந்தத்தை நாமும் தெளிந்து கொண்டு, உய்ய முயற்சியெடுக்கவேண்டுமென்பதே இவர் கருதியதுமாம்.

இனித், தேவாரவாசிரியர் காலத்து வழிபாட்டு நெறிகளை நாம் ஆராய்வோமானாற், தமிழகத்து அரசியல் சமுதாயப் பின்னணிகளைச் சுருக்கமாக அவதானித்தல் அவசியமாகும். தமிழக அரசிற் களப்பிரர் ஆதிக்கம் ஏற்பட்டவிடத்து, சமணமதம் ஆட்சியாளர் மதமாக அமையலாயிற்று. அதனாற் பௌத்தம்

தமிழகத்திற்குள் ஊடுருவ முன்னரே சமணம் தமிழகத்திற் பரவி, மக்களின் ஆதரவையும், மன்னர்களின் ஆதரவையும் பெற்றிருந்தது. இதன் பின்னரே புத்தமதம் பரவலாகப் பின்பற்றப்பட்டுத், தமிழகத்திற் செல்வாக்குடைய மதமாக, வளரலாயிற்று., மணிமேகலை எழுந்த காலத்திற் தமிழகத்திற் புத்தமதம் செல்வாக்குற்று விளங்கிற்று என்பதனை, இந் நூலால் அறிய முடிகின்றது. இவ்விரு மதங்களும் தமிழகத்திற் புகுந்ததன் காரணமாகத் தமிழ் மக்கள் மத்தியிற் புதிய சமயக் கருத்துக்கள் திணிக்கப்படலாயின. அதாவது "நாம் காண்கின்ற உலகமே உண்மையானது. மற்று மேலான இறைவன் என்றவொரு பொருளோ, அன்றேல் உயிரென்றவொரு பொருளோ உண்மையானவையல்ல" என்பதே இவர்கள் போதித்த புதிய கருத்துக்கள் ஆவன.

> **குற்றமும், வினையும், பயனும் துன்பம்**
> **பெற்ற தோற்றப் பெற்றிகள் நிலையா**
> **எப்பொருளுக்கும் ஆன்மாஇலை - என**
> **இப்படி உணரும் இவை வீட்டு இயல்பு ஆம்**
> **(மணி 30: 175-178)**

எனத் தமிழ்ப் பௌத்த காவியமான மணிமேகலை எடுத்துக்கூறும். அதாவது பௌத்தக் கோட்பாடுகளை மேலானதாகக் காட்ட வெழுந்த மணிமேகலை, குற்றம், வினைப் பயனாதியவற்றாற் பெற்ற உடம்புகள் நிலையில்லாதன. அதனோடு உயிரென்பது என்றவெதுவுமில்லை யெனவுணர்வதே வீட்டுலகம் பெறுவதற்குரிய உறதிகளாம் என எடுத்துரைத்தது[6]. இக்கருத்துக்களில் நம்பிக்கைவைத்த தமிழ் மக்கள் சமணம், பௌத்தம் முதலான நாத்திக மதங்களைத் தழுவலாயினர். அதனாற் தமிழ் மக்களின் பிறப்புரிமைகளான சைவ மதமும், சிவ வழிபாட்டு நெறிகளும், உயிர் ஈடேற்றங்களும் அர்த்தமற்றன வையாகக் கருதப்படலாயின. தமிழகத்தில் ஆட்சியாளரின் மத மாற்றத்தைக்கண்டு, மக்களும் அவ்வழியே நின்றனர். மக்கள் மனதை ஈர்க்கும் வகையில் நாலடியார்[7] சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான நூல்கள் எழுதப்படலாயின. உயிர் ஈடேற்ற நெறிநின்ற சிவபக்தர்களையும், சிவ வழிபாட்டு நெறிகளையும் அழித்துக்கட்ட முயற்சிகள் எடுக்கப்படலாயின. திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய தேவாரங்களிலும், பெரிய புராணத்திலும் சமண மன்னர்கள் இத்தகைய முயற்சிகளில் ஈடுபட்டிருந்தனர் என்பதற்காகிய சான்றுகளை நாம் காணலாம். இதனாற் சைவம், வைணவம் முதலான தமிழ்நாட்டு மதங்கள் நிலைதளரத் தொடங்கின. துறவு நிலையொன்றே துன்பங்களி லிருந்து விடுதலை பெறக்கூடிய வழி என்று சமணர்களும் பௌத்தர்களும் கூறியதனால், இந்துக்களின் மாணாக்கர்நிலை, இல்லறம், காடேகுதல், துறவு பூணல் (பிரம்மசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம்) எனும் நான்குபடி நிலைகளில் உயிர்நின்று முதிர்ச்சியடையவேண்டுமென்ற வாழ்க்கைமுறை களும் உதாசீனம் செய்யப்பட்டன. இத்தகையதொரு காலகட்டத்திலேதான் தளர்ந்து, நலிந்து கொண்டிருந்த சைவத்தையும், வைணவத்தையும் தழைத்தோங்கச் செய்தவர்கள் தேவாரவாசிரியர்களும், ஆழ்வார்களும் ஆவர். இவர்களுற் தேவாரவாசிரியர்கள் சைவ மதத்தினை மீளவும் தழைத்தோங்கச் செய்வதற்கு மூன்று வழிகளில் முயன்றனர்.

முதலாவதாகச் சமணம், பௌத்தம் முதலான மதங்களின் நாத்திகக் கோட்பாடுகளின் குறைகளையும், அதனால் உயிரிற்கு ஏற்படுகின்ற தீங்குகளையும் மக்களுக்கு எடுத்துரைத்தனர். இவர்களுள் திருநாவுக்கரசுநாயனார் சமணம் தழுவியிருந்தவர். பின் இறைவன் சோதனையாற் சூலைநோய் ஏற்பட்டு வருந்திப் பின், தமக்கையார் வேண்டுதற்கிணங்கச் சைவம் தழுவிச் சூலநோய் நீங்கப் பெற்றனர். எனவே இவர், தான் சமணராகக் கழித்த வாழ்நாட்களுக்காகக் கழிவிரக்கம்கொண்டும், பின் சமணர் இவருக்குச் செய்த இடுக்கண்களிலிருந்து, இறைவன் ஆட்கொண்டு அருளியமை பற்றியும், அனுபவ வாயிலாகக்கூறி மக்கள் மனதில் விதைக்கப்பட்டிருந்த சீரழிந்த கருத்துக்களையெல்லாம் களைய முயன்றனர். இவர் சமணத்திற் கண்ட குறைபாடுகளையெல்லாம்,

> ''மனை துறந்த வல்லமணர் தங்கள் பொய்யும்
> மாண்புரைக்கு மனக்குண்டர் தங்கள் பொய்யும்
> சினைபொதிந்த சீவரத்தர் தங்கள் பொய்யும்
> மெய் யென்று கருதாதே" (பக் 293)
> ''நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே"
> (பக்-144)
> ''நீதி யைக்கெட நின்றம ணே யுனும்"
> (பக் 187)

என எடுத்துரைத்துப், பின் இறைவன் தமை ஆட்கொண் டருளியமையை

> ''மறப்பித்த வாவல்லை நோய்வினை
> காட்டி மறப்பித்த நோய்



> துறப்பித்த வாதுக்க நோய்வினை
> தீர்ப்பா னுகந்தருளி" (பக் 126)

என்றும்,

> பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங்
> குண்டர்கள் தஞ்சொல்லே கேட்டு
> உருகுவித்தென் உள்ளத்தின் உள்ளிருந்த
> கள்ளத்தைத் தள்ளிப் போக்கி
> அருகுவித்துப் பிணிகாட்டி யாட்கொண்டு (பக் 306)

என்றும்,

> ''வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர் தந்த
> நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளி அடிகளாரே"
> (பக் 218)

எனவும் கூறியருளுவதோடு,

> மனிதர் காளிங்கே வம்ஒன்று சொல்லுகேன்
> கனிதந் தாற்கனி உண்ணவும் வல்லீரே
> புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
> இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே (பக் 588)

என்று அழிவுநிலையிற் சென்றுகொண்டிருக்கின்ற தமிழ் மக்களை விழித்து உபதேசமும் செய்தனர். மேலும் இறைவன் தேடுவார் தேடச் செய்தே சேர்பவன் என்பதனை,

> ''மெய்த்தவன் காண் மெய்த்தவத்தில் நிற்பார்க்கெல்லாம்
> விருப்பிலா இருப்புமன வினையர்க் கென்றும்
> பொய்த்தவன் காண் புத்தன்" (பக் 253)

என்றும் கூறியருளுவர். சிறுவயதினரான திருஞானசம்பந்தரும், நாத்திக மதங்களினாற் தமிழ் மன்னர்களும் மனங்கவரப்பட்டு, மதம் மாறிக்கொண்டிருக்கையிற், புத்தரை வாதில் வென்று திரும்பவும் மன்னர்களைச் சைவம் தழுவச் செய்தனர். நாத்திக மதக் கோட்பாடுகள் தவறானவை என்பதனை மன்னரும், மக்களும் உணரவேண்டுமென்பதற்காக, இறைவனிடமே புத்தரை வெல்லத் தமக்கு ஆற்றலைத் தரும் வண்ணமும், அவ்வாற்றலினாற் பாண்டியனுக்கு எரிவு நோயை ஏற்படுத்திப், பின் பாண்டிய அரசியின் வேண்டுகோட்கிணங்கித், திருநீற்றினைப் பாண்டிய மன்னனை அணியச்செய்து, சைவம் தழுவச் செய்தனர்.

> **நீற்று மேனிய ராயினர் மேலுற்ற**
> **காற்று கொள்ளவு நில்லா அமணரைத்**
> **தேற்றிவாது செயத்திரு வுள்ளமே (பக் 390)**

என்றும்,

> **பொய்ய ராம்அம ணர் கொளு வுஞ்சுடர்**
> **பைய வேசென்று பாண்டியற் காகவே (பக் 387)**

என்றும் இறைவனிடம் வேண்டிநின்றனர். இவற்றையறிந்த மக்களும் நாத்திக மதங்களில் நம்பிக்கையிழந்து, தம் சமயம் சார்ந்தனர்.

இவ்வாறு தேவார ஆசிரியர்களுள் அப்பர் சுவாமிகளும், திருஞானசம்பந்தரும் நாத்திக மதங்களுடன் போராடியதோடு, அவற்றைத் தமிழ் நாட்டிலிருந்து மறைந்து போகும்வண்ணம்



சைவ மதத்திற் பக்தியியக்கத்தைத் தீவிரமாக்கினர். சுந்தரமூர்த்தி நாயனார், இவர்களுருவாக்கிய பின்னணியிற் தோற்றியவராதலாற், பௌத்த மதங்களுடன் போராட வேண்டியநிலை ஏற்படவில்லை. எனினும், தன் காலத்துக்குமுன் நடந்த செய்திகளைக் கொண்டும், எஞ்சிக்கிடந்த நாத்திகக் கருத்துக்களைக்கொண்டும். சமணருக்கும் பௌத்தருக்கும், அத்தகைய மூடக்கொள்கையேற் பட்டதற்குக் காரணம், அவர் பிறப்பினால் ஏற்பட்ட விதியே என்றும், அவர்கள் கருத்தினை ஏற்காது இறைவனைத் தொழுமின் என்றும் மக்களை இறைஞ்சுவர்.

> **"குண்டாடிய சமணாதர்கள் குடைச்சாக்கியர் அறியா**
> **மிண்டாடிய அது செய்தது வானால்வரு விதியே"**
> **(பக் 676 - செய் 840[6])**
>
> **"மோட்டுடை சமணர்க்கும் முடியுடைய சாக்கியர்க்கும்**
> **மூடம் வைத்த" (பக். 740 - செய் 921)**
>
> **"குண்டாடியுஞ் சமணாடியுங் குற்றுக்கையர் தாமும்**
> **கண்டார்கண்ட காரணம்மவை**
> **கருதாதுகை தொழுமின்"**
> **(பக். 590 - செய் 727)**

இவ்வாறு, இவர்கள் முயற்சியாற் தமிழகத்தில் நாத்திக மதங்கள் மறையப், பக்தியை ஊற்றாகக்கொண்டு சைவமத வழிபாடு பெருகியோடத் தொடங்கிற்று. இந்நிலையை உருவாக்கிய பின்னர், இரண்டாவது வழியாகச் சைவத்திறனை மக்களுக்கு எடுத்து விளக்கலாயினர். பதி - பசு - பாசம் எனும் மூன்றும் அநாதியான பொருள்கள். உயிர்கள் எண்ணிறந்தவை. ஆணவமலம் எனும் இருள் உயிர்களை அநாதியே மறைந்து

இருப்பதனால், உயிர்கள் அறியாமையெனும் இருளிற் கிடந்துழல்கின்றன. உயிர்களின் இந்நிலைக்கிரங்கியே, இறைவன் உயிர்கள் அறிவு விளக்கம் பெற்றுய்தி பெறும்வண்ணம், உடல், கருவி, புவன, போகங்களுடன் கூட்டுவிக்கின்றனன். இக்கருவி களின் துணையுடன் உயிர்கள் தம்மை ஈடேற்ற வேண்டு மென்பதே இறைவனின் குறிக்கோள். உயிர்களின் குறிக்கோளும் அதுவே. இவ்வாறு முயல்கின்ற உயிர்களுக்கு, இறைவனருளால் மலங்கள் செயலற, உயிர்களைச் சிவன்பற்றி நின்று வீடுபேற்றைக் காட்டியருளுவன். இவ்வாறு சீவனும், சிவனும் இரண்டறக் கலப்பதே சிவசாயுச்சயமாகும். அதாவது உயிரின் பேரின்ப நிலையாகும். திருஞானசம்பந்தர் இக்கருத்துக்களை

''ஈறாயமுதல் ஒன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதமவைஐந்தாய்
ஆறார்சுவை ஏழோசையொ டெட்டுத்திசை தானாய்
வேறாயுடன் ஆனானிடம் வீழிம் மிழலையே''
(பக் 242)

''ஊறரை சேரும் எண்பத்து நான்குநூ
றாயிரமாம் யோனி பேதம்
நிறைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய்
அங்கங்கே நின்றான் கோயில்'' (பக் 245)

என்றும், திருநாவுக்கரசு சுவாமிகள்

''தூயானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத்
தோன்றிய வெவ்வுயிர்க்குந் துணையாய் நின்ற
தாயானை'' (பக் 251)



''ஏழுலகும் ஆய்நின்ற ஏகபாதர்
ஓதத்து ஒலிமடங்கி ஊருண் டேறி
ஒத்துலகம் எல்லாம் ஒடுங் கியபின்
வேதத் தொலிகொண்டு வீணை கேட்பார்''
(பக் 24)

என்றும், சுந்தரர்

''நாதனை நாதமிகுத் தோசைய தானவனை
ஞான விளக்கொளியாம் ஊனுயி ரைப்பயிரை
மாதனை மேதகுதன் பத்தர் மனத்தி லுறையும்
பற்று விடாதவனை'' (பக் 407)
''தொழுவார்க் கெளியாய் துயர்தீர நின்றாய்''
(பக் 427)
''ஏழேல் பிறப்பு மெனையாள் வாய்'' (பக் 533)
''உன்னைப் போல்என்னைப் பாவிக்கமாட்டேன்
சுழித்த லைப்பட்ட நீரது போலச்
சுழல்கின் றேன்சுழல் கின்றதென் னுள்ளம்
கழித்த லைப்பட்ட நாயது போல
ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை
ஒழித்து நீயரு ளாயின செய்யாய் (பக் 524)

என்றும் எடுத்துக் கூறியருளினர்.

இவ்வாறு சைவத்திறனை எடுத்து விளம்பியபின்னரே, உயிர்களின் குறிக்கோள் இறப்புப் பிறப்பென்ற சுழல் வட்டத்தி லிருந்து விடுதலை பெறலாம், என்பதனையுமுணர்த்தினர். இந்த மூன்றாவது நிலையிலேயே, உயிர்கள் தம் குறிக்கோளை யடைவதற்கு இறைவனே சிவாகமங்களிற் பல வழிகளைக் கூறியுள்ளனன் என்றும், உயிர் தனது தகுதிகண்டு ஒன்றைப்பற்றிப்,

பக்தியுடன் இறைபணியில் நிற்க வேண்டுமென்றும் கூறியருளினர். இவ்வழிபாட்டுமுறைகளிற் தாமும் நின்று, அவ்வனுபவ வாயிலாகவே அந்நெறிகள் இன்னதெனவும் விளக்கியருளினன். இவ்வகையினாற் பலதிறப்பட்ட நாத்திக மதக் கருத்துக்களுக் கெதிராக இறைவன் புகழைப் பாடியருளியவையே தேவாரங்கள் ஆவன. (தே-இறைவன், வாரம் - புகழ்பாடல்) மக்கள் கூடி, ஆடிப் பாடவல்ல பண்ணிசைகளுடன் இவை பாடப்பெற்றனவாம்'. மன்னர்களையும், மக்களையும் திரும்பவும் சிவன்பாற் சித்தம்செலுத்தி உய்தி பெறுமாறு பாடப்பட்ட இத்தேவாரங்களே கி.பி.7ம் நூற்றாண்டுமுதல் கி.பி.12ம் நூற்றாண்டுவரை, அதாவது சைவ சித்தாந்தம் சமய உலகிற் தனது கோட்பாடுகளை முடிந்த முடிபுகளாக நிறுத்தும்வரை, மன்னர்களையும், மக்களையும் தம்வசப்படுத்தி வைத்திருந்தனவாம்.

**திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்**
**தீவண்ணர் திறம்ஒருகால் பேசார் ஆகில்**
**ஒருகாலுந் திருக்கோயில் சூழார் ஆகில்**
**உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணார் ஆகில்**
**அருநோய்கள் கெடவெண்ணீ றணியார் ஆகில்**
**அளியற்றார் பிறந்தவா றேதோ என்னில்**
**பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்**
**பிறப்பதற்கே தொழிலாகி இருக்கின்றாரே**
**(அப்பர் பக்க 604)**

என இறைவன் பெருமையையும், உயிர்களின் சிறுமையையும் எடுத்தோதிய நூல்களே, புகழ் நூல்கள் அல்லது தோத்திர நூல்கள் என அழைக்கப்படும் தேவாரங்களாம். இவை உலகியலை



மிகுதியாகவும், வீட்டியலைத் தொகுதியாகவும் எடுத்துரைத்த திருக்குறளைப் போலவோ, அல்லது யோகநெறியை மிகுதியாகக் கூறிய திருமந்திரம் போலவோ அல்லது ஞானநெறியில் நிற்போருக்கே பெரிதும் உதவும் வகையிலமைந்த மெய்கண்ட சாத்திரங்களைப் போலவோவன்றி, எல்லா நிலைகளிலும் நிற்கின்ற மக்களும் தழுவி உய்திபெறக் கூடியவகையிற் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நால்வகை நெறிகளையும் நெறிப்படுத்தியருளின.

**''விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்**
**அரும்பு மலர் காய் கனிபோ என்றோ பராபரமே"**
**(தாயுமானவர்)**

எனத் தாயுமான சுவாமிகள் கூறுவதற்கிணங்க, சைவ ஆலய - வழிபாட்டுநெறி நான்கினையும் எடுத்துரைக்கலாயின. அதனாலே பிற்காலத்திற் பன்னிரண்டு திருமுறைகள் வகுக்கப்பட்ட காலத்திற் தேவாரங்கள் முதலேழு திருமுறைகளாக வகுக்கப்படலாயின. இவை முறையே முதல் மூன்றும் திருஞானசம்பந்தர் தேவாரங்களும், அடுத்து மூன்றும் திருநாவுக்கரசர் தேவாரங்களும், ஏழாம் திருமுறை சுந்தரர் தேவாரங்களுமென வகுக்கப் பட்டனவாம். இத்தேவாரங்களைக் காலத்தால் முற்பட்ட நந்திவர்மபல்லவ (கி.பி.750) மன்னனின், திருவல்லம் கோவிற் கல்வெட்டுக்கள் திருப்பதிகம் எனவே குறிப்பிட்டன. இக் கல்வெட்டுக்கள் 'திருப்பதிகம் பாடுவார் உள்ளிட்ட பலபணி செய்வார்'' என்பதனால் இது உணரற்பாலது. முதலில் நம்பியாண்டார் நம்பி, இவற்றைத் திருமுறைகளாகத்

தொகுத்துவிடத்தும் 'தேவாரம்' எனும் பெயரால் அழைத்தாரில்லை. 11ம், 12ம் நூற்றாண்டுகளிற் 'தேவாரம்' எனும் பதம் வழிபாடு எனும் பொருளிலேதான் கல்வெட்டுக்களில் இடம்பெறலாயிற்று. முதன் முதலாக உமாபதி சிவபாரியாரே (கி.பி.1290 - 1340) "ஞானசம்பந்தர் திருநாவரையர்ர் வண்றொண்டர் பானிகரும் தேவார பாமாலை" (சிவநாம சேத்திரக் கலிவெண்பா 288) என முதலேழு திருமுறைகளையும் குறிப்பிடலாயினர் [10]. பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த இரட்டையர்களும் "மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும் தேவாரம் செய்த திருப்பாட்டும்" (ஏகாம்பரநாதர் உலா செய். 78) எனவும், பின்னர் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சைவ எல்லப்ப நாவலரும் "வாய்மை வைத்த சீர்தோவரமும்" (திருவருணைக்கலம்பகம்) எனவும் குறிப்பிடுவர். மேலும் உமாபதி சிவாசாரியாரின் "தேவார அருள்முறைத் திரட்டு" தேவாரத் திருமுறைகளிலிருந்து 99 தேவாரங்களைத் தேர்ந்தெடுத்துச் சைவ சித்தாந்தக் கருத்துக்களை ஆராய்ந்த நூலாம்.

திருமுறை எனும் பதத்திற்குச் சிவனருள் அல்லது திருவருள் நூல்கள் எனப் பொருள்கொள்வர். திருவெனும் பதத்தைத் தேவாரவாசிரியர்களும் சிவம், திருவருள் எனும் பொருள்களிலே தான் தம் பாசுரங்களிற் கையாண்டுள்ளனர்.

**"சென்றடையாத திருவுடையானை"**

**(சம்பந்தர் 1 98-1)**

**"திருவே என் செல்வமே தேனே"**

**(அப்பர் 6. 47-1)**



மேலும் "முறை" எனும் பதத்தினை நூலெனும் பொருளிற் கந்தபுராணத்தில் உணர்த்தப்பட்டுள்ளமையையும் இங்கு ஒப்புநோக்குதல் ஏற்புடையதாம்.

**"இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன்**
**முறைவரை வேன் என முயல்வதொக்குமால்"**

**(அவையடக்கம்)**

என்பதனால் திருமுறைகள் என்பதனாற் திருவருள் நூல்கள் அல்லது சிவனருள் நூல்கள் என்பதே பொருளாம்.

திருமந்திரம் "பாடும் திருமுறை பார்பனி பாடங்கள்" (1043) எனவும்,

**"பாடுந்திருமுறை.......வாய்த்தோத்திரம் சொல்லுமே" (1067)**

என்பதனாற் தேவாரவாசிரியர்கள் காலத்திற்கு முன்னரே இறைவன் புகழ்பாடும் திருமுறைப் பாடல்கள் வழக்கிலிருந்தது என்பது தெளிவாம். மேலும் திருமந்திரம்,

**மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ்**
**ஞாலம் அறியவே நந்தி அருளது**
**காலை எழுந்து கருத்தறிந்து ஓதிடின்**
**ஞானத் தலைவனை நண்ணுவர் அன்றே**

**(திருமந்திரம்)**

**அரனடி சொல்லி அரற்றி அழுது**
**பரனடி நாடியே பாவிப்ப நாளும்**
**உரனடி செய்தங் கொதுங்க வல்லார்க்கு**
**நிரனடி செய்து நிறைந்து நின்றானே**

**(திருமந்திரம் 43)**

எனக் கூறுமுகத்தாலும் உணரலாம்.

இன்னும், திருமூலர் காலத்திற்கு முன்னரே மாணிக்க வாசக சுவாமிகள்,

"சொல்லியபாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்" எனக் கூறினமைகொண்டும் இறைவனைப் பாடி, ஆடிப் புகழ்ந்து தேடிய திருமுறைகளின் பழமையை நாம் உய்த்துணரலாம்.

காலத்தால் கருத்து வளர்ச்சிபெற்ற தேவாரங்கள் உயிர்களின் ஊனக் கண்களுக்குத் தோற்றப்பெறாத, ஆனால் ஞானக் கண்களுக்குக் காட்சி கொடுப்பவனுமான இறைவனையும், உயிர்களையும், ஒன்றுக்கொன்று ஈர்த்திழுக்கின்ற இடமாகவே கோவில்களைக் காட்டியருளின. எங்கும் பரவியிருக்கின்ற இறைவனின் அருட்சத்தி கூட்டப்பெற்றுத் தொழிற்படுகின்ற இடங்களே ஆலயங்களாவன. அதாவது இறைவனுக்கருகிற் பத்தனையிழுத்தெடுக்கின்ற ஈர்ப்புவிசை கொண்ட திருவுருவங் களைக்கொண்ட நிலையங்களே ஆலயங்களாவன. எம் சூரியனைச் சூழ்ந்துள்ள கோள்கள் தத்தம் தூர எல்லைகளினடிப் படையிலேயே, சூரியனின் ஈர்ப்புவிசை தொழிற்பட வேகமாகவும், மந்தமாகவும் சுற்றிவருகின்றன. அத்தகையதொரு தாரதம்மிய நிலையையுடைய பக்தர்களிடத்தில் இறைவனின் திருவருட் திருமேனிகளின் ஈர்ப்பு விசைகளும் வேறுபடுவனவாம். இறைவனைநோக்கி மாணிக்க வாசக சுவாமிகள் "பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி" போற்றித்திருவகவல் 137) எனத் துதிக்கின்ற, ஐம் பூதங்களின் குணங்கள் யாவும் பொருந்தியுள்ள மண்ணின் சேர்க்கையாலான கல்லாலான திருமேனிகளிலேதான் இறைவனின் அருட்சக்தியானது ஆலயங்களிற் சேமித்து



வைக்கப்பட்டுள்ள". அதாவது இத்தகைய திருவருட்சக்தி நிரம்பிய திருவுருவங்களின்முன், அகப்புறக் கருவிகளையடக்கவும், சீவனைச் சிவமாக்கவும் பயிலுமிடங்களே ஆலயங்களாம். அதனாலேதான் அருணந்தி சிவாசாரியாரும் சீலம், நோன்பு, செறிவு, அறிவு (சரியை, கிரியை, யோகம், ஞானம்) ஆகிய நால்வகை நெறியில் நிற்போருக்கு முறையே உருவம், அருவுருவம், அருவம், அருள் வடிவங்களில் நின்று திருவருள் புரியுமிடமே திருக்கோவில்கள் என்றனர் (சி.சி.325) இதனாலன்றோ அப்பர் சுவாமிகளும்,

திருக்கோயில் இல்லாத திருவில் ஊருந்
திருவெண்ணீ றணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையால் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா ஊரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே
(பக் 603)

என்றனர். இத்தத்துவ மயமான (பஞ்சபூதச் சேர்க்கையாலான) உடலின் அகப்புறக் கருவிகளைக்கொண்டே எம் உயிர் அறிவு விளக்கம் பெறுகின்றது. இக்கருவிகளின் துணைக் கொண்டே உயிர் இறைபணியில் நிற்கின்றது. எனவேதான் தேவாரவாசிரியர்கள் இறைவழிபாட்டிற்குமுன் அகப்புறத் தூய்மை பற்றி முதலில் வற்புறுத்துவர். அகத்தூய்மையெனும் பொழுது, சித்தமொருமித்த பக்தியுடையவர்களாக அடியார்கள்

இருத்தல் வேண்டுமென்று கூறியருளுவர். அதனாற் பக்தியில்லாத போலி வேடங்களைக்,

குறிக ளும்அடை யாளமுங் கோயிலும்
நெறிக ளும்மவர் நின்றதொர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே
(அப்பர் பக். 586)

வேதம் ஓதிலென் வேள்விகள் செய்கிலென்
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதி யங்கமோ ராறும் உணரிலென்
ஈச னையுள்கு வார்க்கன்றி யில்லையே
(அப்பர் பக். 596)

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை ஓட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே
(அப்பர் 596)

எனப் பலவாறு விளக்கியருளிப், பக்தியில்லாத வழிபாட்டினாற் பயனில்லையென்று கூறி, அடியாட்கள் தாங்கவேண்டிய அகத்தூய்மையை வற்புறுத்துவர். புறத்தூய்மையில் இறைவனது சின்னங்களை நாமும் விரும்பியேற்று அணிந்து, இறைவனது சிவவேடப் பொலிவினை, அடியார்களும் தாங்க வேண்டுமென்று வற்புறுத்துவர். ஏனெனில் இறைவன்,

''பொடியாடு திருமேனி நெடுமாறன்''
(அப்பர் 460)

''நீறு தாங்கிய திருநுத லான்'' (சுந்தரர் 441)



''வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்''
(சம்பந்தர் 305)

ஆதலால், அவன் விரும்பும் சின்னங்களையே, எம் வழிபாட்டிலும் புறத்தூய்மை கருதி நாமும் அணிதல் வேண்டுமென்றனர்.

''விடிவதுமே வெண்ணீற்றை மெய்யிற்பூசி''
(அப்பர் 362)

''எவரேனுந் தாமாக இலாடத்திட்ட
திருநீறுஞ் சந்தனமுங் கண்டால் உள்கி''
(அப்பர் 362)

''வேதமோதி வெண்ணீறு பூசி'' (சுந்தரர் 423)

எனச் சிவவேடச் சின்னங்களாற் புறத்தூய்மை பேணி, இறைபணி நிற்கவேண்டுமென்பர். இவ்வாறு அகப்புறத் தூய்மையுடையவராய் நின்ற அப்பரின் சிவவேடப் பொலிவை நம்பியாண்டார் நம்பிகள்,

''மெய் யுருஞ்ஞானத்திரள் மனம் உருகா நெக்
கழுதுகண் உழவாரப் படை கையில் உடையான்''

(திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை) என்றும், சேக்கிழார் சுவாமிகள்,

''தூயவெண்ணீறு துதைந்தபொன் மேனியும்
தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரும் சிந்தையும்
நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகஞ்
செஞ்சொல்

மேய செவ்வாயு முடையார் புகுந்தனர்
வீதியுள்ளே" (பெரிய புராணம்)

என்றும்,

மையல்துறை ஏறி மகிழ்ந்து அலர்சீர்
வாகீசர் மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்
விரவும் சிவசின்னம் விளங்கிடவே
(பெரியபுராணம், திருநாவுக்கரசர்77)

என்றும், திருஞானசம்பந்தர், அப்பரைக் கண்ட கோலத்தைச்,

சிந்தை இடையறா அன்பும்
திருமேனி தனில் அசைவும்
கந்தை மிகையாம் கருத்தும்
கை உழவாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும்
வடிவிற் பொலி திருநீறும்
அந்த மிலாத் திருவேடத்
தரசும் எதிர்வந் தணைந்தார்
(பெரியபுராணம், திருஞானசம்பந்தர் 270)

என்றும், கூறியருளினர். இவ்வாறு தாம் தாங்கிய அகத்தூய்மை யுடனும், புறத் தூய்மையுடனும் சிவவேடப் பொலிவைத் தாங்கிக் கொண்டு, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலான அகக் கருவிகளையும், மெய், வாய், கண், மூக்கு, செவி முதலான அறி கருவிகளையும், கை, கால், தலை, வாய், செவி, மூக்கு முதலான தொழிற் கருவிகளையும், இறைவன் பணியில் நிறுத்துங்கள்! எனக் கேட்டருளுகின்றனர் திருநாவுக்கரசு சுவாமிகள்.



தலையே நீ வணங்காய்
கண்காள் காண்மின்களோ
செவிகாள் கேண்மின்களோ
மூக்கே நீ முரலாய்
வாயே வாழ்த்து கண்டாய்
நெஞ்சே நீ நினையாய்
கைகாள் கூப்பித் தொழீர் (பக். 170)

என்றும்,

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சை நீ வா
நித்தலுமெம் பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையினாற் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ என்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே
(பக். 320)

என்றும்,

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்ந்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே (பக் 586)

என்றும் உட்புறக் கருவிகளை இறைபணியில் நிற்குமாறு இறைஞ்சுவர்.

ஆலயங்களிற் பிரதிட்டை செய்யப்பெற்ற இறைவனின் உருவத் திருமேனியைப் பரம்பொருளாகப் பாவனை செய்து, உடற் கருவிகளால் வழிபாடு இயற்றுவது சரியை நெறியென்றும், இவ்வழியை அடிமை வழியென்றும், அதனாலடையும் பயன் இறைவனுலகிற் (சாலோகம்) சென்றிருத்தல் என்றும் சிவாகமங்கள் கூறுகின்றன. ஆலயங்களுக்குச் சென்று கூட்டுதல், மெழுகுதல், பூக்கொய்தல், மாலை கட்டல், பூந்தோட்டங்கள் அமைத்தல், அடியார்களிடத்துப் பணிவாயிருத்தல், ஆலயமணி யடித்தல், குற்றேவல்புரிதல், இறைவன் புகழ்பாடல், திருவிளக் கேற்றல் என்பன சரியை வழிபாட்டிலடங்குவனவாம். இத்தகைய இறைபணிகளை நியதி தவறாது செய்துவருகையில் உளத்தூய்மையும், இறைபக்தியும் உயிரிடத்து மிக இடம் பெறுகின்றன. இப்பணிகளையெல்லாம் தேவாரவாசிரியர்கள் அனுபவாயிலாக எடுத்துரைத்து, அடியார்களையும் இந்நெறியில் ஆற்றுப்படுத்துவர்.

இறைவன் இசைவடிவானவன். "ஆரியந் தமிழோடிசை ஆனவன்" (அப்பர் 157) "ஏழிசையாய் இசைப்பயனாய்" (சுந்தரர்) என்பதனால், அவனை நாமும் பண்ணிசைகளுடன் பாடி, இறைவனைத் துதி செய்ய வேண்டும் எனத் தேவாரவாசிரியர்கள் கூறியருளுவர். இறைவனைப் பாமாலைகளாற் பணிந்தேத்திய திருநாவுக்கரசர்,

''தமிழோ டிசை பாடல் மறந்தறியேன்'' (பக் 445)
''பண்ணார் இசைகள் அவைகொண்டு பலரும் ஏத்தும்''
''பல்லாண்டிசை கூறுபத்தர்''



''பத்தர்கள் தாம் பலருடனே கூடிப்பாடிப்
பயின்றிருக்கும் ஊரேதோ'' (பக் 522)
''பண்ணிற் பாடல்கள் பத்தி செய் வித்தகர்க்
கண்ணித் தாகும்'' (பக் 479)
''பத்தனாய்ப் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித் தானை'' (பக் 465)
''குணங்கள் பேசிக் கூடிப்பாடித் தொண்டர்கள்
பிணங்கித் தம்மிற் பித்தரைப் போலப் பிதற்றுவர்''
(பக் 310)

என்றும், சுந்தரர்

''பாட்டுப் பாடிப் பரவித்திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் (பக் 524)
''நாத்தானும் உனைப்பாட லன்றி நவிலா தெனா''
(பக் 419)
''பரவி நாடொறும் பாடுவர் வினை பற்றறுக்கும்''
(பக் 149)

என்றும், திருஞானசம்பந்தர்

''பாட லாடல் பேணியிராப் பகலும்
நினைத் தெழுவார் இடர்களையாய்'' (பக் 164)
''பறையி னொடொலி பாடலும் ஆடலும் பாரிடம்''
(பக் 98)
''..............இசைபா டவிம்மி
அழுமா றுவல் லார் அழுந்தை மறையோர்''
(பக் 212)

என்றும் அடியார்கள் இறைவன் புகழ்பாடியும், ஆடியும் வழி படல் வேண்டுமென்று கூறியருளுவர்.

மேலும் சரியை வழிபாட்டிற் பிறவுயிர்களை வருத்தாது இலகுவிற் கிடைப்பதான பூவும், நீருமே சிறந்த பூசைப் பொருள்களாம் என்பர். இதனைத் திருமூலரும் "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" எனக்கூறுவர். இறைவனிடம், உயிர்களை நெருங்கவைக்கும் வழிபாட்டுமுறைகளில், நீர், பூ, தீப, தூபம் காட்டுதலும் ஒன்றாமென்பதனைத் திருநாவுக்கரசர்,

சலம்பூ வொடுதூப மறந் தறியேன்
தமிழோடிசைபா டல்மறந் தறியேன்
நலந்தீங் கிலும்உன் னைமறந் தறியேன்
உன்நா மமென்னா வின்மறந்தறியேன்
(பக் 445)

உரைசெய் நூல்வழி ஒண்மலர் எட்டிடத்
திரைகள் போல்வரு வல்வினை தீர்ப்பாய் (பக் 452)

என்றும் கூறுயருளுவர். இங்கு "எட்டு நாண்மலர்" அல்லது "மலரோரிரு நான்கு" என்னும் பதங்களால், விடியற் காலப் பூசைக்குரிய புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை ஆகிய எட்டு மலர்களையே குறித்தனராம். திருஞானசம்பந்தரும் புறப் பூசையில் நாம் அர்ப்பணிக்கவேண்டிய பூசைப் பொருள்களான பூவையும், நீரையும், பலியாகயிடப்படும் அன்னத்தையும்

"போதொடு நீர்சுமந் தேத்திமுன்னின்
றடி கையி னால்தொழ வல்லதொண்டர்
அருவினை யைத்துரந் தாட்செய்வாரே" (பக் 27)

"பூவுந்நீரும் பலியுஞ்சுமந்து புகலூரையே
நாவினாலே நவின்றேத்த" (பக் 211)



"மலர்நீரவை தூவித்தொழு தேத்தும்
ஞாலம்புகழ் அடியார் உடல் உறுநோய் நலியாவே"
(பக் 131)

என்றும், சுந்தரர்

"இளமலர் ஏய்ந்தன தூவி
எம்பெரு மானடி சேர்வோம்" (பக் 84)
"இண்டைமலர் கொண்டுமண லிலிங்கமது வியற்றி
இனத்தாவின் பாலாட்ட" (பக் 264)

என்றும் கூறியருளுவர். இங்கு சுந்தரர், சண்டேசுவரர் செய்த மணலாலான இலிங்க பூசைக்கு உதவியது இண்டை மலரே என நினைவு கூர்வர். இவ்வாறு ஆகமங்கள் கூறியருளியவண்ணம் நாம் இல்லற தருமத்தில் இருந்துகொண்டே பேரின்பப் பெருவாழ்விற்கு ஆயத்தம் பண்ணுகின்ற சரியைத் தொண்டினை நிகழ்த்துவது மட்டுமன்றி, வேதங்களை ஓதியும், வேள்விகளையியற்றியும் வழிபடல் வேண்டுமென்பர் தேவாரவாசிரியர்கள். அதனால் முதலிற் சிவனே வேதங்களை அருளியவன் என எடுத்துக் கூறியருளுவர்.

"பாடிய நான்மறையான்"
"சாம வேதன் பெரிதுகப் பானை"
(சுந்தரர் பக் 491)

"வேதியர் வேதத்தொலியறா வீழி
(சம்பந்தர் பக் 248)

"ஐவேள்வி ஆறங்கம் ஆனார்போலும்"
(அப்பர் பக் 253)

என இருக்கு முதலான வேதங்களையும் இறைவனே அருளினான் என்பதனால், அவன் வழிபாட்டில் வேதமோதுதல் அவசிய மென்பர். இவ்வேதங்களும் சிவனையே போற்றுகின்றன என்பதனைக் கருதாதார் கல் மனத்தவராவர் என்பதனை,

> ''இருக்கு நான்மறை ஈசனை யேதொழும்
> கருத்தி னைநினை யார்கள் மனவரே (அப்பர் பக் 597)

என்றுகூறி, வேதமோதி வழிபாட்டை நிகழ்ந்த விரும்பாத சைவ அன்பர்களுக்கு எடுத்துரைப்பர்[12]. எனினும் தமிழகக் கோவில்களில் இருக்கோதி மறையவர்கள் வழிபாடு நிகழ்த்தி வந்ததனையும் அப்பர் சுவாமிகள்,

> ''இருக்கோதி மறையவர்கள் வழிபட்
> டேத்தும் இளங்கோயில்'' (பக் 601)

என்றும் சுந்தரர்,

> ''வேதனை வேத வேள்வியர் வணங்கும்
> விமல னைஅடி யேற்கெளி வந்த''

என்றும், சம்பந்தர்

> பயிலும்மறையாளன் தலையிற் பலிகொண்டு
> துயிலும் பொழுதாடுஞ் சோதி யுறைகோயில்
> (பக் 243)
> வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
> ஆதம் இல்லி அமணர் (பக் 389)

என்றும் கூறுவதிலிருந்து, நாம் உணரக்கூடியதாக இருக்கின்றது. மேலும் சரியை நெறியின் தன்மைகளைத் திருமந்திரம், ஐந்தாம்



தந்திரம் செய்யுள் (1443 - 1450 லும், தாசமார்க்கத்தின் தன்மைகளை செய்யுள் 1506 - 1506லும் கண்டுணர்க)

மேற்காட்டியவாறு நாடு, நகரங்களிலுள்ள ஆலயங்களைத் தேடித் தொழுது இறைவன் புகழ்பாடித் தொண்டுகள் செய்துவர, உயிர் சிறிது சிறிதாகப் பக்குவமுதிர்ச்சி அடைகின்றது. அந்நிலையில் உயிரிடத்தில் இறையுணர்வு மேலெழுந்து உருவத்திருமேனி வழிபாட்டின் மூலமாக, அருவுருவத்திருமேனி வழிபாட்டுக்கு உயிர் இட்டுச் செல்லப்படுகின்றது. இவ்வனு பவத்தைப் பெற்றநிலையில், ஐம்பொறிகளாற் செய்யப்படும் புறக் கிரியைகளாலும், மனம் முதலிய உட்கருவிகளாற் செய்யப் படுகின்ற அக வழிபாட்டிலும் ஈடுபட்டிருப்பதே கிரியை (நோன்பு) நெறியாகும். இதனை நற்புத்திரர் வழியென்றும், இத்தகைய நெறிநின்று வழிபட்டோர் சிவலோகத்தில் இறைவன் அருகில் (சாமீபம்) இருக்கும் பயனைப் பெறுவர் என்றும் ஆகமங்கள் கூறுகின்றன. உள்ளத்திற் சிவனைப் பக்தி மலர்கொண்டு பூசித்தல், அருள் நூல்களை வாசித்தல், தியானித்தல், அன்பாக அடியார்க்கு அன்னமிடல், வாய்மை முதலான நல்லொழுக்கங்களைப் பேணியிருத்தல் என்பன இந்நெறியில் நிற்போர் கடைப் பிடிக்கும் நற்செயல்கள் ஆவன. இக்கிரியை நெறியிற் செய்யப் படுகின்ற அகப் பூசைக்கு மலர் உள்ளன்புடன் கூடிய பத்தியேயாம். இதனைச் சம்பந்தர் "பத்தி மலர்தூவ முத்தி ஆகும்" (பக் 302) என்பர். மேலும் திருநாவுக்கரசர் அகப் பூசையிற் தூவப்படுகின்ற எட்டுமலர்கள், கொல்லாமை, அருள், ஐம்பொறியடக்கம், பொறை, தவம், வாய்மை, அன்பு, அறிவு எனப்படுகின்ற தயா மூலதன்ம வழி எனப்படும் ஒழுக்கநெறி மலர்களே என்பர். இதனைத் "தயா

மூல தன்மவழி எனக்கு நல்கி" (திருத்தாண்டகம்) எனக் கூறியருளுவர்.

மேலும் அகப் பூசையிற் கோயில், இலிங்கம், நீர், பூசனை யாவும் உடலினுள்ளேயே காணப்படுகின்ற, இறைவனுக்கே செய்யப்படுகின்றவாம். இந்த அருள்வழித் தியானத்தில்,

**காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக**
**வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக**
**நேயமே நெய்யும்பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்**
**பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே**
**(பக் 581)**

என்று திருநாவுக்கரசரும்,

**"அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற்**
**றைம்புலனும் அடக்கி ஞானம்**
**புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்**
**துள்ளிருக்கும் புராணர் கோயில் (பக் 245)**

என்று திருஞானசம்பந்தரும், வழிபாட்டுக் கோயில்களிற் கிரியையாளர் செய்கின்ற வழிபாட்டுமுறைகள் இன்னதெனவும் விளக்கியருளுவர். மேலும் யோகம், ஞானம் ஆகிய நெறிகளில் மட்டுமன்றிச், சரியை கிரியை நெறிகளிலும் உயிர்கள் திருவைந் தெழுத்தையோதி வழிபடல் வேண்டுமெனத் தேவாரவாசிரியர்கள் கூறியருளுவர்.

**"நற்றவா உனை நான் மறக்கினுஞ்**
**சொல்லுநா நமச்சி வாயவே" (சுந்தரர் பக் 428)**
**"நாவணங் கியல்பாம் அஞ்செழுத் தோதி"**
**(சம்பந்தர் பக் 392)**



**"படைக்கல மாகவுன் னாமத்**
**தெழுத்தஞ்சென்னாவிற் கொண்டேன்"**
**(அப்பர் பக் 7)**

**நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்**
**நமச்சி வாயவே நானறி விச்சையும்**
**நமச்சி வாயவே நாநவின் றேத்துமே**
**நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே (அப்பர் பக் 586)**

எனத் திருவைந்தெழுத்தைத் துணையாகக் கொள்ளும் வழிபாட்டின் பெருமையை எடுத்தியம்புவர்.

இவ்வாறு தேவாரவாசிரியர்கள் பின்பற்றிய பல்வகையான வழிபாட்டு முறைகளைச் சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் எடுத்துரைக்கையில்,

**அன்பினுக்களவு காணார் அளந்த வெள்ளமூழ்கி**
**என்பு நெக்குருக**
**நோக்கி இறைஞ்சி நேர்விழுந்து நம்பர்முன்பு**
**நிற்பதுவு மாற்றார்**
**மொழி தடுமாற ஏத்தி மின்புரைசடையார் தம்மைப்**
**பதிகங்கள்**
**விளம்பிப் போந்தார்" (சசெ 2488)**

எனக் கூறியருளுவர்[13].

இனி,

**"அன்பரொடு மருவலும் ஆலயந்**
**தானும் அரனெனத் தொழுதலும்"**

என்பதற்கிணங்க மெய்யடியார் வழிபாட்டினையும், திருக்கோலம், திருக்கோவில், திருமணி, திருவைந்தெழுத்து முதலியவற்றையும் சிவனெனத் தேறி வழிபடுமாறு தேவாரவாசிரியர்கள் கூறியருளுவர். இதனைத் திருநாவுக்கரசர்

**"அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்**
**ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனுங்**
**கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பர் ஆகில்**
**அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே"**
**(பக்கம் 605)**

என்றும்,

**"பக்தர்கள் தாம் பலருடனே கூடிப்பாடிப்**
**பயின்றிருக்கும் ஊரேதோ" (பக் 522)**

என்றும் அடியார் வழிபாட்டினையும், பின் அடியார்கள் கூடி இறைவன் புகழ்பாடித் தொழுவதையும் குறிப்பிட்டருளுவர். சுந்தரர் இதனை,

**"நாவின்மிசை அரையன்னொடு தமிழ் ஞானசம்பந்தன்**
**யாவர்சிவன் அடியார்களுக்கு**
**அடியான் அடித்தொண்டன்"**

என்பதனாற் சிவனடியார், அடியார்களுக்கும் தாம் அடியவன் என்றும், பின் தாம் யார் யார்க்கெல்லாம் அடியவரென்பதனைத்

**"தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்"**
**(பக் 327 - 330)**

என்ற பதிகம் முழுவதும் கூறியருளுவர்.



மேலும்

**"கூடிக்கூடித் தொண்டர்தங்கள் கொண்டபாணி**
**குறைபடாமே ஆடிப்பாடி அழுது" (பக் 496)**

என்றும் அடியார்கள் கூடி அழுது வழிபடுவதை விளம்புவதோடு, தமது திருத்தொண்டர் தொகையிற் தனியடியார், தொகையடியார் பெருமைகளையும் பாடியருளினர். சுந்தரரின் திருத்தொண்டத் தொகையைப் பின்பற்றியே நம்பியாண்டார்நம்பி திருத்தொண்டர் திருவந்தாதியிலும், சேக்கிழார் பெரிய புராணத்திலும் சிவனடியார் பெருமையை எடுத்துரைப்பதன்மூலம், அடியார் வழிபாட்டினவசியத்தை வற்புறுத்த முடிந்ததெனலாம். இந்த அடிப்படையிலேயே 63 நாயன்மார் திருமேனிகளும் திருக்கோவில்களில் வைக்கப்பட்டனவாம். இதனாலன்றோ அருணந்தி சிவாசாரியாரும் "சிவனடியாரிடத்து அன்பில்லாதவர் சிவனிடத்தன்பில்லாதார்" என்பர் (சி.சித்தியார் செய் 323). சிவனடியார்கள் சிவவேடப் பொலியுடன் நீறு, சடை, காவி, கண்டிகை முதலானவற்றைத் தாங்கயிருப்பவர்களாகையால், அவர்களையும் தேவாரவாசிரியர்கள் அரனெனவே தொழுதனர். இதற்கெடுத்துக்காட்டாக விளங்கியமையே 63 நாயன்மாரது வாழ்க்கை முறைகளுமாம். திருநாவுக்கரசரின் பெயரை உச்சரித்தே அப்பூதியடிகள் கடுந்தவமியற்றினர் என்பதனைச் சிவப்பிரகாசர்,

**.......... திருநாவுக்கரசு**
**எனுமோர்**
**சொல்தான் எழுதியும் சொல்லியுமே**

என்றும் துன்பில் பதம்
பெற்றான் ஒரு நம்பி அப்பூதி
(நால்வர் நான்மணிமாலை)

என எடுத்தியம்புவர்.

இவ்வாறு திருநாவுக்கரசரை வழிபட்ட அப்பூதியாருக்கும், அவர்தம் அடியார்க்கும் அடியவன் தான் என்பதனைச் சுந்தரர், "ஒரு நம்பி அப்பூதியடியார்க்கும் அடியேன்" என்று கூறியருளுவர். திருஞானசம்பந்தர்திருக்காளத்தியிலெழுந்தருளிய இறைவனைத் தொழுதபொழுது அவரெதிரே காட்சிகொடுத்த கண்ணப்ப நாயனாரையும் "கும்பிட்ட பயன் காண்பார் போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு" வணங்கியதாகக் குறிப்பிடுவர். இதனைச் சேக்கிழாரும், "உள்ளத்தில் தெளிகின்ற அன்பின் மெய்ம்மை உருவென்று" எனக்கூறின்ர். சிவதொண்டரைச் சிவனெனவே வழிபட்டவரான பரஞ்சோதியார் எனப்பட்ட சிறுத்தொண்டர் புகழை, அவர்மீது ஒரு பதிகம் பாடிச் சம்பந்தர் வெளிப்படுத்தினர். இச்சிறுத் தொண்டரையே இறைவன் வயிரவர் வேடத்தில் அணுகி அவரைப் பிள்ளையன்பினைவென்ற இறைதொண்டராகக் காட்டியருளினர் எனக் காட்டுவர் சேக்கிழார். இவ்வாறு சிவனடியார் களையும் நாம் தொழுதுய்திபெற வேண்டுமென்று தேவாரங்கள் எடுத்தோதின. இதனை மெய்கண்ட தேவரும் "மாலறநேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே" எனக் கூறியருளினர்.



மேலும், சிவார்ச்சனை, திருவிழாச் சேவித்தல் முதலிய வழிபாட்டு முறைகளையும், தேவாரங்கள் சரியை, கிரியை நெறிகளிற் கூறியருளுவர். சிவார்ச்சனைக்குரிய மந்திரங்களாகத் திருநாவுக்கரசர் ஐந்து திருத்தாண்டகங்களை அருளியுள்ளனர். அவையாவன: திருவதிகைத் திருவீரட்டானப் பதிகம், போற்றித் திருத்தாண்டகம், திருவாரூர்ப் போற்றித்திருத்தாண்டகம், திருக்கயிலாயத்துப் போற்றித் திருத்தாண்டகம் (பதிகங்கள் 268, 269, 270) முதலானவையாம். இவற்றை ஓதி ஒவ்வொரு "போற்றி"ப் பதத்திற்கும் மலர் தூவிப் பாடலே சிவார்ச்சனை வழிபாடாகும்.

நாள்தோறும் திருக்கோவில்களில் நிகழ்த்தும் சரியை, கிரியை வழிபாட்டுப் பூசைகளையேயன்றி, இறைவனுக்கெடுக்கின்ற சிறப்புப் பூசைகளையும் சேவித்து இறையருளை நாம் பெறவேண்டுமென்று தேவாரவாசிரியர்கள் கூறியருளுவர். திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கிய திருமயிலைப் பதிகத்திற், திருக்கோயில்களில் நடைபெறும் பல்வகையான விழாக்களையும் எடுத்தியம்பி, அவற்றை அடியார்கள் யாவரும் கண்டின்பம் பெறவேண்டுமெனக் கூறி அருளுவர். திருஞானசம்பந்தர் திருப்பூம்புகலூரிற் தங்கியிருந்தபொழுது, அங்கெழுந்தருளிய அப்பரிடம், திருவாரூரில் நடந்த திருக்கோவிற் பெருமைகளை விசாரிக்க, அவரும் திருவாரூரிற் தாம் சேவித்தருள்பெற்ற திருவாதிரை விழாவின் சிறப்பை 'முத்துவிதானம்' எனும் பதிகத்திற் கூறியருளினர். மேலும் திருவாரூரில் நமிநந்தியடிகள் பங்குனியுத்திர விழாவை ஏற்பாடுசெய்து, இறைவனுக்கு நீரினாற் திருவிளக்கிட்டார்

என்பதனை திருநாவுக்கரசு சுவாமிகள்,

**ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன்**
**ஆரு ரகத்தடக்கிப்**
**பாரூர் பரிப்பந்தம் பங்குனியுத்திரம் பாற்படுத்தான்**
**நாரூர் நறுமலர் நாதனடித் தொண்டன் நம்பிநந்தி**
**நீராற் றிருவிளக் கிட்டது நீணா டறியு மென்றே**
**(பதிகம் 98-7)**

என எடுத்துக் கூறியருளினர். இதுபோன்ற பூச நீராட்டு விழா, அட்டமி விழா முதலானவற்றையும் அப்பர் சுவாமிகள் எடுத்துக் கூறிச் சைவ அடியார்களை இத் திருவிழாக்களைச் சேவித்துப் பயன்பெறுமாறு வேண்டுவர். இறைவனுக்குத் திருவிளக்கேற்றிப் பயனடைதல், ஆலயங்களில் மட்டுமன்றி வீடுகளிலும் ஏற்றி மகளிர் வழிபட்டனர் எனச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இந்த மரபின் வழிவந்த தமிழ்மகளிர் திருக்கார்த்திகை நாளில் கபாலீசுவரர் கோவிலில் விளக்கேற்றி வழிபட்டமையை சம்பந்தர்

**"துளக்கில் கபாலீச் சுரத்தான் தொல்கார்த்திகை நாள்**
**தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்**
**விளக்கீடு காணாதே"** **(பக் 529)**

எனக்கு குறிப்பிடுவர். இத்தகைய விழாக்களைச் சேவித்தலாலும் உயிர்கள் நன்மை யடைகின்றன என்பதே தேவாரவாசிரியர்கள் கருத்தாம். இவையேயன்றிச் சிவதல யாத்திரைகள் மேற்கொள்ளலும், உயிர்களின் வழிபாட்டு



நெறிகளில் ஒன்றாமென்பதனை தேவாரவாசிரியர்கள் சிவத்தலங்களைத் தாமே தலம் தலமாகச் சென்று தேவாரங்களைப் பாடியருளியமையிலிருந்து, நாமும் உய்த்துணரலாம். மேலும், கிரியை நெறிப்பட்ட நற்புத்திர வழி வழிபாட்டு நெறிகளின் சிறப்பைத் திருமந்திரம் ஐந்தாந்தந்திரத்தில் (1451 - 1456 முதலான செய்யுள்களிலும், 1495 - 1501 முதலான செய்யுள்களிலும் கண்டுகொள்க)

நாம் இதுவரை ஆராய்ந்த சரியை, கிரியை நெறிகளின் வழிநின்றோர் படிப்படியாக யோக நெறியை அணுக வல்லவராகின்றனர். வழிபாட்டு நிலையில், யோக நிலையில் (செறிவு) நிற்போர் உள்ளம் மேலும் நுட்பமான உணர்வு களைப் பெற்றுச் சிவனிடத்துச் சித்தத்தை உறுதிப்படுத்தி நிற்கும். இறைவனை இந்நிலையில், மிக நுண்வடிவில் வழிபடுவர். இவ்யோக வழிபாட்டில் உள்ளத்தில் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணம், தியானம், சமாதி எனும் அட்டாங்க யோகங்கள், குண்டலினியோகம், நிலையத் தியானங்கள் என்பன கூடவல்லனவாம். இந்நெறியைத் தோழமை வழியென்றும், வரும்பயன் சிவனுருவத்தைப் பெறலாம் என்றும் ஆகமங்கள் கூறுகின்றன. இறைவனைச் சம உரிமைகளையுடைய தோழனாகக் கொள்வது, மெய்யுணர்வின் கண் அகவழியாகவே உணரமுடியும். இந்த மெய்யுணர்வு வழிபாடுகளைப் புறவழியாற் கண்டுணர முடியாமையால் இவ்வழியில் நின்றவராகிய சுந்தரமூர்த்தி நாயனாருக்கு இறைவனே,

"தோழமையாக உமக்கு நம்மைத்
தந்தனம் நாம் முன்பு தொண்டுகொண்ட
வேள்வியில் அன்றுநீ கொண்ட கோலம்"

என்று அசரீரியாய்க் கூறிய பின்னரே, சுந்தரரும்

.................என்னுடைய
தோழனுமா யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
(பக் 331)

என உணர்ந்துகொண்டனர். பின் தன் யோகநிலையில் இறைவன் திருவடிகளைக் கண்டின்புற்றனர் என்பதனைப்

"பிறவேனாகிலும் மறவேன்
காணிராகிலுங் காண்பனென் மனத்தாற்
கருதீராகிலுங் கருதி" (பக் 360)

என்றும்,

"வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம்
அயர்ப்பொன் றின்றிநின் திருவடி யதனை
அர்ச்சித் தார்பெறு மாரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் திருவடி அடைந்தேன்
(பக் 70)

என்றும்,

"...............தீவினை செற்றிடு மென்று
அடித்தவமல்லாமல் ஆரையு மறியேன்" (பக் 153)



என்றும் எடுத்தியம்பினர். சுந்தரருடைய யோகநிலையைச் சேக்கிழாரும்,

அன்புருக உருகி உளம் அலைய
அட்டாங்க பஞ்சாங்கமாக
முன்பு முறைமையினால் வணங்கி
முடிவிலாக் காதல் முதிர ஓங்கி
நன்புலனாகிய ஐந்தும் ஒன்றி
நாயகன் சேவடி எய்தப்பெற்ற
இன்ப வெள்ளத்திடை மூழ்கி நின்றே
(பெரிய புராணம்)

எனப் போற்றியருளினர். திருநாவுக்கரசரும்,

உடம்பெனு மனையகத்து வுள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே (பக் 580)

என்றும், சம்பந்தர்

"பத்திப்பேர் வித்திட்டே பரந்தஐம் புலன்கள் வாய்ப்
பாலே போகா மேகாவாப் பகையறும் வகைநினையா
முத்திக்கே வித்தகத்தே முடிக்குமுக் குணங்கள் வாய்
மூடாவூடா நாலந்தக் கரணமும் ஒருநெறியாய்ச்
சித்திக்கே உய்த்திட்டுந் திகழ்ந்த மெய்ப் பரம்பொருள்
சேர்வார் தாமே தானாகச் செய்யுமவன்"
(பக் 50)

என்றும் கூறி, இறைவனை உணரும் பதி ஞானத்தால், அகப்பூசை, புறப்பூசை நெறியில் நின்று அறியாமை ஒடுங்க, அறிவு விளங்கப் புலன்களையடக்கி, உள்ளத்தே இறைவனைக் காணும் யோகியர் சிவன் கழலைக் கண்டிருக்கையில், இறைவனும், சேர்வார் தாமே தானாகச் செய்வன் என்பதனை விளக்கியருளினர். (திருமந்திரம் ஐந்தாம் தந்திரத்தில் யோகம்பற்றிய விளக்கங்களைச் செய்யுள் 1457 - 1466 களிலும், தோழமை வழிபற்றிய விபரங்களைச் செய்யுள் 1488 - 1496 களிலும் கண்டு தெளிக).

இவ்வாறு சரியை, கிரியை, யோக நெறிகளில் நின்று உட்கருவிகள், புறக்கருவிகள் ஒடுங்கியவர்கள், இறைவனை எங்கும் வியாபியாக, அறிவுவடிவாகக் காண்பர். இந்நிலையிற் திருவருளே குருவடிவாக எழுந்தருளி, உயிருக்கு ஞானத்தை உபதேசித்தாட்கொள்ளும். இந்நிலையில் உயிரின் அறிவின் கண் இருவினையொப்பு, மலபரிபாகம், அருள்வீழ்ச்சி என்பன ஏற்பட்டிருக்கும். இவ்வாறு உயிரின் பக்குவத்தையுணர்ந்த இறைவன், உயிருடன் இரண்டறக் கலந்து ஆட் கொள்வான். உயிரும் இதுகாலவரையிருந்த சுட்டறிவு, சிற்றறிவு என்பன நீங்கப்பெற்றுப் பேரறிவுடையதாய், முற்றறிவுடைய இறைவனுடன் கலந்து பிறவியிலிருந்து விடுதலையடைந்து, பேரின்பம் துய்த்துநிற்கும். இத்தகைய ஞானநிலையை அறிவு வழியென்றும், அதனாலடையும் பயனை இறைவனுடன் இரண்டறக் கலத்தலாகிய சாயுச்சயம் என்றும் ஆகமங்கள் கூறுகின்றன. இதுவே மனிதப் பிறவியின் குறிக்கோளுமாகும். உயிர்களின் அறிவு, உடற்கருவிகளுடன் பொருந்தியவிடத்து முதலிற் சுட்டறிவாய் இருந்து, பின் 'யான் அறிந்தேன்' என்கையிற்



சிற்றறிவாய் நிற்கும். ஆனால், இவ்விருவகையறிவும், மலம் நீங்கியவிடத்து நீங்க, இறைவனைப்பற்றிப் பேரறிவாக நிற்கும். இந்நிலையில் உயிர் இறைவனைச் சார்ந்து இறைவனையன்றி, வேறொன்றினையும் அறியாது. இத்தகைய அறிவு வழிபாட்டில் நின்றவரான மாணிக்கவாசக சுவாமிகளை, ஞானக் குருவாகக் குருந்த மரநிழலில் எழுந்தருளிய இறைவன், ஆட்கொண்டு திருவைந்தெழுத்தையும் உபதேசித்தருளினன்.

தேவாராசிரியர்களுற், திருநாவுக்கரசர் ஞானநெறி வழிபாட்டிற் தானும் முயல்வதாகக் கூறுமிடத்து,

ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேன்உனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாயுனை நானும் தொழுவனே (பக் 587)

எனக் கூறியப், பின் அதன் பயனைக் கூறுமிடத்து

ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானங் காட்டுவர் தம்மை யடைந்தார்க்கெல்லாம்
தானங் காட்டித்தாள் அடைந் தார்கட்கு
வானங் காட்டுவர் (பக் 255)

என்றும் கூறியருளுவர். சம்பந்தரும் ஞானிகளின் நிலையை

"ஞானிகளா யுள்ளார்கள் நான்மறையை
முழுதுணர்ந்தைம் புலன்கள் செற்று
மோனிகளாய் முனிச் செல்வர் தனித்திருந்து
தவம் புரியு முதுகுன்றமே (பக் 464)

என விளம்பியருளுவர். இங்கு ஆடல், பாடல், அழுதல், புரளுதல் முதலான உடற்கருவிகளின் செயற்பாடுகள் எல்லாம் கடந்த நிலையினையே நாம் காண்கின்றோம். அகம், புறம் என்ற வேறுபாடின்றி ஞானியர் எப்பொழுதும் சிவன் கழலையே கண்டின்புற்றிருப்பர். எனவே ஞானத்தின் மேற்பட்ட சமயமும் இல்லை, நெறியுமில்லையென்பதை நாம் உணரலாம். மனிதரிற் சிறந்தோரே ஞானம் கைவரப் பெற்றவராவர். எல்லா உயிர்களையும் தன்னுயிர்போற் கருதுவதே ஞான பூசையாம். இந்நிலையில் உயிர் தன்னை ஆட்கொண்ட சிவத்துள் அடங்கிச் சிவமாக நிற்கும். மாயையிலான எல்லாத் தத்துவங்களையும் கடந்து அருள்வெளியிற் சிவனைக் கண்டின்புற்றிருக்கும். இவர்களைப் பீடித்திருந்த மலபந்தமும் சக்திகுன்றி நலத்தை விளைவிப்பனவாம். இதனைத் திருமூலர்,

> ''தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
> முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள்
> பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்
> சென்னியில் வைத்த சிவனருளாலே" என்பர்.

இவ்வாறு ஞானநெறிநின்று சன்மார்க்கமடைவோர் பற்றிய பிற விபரங்களுக்கு திருமந்திரம் ஐந்தாம் தந்திரம் (செய். 1467 - 1487) உபாசனைகள் எனும் பகுதியிற் கண்டுணர்க. மேலும் சிவஞான சித்தியார் சுபக்கம் (செய். 270 275 வரை) சாதனைகள்பற்றிய பகுதியிலும் கண்டுதெளிக.

இவ்வாறு சரியை முதலான நான்கனுள் யாதேனுமொன்றில் ஆயுளுள்ளவும் நிற்கவேண்டுமென்பது சைவ சித்தாந்தக்



கோட்பாடன்று. திருநாவுக்கரசர் ஆரம்ப நிலையிற் சரியைத் தொண்டில் நின்றவராயினும், இறுதிவரை இந்நெறியில் நின்றவரல்ல என்பதனை "ஞானத் தாயுனை நானும் தொழுவனே" என்று கூறிய அவர் கூற்றுக்களே எடுத்தியம்புகின்றன. எனவே ஞானம் கைகூடிய நிலையில் இவரடைந்த முத்தியும் சாயுச்சிய மேயாம். இவ்விதமே சரியையில் நின்றவரான திருஞானசம் பந்தரும் ஞானம் மேலிட்ட நிலையிற் சிவசோதியுட் கலந்தனர் ஆவர். யோகநிலையில் நின்ற சுந்தரரும் ஊன், உயிர் வேறாகப் பெற்று வெள்ளானையிலேறிக் கைலை சென்றடைந்தனர்[14]. மாணிக்கவாசக சுவாமிகளும் ஆரம்ப நிலையிலிருந்தே ஞான நெறியில் நின்றவரெனக் கருதப்படினும், அவரும் இறைவனை சரியை, கிரியை நெறிகளாகிய அகப் புறக் கருவிகளாற் பார்த்தும், ஆர்க்கெடுத்துரைப்பேன், ஆரொடு நோகேன், வார்கடல் உழகில் வாழ்கிலேன் கண்டாய், என்றெல்லாம் புலம்பி, அழுதும், தொழுதும், இறைவன் புகழ்பாடியுமே விரைவாக ஞானநெறியைப் பற்றமுடிந்தது.

எனவே நாம் இதுவரை ஆராய்ந்து காட்டிய தேவாரத் திருமுறைகளில் வழிபாட்டு நெறிகளின் தத்துவங்களை உள்ளவாறு உணர்ந்து நாமும் பின்பற்றி உய்தி பெறுவோமாக. இவ் வழிபாட்டு நெறிகளில் நிற்க நமக்குதவவல்லன தேவார, திருவாசகங்களேயாம். இவ் வழிபாட்டு முறைகுத் தேவாரங்களே துணையெனக் கருதிய மன்னர்களும், மக்களும் பல்லவர் காலம் முதலாகவே (கி.பி.7ம் நூற்றாண்டுமுதல்) கோவில்களிற் தேவாரங்களை உடுக்கை, தாளக் கருவிகளுடன் பண்ணிசைத்து,

உருகி, ஓதி வழிபட்டு வரலாயினர், என்பதனைக் கல்வெட்டுக்கள் மூலமும், பிற்கால வடமொழி ஆகமக் குறிப்புகள் மூலமும் நாம் உணரக் கூடி 'ாதாக இருக்கின்றது [15]. பதி ஞானத்தைச் சிறிது சிறிதாக நம்மில் ஏற்படுத்தவல்ல திருமுறை நூல்களை ஓதியும், நால்வகை நெறியில் நின்றும் பின் பதி ஞானத்தை முழுமையாகத் தரவல்ல திருவைந்தெழுத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டும், நாமும் பிறவிக் கடலை நீந்திக் கடந்து பேரின்பமடைவோமாக.

**விறகில் தீயின் நன்பாலிற் படுநெய்போல்**
**மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்**
**உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே (அப்பர்)**

இவ்வாறு சைவ சித்தாந்த ஆலய விஞ்ஞானத்தில் சங்க இலக்கியங்கள் முதலாகத் தேவாரத் திருமுறைகள்வரை காட்டிய வழிபாட்டு நெறிகள் என்றும் நீடிப்பதாகுக [16]. மக்கள் அவற்றைப் பற்றுக் கோடாகக்கொண்டு உய்தி பெறுவார்களாக. சைவசித்தாந்தம் காட்டுகின்ற யோக, ஞான நெறிகளில் நின்றே நாம் அணு முதல் அண்டம் வரையுள்ள எல்லாத் தத்துவங்களின் இரகசியங்களையும் காணவல்லவர்களாவோம். அணுவிலும், அண்டவெளியிலும் ஆய்வுகளை நடத்திவரும் நவீன விஞ்ஞானம் முழு இரகசியங்களையும் எட்டவல்லதன்று. ஏனெனில் காண்பான், காட்சிப்பொருள், காட்சி ஆகிய மூன்று நெறிகளையும் அது உள்ளடக்குவதாக இல்லை. எனவே சைவசித்தாந்தமே இம்மூன்று நெறிகளையும் துணைக்கொண்டு உண்மையை அறிகின்ற தத்துவமாகும் என்பதனை நாம் காலம் தாழ்த்தாது உணர்ந்து கொள்ள வேண்டும்.



## அடிக்குறிப்புகள் விளக்கம்

1. இதுபற்றி இந் நூலின் முதலாம் இயலில் விரிபாக ஆராயப்பட்டுள்ளது.

2. ச.தண்டபாணி தேசிகர், திருக்குறள் உரைக் களஞ்சியம், அறத்துப்பால் - பாயிரவியல், மதுரை, காமராசர் பல்கலைக் கழகம் பதிப்புத்துறை, 1981 உரையாசிரியர் பலரின் உரைகளை இந்நூலிற் கண்டு தெளிக.

3. தி.மு.நாராயணசாமிப்பிள்ளை, திருவானைக்காக் கோவில், சென்னைப் பல்கலைக் கழகம், 1976 பக் 5-6

4. இக்கட்டுரையில் மேற்கோளாகக்கொண்ட தேவாரங் களிற் சுட்டிக் காட்டப்பெறீற இலக்கங்கள், இராமநாதபிள்ளை, ப.பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு 1008 வது கழக வெளியீடு 1961. எனும் நூலின் பக்கங்களைச் சுட்டுவனவாம்.

5. இக்கட்டுரையில் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ள சிவஞானசித்தியார் நூலின் செய்யுள்கள், மு.திருவிளங்கம் சிவஞானசித்தியார் சுபக்கம், யா.கூ.த.நூ.ப.வி.க. வெளியீடு 1971 லிருந்து காட்டப் பெற்றனவாம்.

6. தனபாக்கியம் குணபாலசிங்கம் "இந்து - பௌத்த அற நியமங்கள் ஒப்புமை", இக்கட்டுரையிற் பௌத்தத்தின் முன்பின் முரணான கருத்துக்கள் ஆராயப்பட்டுள்ளன. இக்கட்டுரை கிழக்கிலங்கைப் பல்கலைக் கழகம், இந்து மாணவர் மன்றம் வெளியிடும் "இந்துநதி" எனும் சஞ்சிகைக்குத் தயாரித்துக் கொடுக்கப்பட்டுள்ளது. சஞ்சிகை இதுவரை வெளிவரவில்லை.

7. நாலடியார் : இந்நூல் தமிழகத்தில் உருவாகிய வரலாற்றின்படி, பஞ்சமடைந்த தம் நாட்டினின்றும் நீங்கி, 8000 சமண முனிவர்கள் மதுரையையடைந்து வாழ்ந்து வருகையிற், பாண்டிய மன்னன் அவர்களைக் கௌரவித்துத் தன் அவையில் வைத்திருந்தனன் என்றும், பின் அவர்கள் தம்நாடு வளமடைந்த பொழுது திரும்பிச்செல்ல விரும்பிய பொழுது, பாண்டிய மன்னன் விரும்பாததால் அவர்கள் ஓரிரவு அவனுக்குத் தெரிவிக்காமலேயே தம்நாடு திரும்பினர் என்றும் தெரிகின்றது. அதனாற் கவலையுற்ற மன்னன் அவர்களுடைய இருக்கைகளைச் சபையிலிருந்து அகற்றிவிடும்படி கட்டளையிட்டான். அப்பொழுது அவ்விருக்கைகளில் எழுதி வைக்கப்பட்டிருந்த வெண்பாக்களின் ஓலைச் சுவடிகளைக் கண்ணுற்ற சேவகர்கள், அதனை மன்னனுக்குத் தெரிவிக்கவே, மன்னன் அவற்றையும், வைகையில் விடும்படி ஏவினான். அவ்வாறு விடப்பட்ட 8000 வெண்பாக்களில் 400 வெள்ளத்தினை எதிர்த்துத் திரும்பிவந்தன. பணியாட்கள் அவற்றினை மன்னன் முன்னிலையில் வைத்து, நிகழ்ந்ததைக் கூறவே, மன்னனும் வியந்து நாலடியார் எனும் பெயரில் அவற்றினைத் தொகுப்பித்தான் என்பது இந்நூலின் வரலாறாகும்.



8. இச்சந்தர்ப்பங்களில் எடுத்தாளப்பட்ட சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரங்களின் விபரங்கள் அருணை வடிவேல் முதலியார், சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்கள், தருமையாதீன வெளியீடு. 555. 1964 விருந்து தரப்பட்டுள்ளன.

9. க.வெள்ளைவாரணன், பன்னிரு திருமுறைத் திரட்டு பகுதி I, அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1962

10. T.B.Siddalingaiah, Origin and Development of Saiva Siddhanta upto 14th Century. Nepolean Press, Madurai 1979 P. 25.

11. ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள். (மதுரை ஆதீனம்) 'விக்ரக வழிபாட்டின் விளக்கமும் கும்பாபிஷேகமும்' திருக்கோணேசர் ஆலய கும்பாபிஷேக மலர் 1963 - இக்கட்டுரையில் மண்ணிற் பரந்திருக்கும் ஐம்பூதங்களினியல்புகளை ஆலய விஞ்ஞானத்துடன் தொடர்பு காட்டி விளக்கப்பட்டுள்ளது.

12. மாணிக்கவாசக சுவாமிகள் ஆகம வழிபாட்டில் ஈடுபட்டிருந்தவராயினும், தமிழகத்தில் மறையவர்கள் சிவனை வேதமோதி வழிபட்டுவந்த நிலைகளையும் குறித்துள்ளனர். இவரும் இறைவனை வேத வடிவினன் எனவும், வேதங்களை யுரைத்தனன் என்றும் குறிப்பிட்டருளுவர்.

**........................"மிக்க வேத மெய்ந்நூல்**
**சொன்னவனே" (நீத்தல் விண்ணப்பம் 170)**
**"அயநான் மறையவனு நீயே ஆதல்"**
**(திருச்சதகம் 89)**
**"வேதநான்கும் ஓலமிட்டுணாங்கு நின்னை"**
**(திருச்சதகம் 297)**
**"வேதங்கடொழுதேத்தும்**
**விளங்கு தில்லை கண்டேன்"**
**(கண்டபத்து 40)**

13. சேக்கிழார் பெரியபுராணம் செய்யுட்கள் : 2359, 2900, 1437, 1492, 3249 லும் தேவாரவாசிரியர்கள் வழிபாட்டு முறைகளின் விபரங்களைக் காண்க.

14. கு.நடேசகவுண்டர், அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறானாய்வும், சைவ சித்தாந்தக் கழகம் 1970 பக் 94-98; மேலும் பார்க்கவும் சொ.சிங்காரவேலன், திருஞானசம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும், தேவாரத் திறனாய்வும், சைவ சித்தாந்த வெளியீடு 1969; வ.சு.செங்கல்வராயப் பிள்ளை, ஒளிநெறியும், ஒளி நெறிக் கட்டுரையும், சைவ சித்தாந்தக் கழகம் 1969.



15. மா.இராசமாணிக்கனார், பெரியபுராண ஆராய்ச்சி, சென்னை 1960 பக் 138 - 139.

16. ராதா தியாகராஜன், சிவநெறியும் சிவத்தொண்டரும், வானதி பதிப்பகம், சென்னை 1986.

## இக்கட்டுரையிற் குறிப்பிட்ட அரும்பத விளக்கங்கள்:

1. ஆலய விஞ்ஞானம் : உயிர் இறைவனிடத்தில் ஒடுங்குதல் பற்றிய விசேட அறிவு. இதனைச் சைவ சித்தாந்திகள் இருவகையாக வகுத்துக் காட்டுவர்.

(அ) சரியை, கிரியை நெறிநின்று இறைவனை அகப்புறக் கருவிகளாற் திருக்கோவில்களில் எழுந்தருளுகின்ற திருவருட் திருமேனி களிடத்து உயிரை ஒடுங்கவைக்கும் முதல் நிலை.

(ஆ) யோக, ஞான நெறி நின்று இறைவனை வழி படுகின்றவர்கள், தத்தம் உடம்பிற்குள்ளே உறைகின்ற இறைவனை, தத்தம் உடல்களாகிய திருக்கோவில்களுக்குள்ளேயே கண்டு களித்துச் சமாதி கூடியிருத்தல் இரண்டாவது நிலை.

2. ஆகமங்கள் : இறைவனிடத்திருந்து வந்த நூல்கள் அல்லது இறைவனால் அருளப்பட்ட நூல்கள். இவற்றைத் தந்திரங்கள் எனவும் அழைப்பர். சிங்கள மொழியில் ஆகமம் எனிற் 'சமயம்' எனப் பொருள்கொள்வர்.

3. அட்டாங்கயோகம் : யோகநெறி நின்று இறைவனைத் தியானிப்போர், இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியாணம், சமாதி முதலான வழிகளிற் சமாதி கூடி இன்புறுவர்.

4. இமயம் : மனம் அலைந்து திரியக்கூடிய பாவ விடயங்களில் மனதை விடாது தடுத்தல்.

5. நியமம் : உயிரின் தூய்மைக்கு ஊறு விளைவிக்கும் விடயங்களை நீக்கித், தவம், ஈசுவர பூசை, விரதம், செபம், தானம், இறைபக்தி முதலானவற்றை உறுதியாகப் பற்றிக் கொள்ளல்.

6. ஆசனம் : இறையை உடற்கோவிலிற் கண்டுகளிக்கத் தியானத்தில் ஈடுபடும்பொழுது உடற் துன்ப மில்லாது யோகாசனமொன்றில் இருத்தல்.

7. பிராணாயாமம் : அங்குமிங்குமாக உலக விடயங்களிற் சுழன்று திரிகின்ற மனத்தை ஒருமுகப்படுத்தி இதயத்தில் நிறுத்தி வைப்பதற்காக உட்சுவாசம் (பூரகம்), வெளிச்சுவாசம் (இரேசகம்) ஆகிய பிராணவாயுக்களை அடக்கி நிறுத்துதல்.



8. பிரத்தியாகாரம் : மனத்தை இந்திரிய விடயங்களிற் செல்லவிடாது, இந்திரியங்களை மனத்தோடு உள்ளே பொருத்தி வைத்திருத்தல்.

9. தாரணை : இறைவனைத் தியானிக்க மனத்தை நிலை நிறுத்துமுகமாக அகத்தே ஒருமுகப்படுத்தி வைத்திருத்தல்.

10. தியானம் : இறைவன் வடிவை அகத்தே தியானித்து நாடிநிற்றல்

11. சமாதி : இறைவனிடத்து மனத்தை அழுந்தச்செய்து, அவன் சோதியிற் கலந்து பேரின்பமுற்றிருத்தல். இவ்வாறு இறைவன் ஞான ஒளியாக நின்றருளுகையில், உயிரின் அறியாமை நீங்க உயிர் எல்லாப் புவனங்களிலுமுள்ள அனைத்துத் தத்துவங்களையும் நன்குணரும்.

12. குண்டலினி யோகம் : உயிரானது உடம்பிலுள்ள ஆறு ஆதாரங்களான மூலாதாரம் (குதத்திற்கும் குறிக்குமிடையிலுள்ள பகுதி) சுவாதிட்டானம் (மூலாதாரத்திற்கு மேலுள்ள பகுதி), மணி பூரகம் (பொக்குள் - நாபி), அநாகதம் (இருதயம்), விசுத்தி (கண்டம்) அஞ்ஞை(புருவம்), (சி.சி.செய். 273,

மு.திருவிளங்கம் உரையிற் கண்டு தெளிக) முதலான ஆதாரங்களிலும் ஆங்காங்கே வெவ்வேறு மூர்த்தங்களாகத் தோற்றும் சிவனைத் தியானித்துப் பின் புருவத்திற்கு மேலேயுள்ள சந்திர மண்டலத்தி லுள்ள 16 இதழ்களையுடைய பிரமந்திர தாமரைக்கு மேலுள்ள 1008 இதழ்களையுடைய தாமரை விளங்கும் பராபரவெளியிற் குண்டலினி சத்தியுடன் சென்று பொருந்திச் சமாதியிருத்தல்.

13. ஞானநெறி : காண்பான் (உயிர்), காட்சிப்பொருள் (இறைவன்), காட்சி (அறிவாகிய அத்திருவருள்), என்று பிரித்தறிதலின்றி இறைவனுடன் அழுந்தியிருத்தல். இந்நிட்டை கைவரப் பெற்றோரே சிவசாயுச்சயமாகிய பரமுத்தியையடைவர்.

14. தயாமூலதன்மம் : உயிரின் உள்ளத்திலே பூக்கின்ற எட்டுவிதப் பக்திமலர்கள். (பக்.240 பார்க்கவும்)

குறிப்பு : கொழும்புத் தமிழ்ச் சங்கத்திற்குத் "தேவாரத் திருமுறைகள் காட்டும் வழிபாடுகள்" எனும் தலைப்பிற் தயாரித்து அனுப்பப்பட்ட கட்டுரையை, ஆலய விஞ்ஞான தத்துவத்தை மேலும் விளக்கு முகமாக வேறு பல விளக்கங்களும் இந்நூலில் இடம்பெறச் செய்யப்பட்டுள்ளது.





# பிற்சேர்க்கை

## ஈழத்துச் சைவசித்தாந்த வரலாற்றறிமுகம் :

ஆகமாந்தமான சைவ சித்தாந்த நெறிச் சிவ வழிபாட்டை யுடைய தமிழ் மக்கள் தென்னிலங்கையிற் தெய்வாந்துறையிற் சந்திரசேகரன் (நகரீசர்) கோவிலையண்டிய பகுதிகளில் மட்டுமன்றித், தென்னிலங்கையின் வேறு பகுதிகளிலும் வாழ்ந்து இருந்தனர் என்பதனைச் சிங்களக் கவிஞர்களியற்றிய தூதுப் பிரபந்தங்கள் சிலவும் விபரித்துள்ளன. இவற்றுள் ஸ்ரீ இராகுல தேவரியற்றிய செலலிஹினி தூதுக்காவியத்திற், தாம் தூதனுப்பும் பூவையிடம் கோட்டை இராசதானியிலுள்ள சிவன் கோவிலில் ஓய்வெடுத்துச் செல்லும்படி அவர் கூறுகையில், அக்கோவிலிற் தமிழிற் தேவார, திருவாசகங்களைப் பக்தர்கள் ஓதும் செய்தியினைப் பின்வருமாறு குறிப்பிடுவர்.

**''அகிற்புகை கருப்பூரத்தினளாவிய புகையினோடு**
**துகிற்கொடி நிரைகள் தூங்கத்**
**துவன்றிடு முரசுஞ்சங்கும்**
**முகிற்குலமென்ன வேங்க முதிர் மணியிரட்ட வன்பு**
**முகிழ்ந்திடத் தமிழ்ப் பாவோடு**
**முக்கணன் கோயில் சேர்வாய்''**

*(மொழி பெயர்ப்பு, பூவைவிடுதூது, சோ.நடராசா 1963)*

*மேலும் பார்க்கவும் கலாநிதி சி.க.சிற்றம்பலம், ஈழமும் இந்து மதமும், சிந்தனை, யாழ்ப்பாணப் பல்கலைக் கழக கலைப்பீடம் 1984 பக். 129 - 173)*

மேலும் இச்சிவன் கோவிற் காலைப் பூசையில் ஒலித்த இன்னியங்களான மங்கள பஞ்சதூரியங்கள் பற்றியும், உதய காலப் பூசையின் சிறப்பியல்புகள் பற்றியும் ஆசிரியர் தருகின்ற வரலாற்றுக் குறிப்புகளிலிருந்து, இக்கோவிலிற் சிவபக்தர்கள் சரியை, கிரியை வழிபாடுகளை மேற்கொண்டு, பக்தி பரவசப் பட்டுப் பாடியும், அழுதும், ஆடியும் தேவார திருவாசகங்களைக் கண்ணீர்மல்க இசைத்தும் நின்றனர் என்பதனை, நாமும் மனக் கண்முன் நிறுத்திப் பார்க்க முடிகின்றது.

இதேபோன்று சரியை, கிரியை வழிபாடுகளைக் கதிர் காமக் கந்தன் கோவிலிலும் தமிழ் மக்கள் நிகழ்த்தியிருந்தனர் என்பதனைக் கி.பி. 15ம் நூற்றாண்டளவிற் சமனரதேரரால் எழுதிய கஹுகுருலு சந்தேச (மஞ்சட் குருவித் தூதுக் காவியம்) காவியம் குறிப்பிடும். இந்நூலாசிரியர் ''கோயிலுக்கருகாமையிற் பரமசிவனை இடையறாது வழிபட்டுத் தமிழிற் தோத்திரங்களை



இசைக்கும் சாதுக்கள் தங்குகின்ற மடமிருக்கிறது'' என்று குறிப்பிடுவதிலிருந்து நாம் இதனை உணர்ந்துகொள்ளலாம். அதனோடு இக் கோவிலின் தீர்த்தோற்சவ விழாவில் வள்ளியம்மை சமேதராய் முருகக் கடவுளின் திருமேனியை வீதி வலமாக எடுத்துச் செல்வரென்பதனாலும், கதிர்காமக் கோவிலின் தீர்த்தோற்சவ விழாவின் பழைய மரபுகளையும், அவை தலைமுறை தலைமுறையாகப் புதிய சந்ததியினருக்கு வழங்குகின்ற சமுதாய மரபுகள் தங்குதடையின்றி ஓடிக்கொண்டிருக்கின்றன என்பதனையும், இச்செய்திகள் எமக்கு உணர்த்துகின்றன எனலாம். (பார்க்கவும், மணி, கஹுகுருலு சந்தேஸம், ஸ்ரீலங்கா 1953, ஏப்ரல் - மே பக். 58 - 62).

சிங்கள இலக்கியங்களிலிருந்து மட்டுமல்லாமற், சிங்கள மன்னர் சிலரின் கல்வெட்டுக்களிலிருந்தும் சிவன் கோவில்களில் நடைபெற்றுவந்த பூசை, வழிபாட்டுமுறைகள் பற்றியும், அவற்றின் நிர்வாகம்பற்றியும் நாம் அறியக்கூடியதாக இருக்கின்றது. இவற்றுக்கு எடுத்துக்காட்டாக, சிலாபத்திலுள்ள முனீவசுரம் கோவிலின் பிற்கால வரலாறுகளின்படி கோட்டையரசன் பராக்கிரமபாகு VI (கி.பி.1410 - 1468) இக்கோவிலுக்கு வழங்கிய மானியம்பற்றிய தமிழ் - வடமொழி கலந்த கல்வெட்டினை நாம் எடுத்துக் கொள்ளலாம். இக்கல்வெட்டு இவ்வாலயப் பூசை ஒழுங்கு விதிகளையும், கோயிற் குருமாருக்கு வழங்கிய நன்கொடைகளையும் குறிப்பிடுவதாகக் காணப்படுகின்றது. இதுபோன்ற பல கல்வெட்டுத் தகவல்கள் எம்மைப் பழைய காலத்திற்கே இழுத்துச்செல்லும் வல்லமையுடையனவாக உள்ளன எனில் மிகையாகாது.

இவ்வாறு பரவலாகத் தென்னிலங்கையிற் கிடைக்கின்ற வரலாற்றாதாரங்கள்மூலம் நாம் ஈழத்தில் ஆகமாந்த வழிபாட்டுப் பூசைகளின் சிறப்பியல்புகளை தென்னிலங்கைச் சிவாலயங் களிலும், கண்டுகளிக்க முடிகின்றது. உண்மையென்னவெனில், ஈழத்துச் சைவர்கள் நெற்றியில் நீறணிந்து இலிங்க வழிபாடுசெய்த இராவணன் காலம் முதலாகச் (கி.மு.1000), சிவலிங்க வழிபாட்டை யுடைய சிவபக்தர்களாகச் சரியை, கிரியை வழிபாடுகளில் நின்றிருந்தனர். இராவணனைச் "சைவமே தழைத்து ஓங்க" ஆட்சி புரிந்தனன் என மட்டக்களப்பு மான்மியம் குறிப்பிடுவதனால் இது உணர்த்தப்பட்டது. மேலும் இராமாயணம், பழைய கல்வெட்டுக்கள், தொலமியின் குறிப்புகள், மகாவம்சம், வாயு புராணம், பிற்காலத் தேவார திருவாசகங்கள் முதலானவற்றிற் பரவலாகக் கிடைக்கின்ற குறிப்புகள் ஆதாரபூர்வமான சான்றுகளைத் தந்து ஈழத்துச் சைவ சித்தாந்த வரலாற்றின் தொடக்க நிலைகளையும், வளர்ச்சிகளையும் அரண்செய்து நிற்கின்றன எனிற் தவறாகாது.

## யாழ்ப்பாணத்து மன்னன் பரராசசேகரன் சிதம்பரமட அறக்கட்டளை :

இப்பட்டயம் பரராசசேகர மன்னன் (16ம் நூற்றாண்டு முற்பகுதி) சிதம்பர தரிசனஞ்செய்து, அங்கு அவன் நிறுவிய அறநிலையம்பற்றிக் குறிப்பிடும். இன்றும் அம்மடம் பரராசசேகர மன்னன் பெயரிலே இயங்கிவருவதாற் பட்டயச் செய்திகள் ஆதாரபூர்வமானவையாம். இதனையே யாழ்ப்பாண வைபவ மாலையும் "பரராசசேகரன் வடதேசம் சென்றான்" எனக் கூறும்.



இப் பரராசசேகரன் சங்கிலிக்கு முன் ஆண்டவன் எனப் பேராசிரியர் சி.பத்மநாதன் குறிப்பிடுவர். (வன்னியர், பேராதனை, 1970) கலாநிதி க.செ.நடராசா, வையா பாடலைத் துணையாகக் கொண்டு, செகராசசேகரன் யாழ்ப்பாணத்திலிருந்து ஆள்கையில், அவன் இளவல் பரராசசேகரன் முள்ளிவளையாமூரில் ஆட்சியாளனாக இருந்தானென்றும், இவர்களுடைய சகோதரனே சங்கிலி மன்னனென்றும், பின் சங்கிலி கி.பி. 1519ல் யாழ்ப்பாண அரசனானான் என்றும் கூறுவர். (ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சி) மேலும், இப்பட்டயம் தரும் விபரங்களின்படி அச்சுவேலி, புத்தூர், அளவெட்டி முதலான ஈழத்து ஊர்கள் சிதம்பரம் பரராசசேகரன் மடத்திற்கு மானியமாக விடப்பட்டு இருந்தன. ஈழத்து மன்னர்களின் சைவ சமயப் பற்றும், திருப்பணிகளும் அளவற்றன என்பதனை இப்பட்டயங்கள் மூலம் நாம் உணரலாம்.

## கயிலை வன்னியனார் மடதர்ம சாதனப்பட்டயம் :

இப்பட்டயத்தின்படி கி.பி. 1742ல் யாழ்ப்பாணத்து வன்னியர்கள் (அடங்காப்பற்றில் 1.பனங்காமம், 2. விளாங்குளம் - பரந்தன் வெளி, 3. முள்ளியவளை - கரிகட்டுமூலை, 4. கருநாவல் பற்று, 5. தென்னமரவடி) பரராசசேகரன் கட்டளையை நடாத்தும் சூரியதம்பிரானிடம் தம் நிவந்தங்களை ஒப்படைத்தனர் என்பதனால், யாழ்ப்பாண அரச பரம்பரைக் குல மரபுகள் அழிந்தொழிந்த பின்னரும், பிற்கால வன்னியரசர்கள் சிதம்பரத்தில் பரராச சேகரன் அமைத்த மடதருமங்களை

அழியவிடாது செவ்வனே நடைபெறச் செய்தனர் என்பது தெளிவு. இப்பட்டயத்தில் "தங்கயிலைப் பிள்ளை வன்னியனார் மடதர்மத்திற்கு" என்ற குறிப்பினால், ஏற்கனவே கயிலாய வன்னியன் என்ற மன்னனும் இம்மடத்திற்கு நிவந்தங்களை விட்டிருந்தார் என்பர் பேராசிரியர் பத்மநாதன்.

## கைலாயமாலை :

யாழ்ப்பாணத்து நல்லூரில் கூழங்கை சிங்கை ஆரியனால் (கி.பி. 12ம் நூற்றாண்டு) கட்டப்பெற்றுப் பின், கி.பி.1620ல் போர்த்துக்கேயரால் முற்றாக அழிக்கப்பட்ட கைலாயநாதர் கோவில் வரலாற்றைக் கூறும் நூல் கைலாய மாலையாகும். இந்நூலிலிருந்தும் யாழ்ப்பாணத்து மன்னரின் உறுதியான சைவப் பற்றினை நாம் உணர்ந்துகொள்ளலாம்.

## வெருகல் சித்திர வேலாயுதர் காதல் :

இந்நூல் திருகோணமலைக்குத் தென்திசையிலமைந்த வெருகற் சித்திரவேலாயுத சுவாமிமீது, தம்பலகாமத்து வேளாண் மரபினனான வீரக்கோன் முதலியாற் பாடப்பெற்றது. இந்நூலின் உலாக் கண்ணிகளிற் புகழப்படும் இராஜசிங்கனைச் சோழகுலத் தோன்றலாகிய பராக்கிரமபாகு IVன் பரம்பரையில் வந்த முதலாம் இராஜசிங்கனே (கி.பி.1581 - 1593) எனக் க.செ. நடராசா அடையாளம் காண்பர். இவன் பௌத்த மதத்தைப் புறக்கணித்துச் சைவ சமயத்தை ஆதரித்தவன் என்பதனைச் செவுல்சந்தேஸ (சேவல் விடு தூது) எடுத்துக் கூறும்.



## திருக்கரசைப் புராணம் :

இந்நூல் திருகோணமலைப் பகுதிக்கணித்தாக ஓடுகின்ற மகாவலிக் கரையில் எழுந்தருளியிருக்கும் ஈசன் புகழை ஓதுவதாகும். இதனை யாத்தோன் தன்னை 'ஈசானைச் சிவனைக் குருவாகக் கொண்டவரென்றும், கொற்றங் குடிவாழ் பிரானின் சரணத்துறுதியானவரென்றும்' குறிப்பிடுவதனால் இவர் உமாபதி சிவாசாரியாரைக் குருவாகக்கொண்டவர் எனத் தெரிகின்றது. இதனை,

**அண்டர்பிரா னடமாடுந் தில்லைமணி**
**மன்றநதனி லகலா தென்றும்**
**விண்டசிவ சித்தாந்த வேதாந்தப்**
**பொருள் விளக்கும் விளக்க மாகித்**
**தொண்டறியா நாயேனுக் கருள்புரிந்து**
**கிளை முழுதுந் தொழும்பு கொண்ட**
**எண்டகுசீ ரீசானச் சிவன்மலர்தாண்**
**மறவாதென் னிதயந் தானே**

எனும் குருவணக்கப் பாடலிற் கண்டு தெளியலாம்.

## மட்டக்களப்பு மான்மியம் :

இந்நூல் கிழக்கிலங்கையை ஆண்ட இராவணன் சைவன் என்பதனை

**"ஓங்கு நாளரக்காரன ராவண உருத்திரன்றன்**
**பாங்கு வெண்கிரியைத் தூக்கிப்**
**பரமனால் வரத்தைப்பெற்று"** (செய் 2)

என்றும்,

"தானவன் செங்கோலோச்சச்
சைவமே தழைத்து ஓங்க" (செய் 3)

என்றும் கூறுவதோடு, திருக்கோணேசுவரம், மாமாங்கேசுவரம், உகந்தகிரி முதலான சைவக் கோவில்களையும் இராவணன் காலத்தனவாகவே விபரிக்கும். மேலும் இக்கோவில்களின் வளர்ச்சி நிலைகளில் மன்னர்கள் ஆற்றிய திருப்பணிகளையும் ஆங்காங்கே குறிப்பிட்டுச் செல்கின்றது. சைவமதத்தை அதிகமாகப் போற்றும் இந்நூல், மகாசேனனைக் கூட வைதூலிய சைவனென்றும், பௌத்த விகாரைகளை இடிப்பித்துச் சைவக் கோவில்களைக் கட்டினான் என்றும் கூறுவது மகாவம்சக் குறிப்புகளுக்கு முரணானது. மற்று, க.குணராசா (நல்லை நகர் நூல் 1987 பக். 13) கி.பி.948ல் புவனேகபாகு சோழரின் அரசப் பிரதிநிதியாக இருந்து நல்லூரில் (இன்றைய குருக்கள் வளவு) முதலாவது கந்தவேள் ஆலயத்தைக் கட்டுவித்தான் எனக் கருதுவர். இக்கருத்தினைச் சீர்தூக்கி ஆராயும்வகையில் மட்டக்களப்பு மான்மியம் (பக் 24-25) புவனேயகயவாகு எனும் கலிங்க குமாரன் திருச்சோழன் மகள் தம்பதிநல்லாளை மணம் முடித்துப் புத்திரபாக்கியம் வேண்டி இராமேசுவரரையும், திருக்கேதீசுவரரையும் தரிசனை செய்துகொண்டு, கோணேசுவரரைத் தரிசனைசெய்து நிற்கையில், மணிபுரத்தை (யாழ்ப்பாணம்) அரசுபுரியும் நாகர்குலச் சிற்றரசனுடைய மந்திரி கொட்டாயனென்பவன் "என் உத்தரவின்றி நீ வரக்கூடாது" என்று கூறியபொழுது புவனேயகயவாகு அவனுடன் போர்தொடுத்து வென்று, பின் மட்டக்களப்பில் நாகர்முனையில் (திருக்கோவிலில்)



பண்டைய சுப்பிரமணியர் ஆலயம் பாழடைந்திருப்பதால், சோழநாட்டுச் சிற்பிகளைத் தருவித்து ஆலயத்தைச் செப்பனிட்டு அந்தணர் சொற்படி அபிடேகம்செய்து திருக்கோயிலெனப் பெயரிட்டனர் என்பதனால், இவனே நல்லூரிலும் கந்தவேளுக்குக் கோவிலொன்றை எழுப்பியிருக்கலாமா என்பது சீர்தூக்கி ஆராயத்தக்கது. மேலும், இவன் மகன் மனுநேயகயவாகும் (மேகவர்ணன்) தொடர்ந்து திருக்கோவிலிற் திருப்பணி வேலைகளை சோழ நாட்டுச் சிற்பிகளைத் தருவித்து நிறைவேற்றி, ஆறுகாலப் பூசைளுக்கு மானியங்களை வழங்கினான் என்பதனால், கிழக்கு மாகாணத்திற் சைவ சமய, தத்துவ வளர்ச்சிக் கிரமங்களை நாம் வரலாற்றடிப்படையிலும் உணர்ந்துகொள்ளக் கூடியதாக இருக்கிறது எனலாம்.

## நல்லைக் குருமணியும், நல்லை ஆதீனமும் :

நல்லைக் குருமணியின் தந்தையார் பிரம்மஸ்ரீ செல்லையாக் குருக்கள், அன்னையார் கனகாம்பிகை அம்மையார், பிள்ளைத்திருநாமம் சிவசுப்பிரமணியம். பிறந்த திருநாள் 17ம் நாள் மாசி மாதம் 1918. பிறப்பிடம் வண்ணைச் சிவன் கோயில் வடக்குவீதி, இவரின் பேரனார் பிரம்மஸ்ரீ கணேசையரிடம் சமய நூல்களைக் கற்றுணர்ந்தவர். சிறுவயதிலிருந்தே இயல்பான சங்கீத ஞானமுடையவராக விளங்கினார். அதனோடு பிரசங்கம் ஆற்றும் வகைமுறைகளையும் கற்றிருந்தார். இவரது முதற் பிரசங்கம் வண்ணை வைத்தீசுவரன் கோவிலில் ஆரம்பமானது. பின் ஜிந்துப்பிட்டி ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி கோவிலில், இவர் சங்கீத கதாப் பிரசங்கங்கள் நிகழ்த்தியபோது, அவருக்கு பிரம்மஸ்ரீ

மணிபாகவதர் என்ற புகழாரம் சூட்டப்பெற்றது. தமிழகத்திலும் இவர் பிரசங்கங்களை நிகழ்த்தியிருந்தார்.

தமிழமெங்கும் "யாழ்ப்பாண சுவாமிகள்" என்றறியப்பட்டிருந்த இவர், இல்லறத்திலிருந்து துறவறத்தை நாடி நின்றார். இதனையுர்ந்த மதுரை ஆதீனக் குருமஹாசந்நிதானம், இவருக்கு 1966ம் அண்டு காவியுடையணிவித்து ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத தேசிக ஞானசம்பந்த பரமாசாரியார் என்ற தீட்சை நாமத்தைச் சூட்டித் துறவி நிலைக்குள்ளாக்கினர் அவ்வாண்டிலே யாழ்ப் பாணத்திற்குத் திரும்பிவந்து, திருமதி பாக்கியம் எனும் சைவப் பெருமாட்டியின் பேருதவியோடு, அவ்வம்மையாரின் நல்லூரிலுள்ள கோவில் வீதி இல்லத்தில், நல்லைத் திருஞான சம்பந்தர் ஆதீனத்தை நிறுவினார். இவ்வாதீனம் தொடக்கத்தில் மாணவ, மாணவிகளுக்கும், தொண்டர்களுக்கும், பண்ணிசையுடன் தேவாரத் திருமுறைகளை ஓதி இறை வழிபடும் முறைகளைக் கற்பித்தார். பின்னர் 1672ல் புத்தூர் மழுவராயர் திருப்பணிச்சபை வழங்கிய பருத்தித்துறை வீதியில் அமைந்திருந்த மடத்திற்கு, இவ்வாதீனம் மாற்றப்பட்டு இயங்கி வருகின்றது. நல்லை ஆதீன முதல்வர் 10ம் நாள் சித்திரை மாதம் வெள்ளிக் கிழமை 1981ம் ஆண்டு, திருவாதிரை நட்சத்திர சுக்கிலபட்சம் வளர்பிறையில் உத்தராயன புண்ணிய காலத்தில் இறையடி சேர்ந்தார்.

இப்போதைய ஆதின முதல்வர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக ஞானசம்பந்த பரமாசார்ய சுவாமிகள் ஆவர். இவரை ஸ்தாபகரான ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத தேசிக சுவாமிகளே தாம் சிவபரிபூரணத்துவ



மடையமுன்னர் ஆசீர்வதித்தும் தம் பணியைத் தொடரும் வண்ணம் வேண்டிக் கொண்டனர். அதன்பிரகாரம் 1981ம் ஆண்டு சித்திரைத் திங்களில் இளவரசு ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளுக்குப் பீடாரோஹணை விழா எடுக்கப்பெற்று, ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் என்ற தீட்சை நாமம் சூட்டப்பெற்றது. அன்றுமுதல் ஆதீன முதல்வராகப் பொறுப்பேற்று அருளாட்சி புரிந்து, குருநாதரின் உபதேசங்களைச் சிரமேற்கொண்டு, அவர்வழிநின்று, இருபது அம்சத்திட்டத்தையும், யோகாசன வகுப்புக்களையும், திருமுறைப்பண்ணிசை வகுப்புக்களையும், சைவ சித்தாந்த வகுப்புக்களையும், புராணபடனம், பாலபண்டித வகுப்புக்கள், திருமுறைமுற்றோதல், விசேட பூசைகள், குரு பூசைகள், சம்பந்தர் விழா, சிவராத்திரி, நவராத்திரி, திருவெம்பாவை முதலான சமய விழாக்களையும் குறைவற நடைபெறச்செய்து வருகின்றார். இவ்வாதீனம் 'ஒரு ஆலோசனைச் சபையையும் கொண்டு விளங்குகின்றது. சைவத்திற்கும் நற்றமிழுக்கும் அவராற்றிவரும் பணிகளைச் சைவ மக்கள் யாவரும் அறிவர்.

(இவ்வாதீன விபரங்களைத் தந்துதவிய ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக ஞானசம்பந்த பரமாசார்ய சுவாமிகளுக்கு நன்றிகள்.)



## இந்நூலைப் பற்றி எனது அபிப்பிராயம்

நூல் : சைவசித்தாந்தமும் விஞ்ஞான உலகமும்

ஆக்கியோன் : தனபாக்கியம் - குணபால சிங்கம் எம்.ஏ.

*சைவமெனும் கடல் மூழ்கிச் சமயமுன்னோர்*
*சேர்த்து வைத்த முத்துகளாம் அறிவு நூல்கள்*
*கைவரவே அணியணியாய் அழகு சேர்த்துக்*
*கற்றவரும் மற்றோரும் களிப்போடேற்கப்*
*பையரவப் பணிபூண்டோன் பாரில்மேவும்*
*பலவகையாம் தன்மைகளைப் பாடல் மூலம்*
*தைவரல் செய் தெமக்களித்த தகைமைமேவும்*
*தனபாக்கியத் தாயின்றாடலைமேல் வைப்போம்.*

இந்நூல் மூலம் ஆசிரியர் சைவசமயத்தை அக்குவேறு ஆணி வேறாகப் பிரித்து விளக்கியிருக்கிறார் அநேக சித்தர்களி பாடல்கள், தேவார திருவாசகங்கள், புராணங்கள், சித்தாந் அட்டகம், சிவஞானபோதம் முதலிய நூல்களிலிருந்து பாடல்க மூலம் பதி, பசு, பாசமென்னும் முப்பொருள் விளக்கங்களை தந்துள்ளார்.

இந்த முப்பொருள் விளக்கங்களுக்குரிய, விஞ்ஞானக் கருவூல களையும் அவற்றை ஆராய்ந்த விஞ்ஞானிகளின் அபிப்பிராய களையும் தெளிவாக விளக்கியுள்ளார்.

சைவ சமயத்தையிட்டு ஆராய முனைபவர்கள் வடமொ அறிவின்றியே தமிழ் மொழி மூலம் ஆராய்ச்சி நடத்த ஓர் ஆதா கை நூலாக இதை உபயோகிக்கலாம்.

எழுத்துப் பிழைகள் உண்டு. மறுபதிப்பில் திருத்தி வெளியிட நலம்.

*சிவ.விவேகானந்த முதலியார்*

1992 மட்டக்களப்பு.

## சைவசித்தாந்த தத்துவத்திற் பிரபஞ்ச விரிவும், ஒடுக்கமும்

இறை — உயிர்கள் — தளைகள்

தளைகள்: மாயை — கன்மம் — ஆணவம்

மாயை

(இதுவே பிரபஞ்ச விரிவிற்கும், ஒடுக்கத்திற்கும் மூல காரணமான பொருள். இதனை விரித்தொடுக்குகையில் மலகன் மங்களோடு விரவாத பகுதி சுத்தமாயை எனவும், மலகன் மங்களோடு விரவிய பகுதி அசுத்தமாயை எனவும் பெயர்பெறும்)

### சுத்தமாயை

(இது மாமாயை, குடிலை, குண்டலி, விந்து எனவும் அழைக்கப்படும்)

இதனை விரிக்கையில் விரிகின்ற தத்துவங்களும், அதனைத் தொழிற்படுத்துகின்ற சிவனின் திருவருட் சக்திகளும்.

### சிவதத்துவம் - கர்த்தா திருவருட்சக்திகள்

| | | | |
|---|---|---|---|
| 36 | (அ) | நாதம் | (சிவம்) |
| 35 | (ஆ) | விந்து | (சக்தி) |
| 34 | (இ) | சாதாக்கியம் | (சதாசிவம்) |
| 33 | (ஈ) | மகேசுவரம் | (மகேசுவரர்) |
| 32 | (உ) | சுத்தவித்தை | (சுத்தவித்தை) |

(இறைவனின் திருவருள் உயிர்களின் பொருட்டு ஐந்தொழில்களைச் செய்கையிற், திருவருள்தானே இத்தத்து வங்களையதிட்டித்தலின், இவை இறைவனுக்குச் சுதந்திர வடிவங்களாம். ஞானவடிவாகிய சிவம் மலகன்மங்களோடு விரவாத இச்சிவதத்துவங்களைத், தன் திருவருட்சக்திகளினாற் தொழிற்படுத்துவர். இவ்வுபசாரத் திருமேனிகள்யாவும், அருட் சக்தியிடமேயன்றி, முதல்வனிடம் தோன்றமாட்டா. சிவன் இத்தத்துவங்களைத் தொழிற்படுத்துவதனால் இலயம், போகம், அதிகாரமென, மூன்றாயடங்கும் ஐந்தவத்தைப் படுவன். சிவன் ஞானசக்தியைப் பொருந்தி நிற்கின்ற அருவத்திருமேனி நிலையில் இலயசிவன் எனப்படுவர். சிவன் ஞானசக்தியையும், கிரியா சக்தியையும் பொருந்தி அருவுருவத்திருமேனியடையும் நிலை

### அசுத்தமாயை 31

(இது அதோமாயை, மாயை, மோகினியெனவும் அழைக்கப்படும்.) மலகன்மங்களோடு விரவுகின்ற அசுத்தமாயையை அநந்ததேவர் தொழிற் படுத்துகையிற் தனு, கரண, புவன, போகங்கள் விரிகின்றன. (சி.சித்தியார் செய், 144. "மாயையிற் கால், சிவப். செய்.26. "அருத்திமிகுங் கலை")

30 காலம் — 29 நியதி — 28 கலை

28 கலை
27 வித்தை
26 அராகம்
25 புருடன்
(உயிர்த்தத்துவம்)

இவ்வாறு மேற்குறிப்பிட்ட சிவதத்துவங்கள் ஐந்து, கலை முதலான வித்தியாதத்துவங்கள் ஏழும் விரிவதனால் இச்சா, ஞானக் கிரியைகள் விளங்கப் பெற்ற உயிர் போகங்களை அறியத்தக்க வல்லமை பெறும் நிலையில் உயிர்த்தத்துவம் எனப் பெயர்பெறும். (சி.சி.செய். "விச்சையினராகந்"). மேற்கூறிய கலையிற் ஸ்ரீகண்டருத்திரர் அதிட்டிப் பதனாற் தோன்றிய மூலப்பகுதி (பிரகிருதி) வெளிப் படாத குணவடிவாகி நின்று உயிர்களையும், தத்துவங் களையும் கலந்து நிற்கும். (சி.சி. 147 "வருங்குண வடிவாய்")

குணதத்துவம் 24
(இதிலிருந்தே புத்தி முதல் பூமியீறாகிய உயிர்த்தத்துவங்கள் இருபத்து நான்கும் விரிவனவாம்)

33 (ஈ) மகேசுவரம் | (மகேசுவரர்)
32 (உ) சுத்தவித்தை | (சுத்தவித்தை)

(இறைவனின் திருவருள் உயிர்களின் பொருட்டு ஐந்தொழில்களைச் செய்கையிற், திருவருள்தானே இத்தத்துவங்களையதிட்டித்தலின், இவை இறைவனுக்குச் சுதந்திர வடிவங்களாம். ஞானவடிவாகிய சிவம் மலகன்மங்களோடு விரவாத இச்சிவதத்துவங்களைத், தன் திருவருட்சக்திகளினாற் தொழிற்படுத்துவர். இவ்வுபசாரத் திருமேனிகள்யாவும், அருட்சக்தியிடமேயன்றி, முதல்வனிடம் தோன்றமாட்டா. சிவன் இத்தத்துவங்களைத் தொழிற்படுத்துவதனால் இலயம், போகம், அதிகாரமென, மூன்றாயடங்கும் ஐந்தவத்தைப் படுவன். சிவன் ஞானசக்தியைப் பொருந்தி நிற்கின்ற அருவத்திருமேனி நிலையில் இலயசிவன் எனப்படுவர். சிவன் ஞானசக்தியையும், கிரியா சக்தியையும் பொருந்தி அருவுருவத்திருமேனியடையும் நிலை சதாசிவர் அல்லது போகசிவன் எனப்படுவர். சிவன் ஞானசக்தி குறைந்தும், கிரியாசக்தி மிகுந்தும் நிற்கும் உருவத்திருமேனி நிலை மகேசுவரர் அல்லது அதிகார சிவன் எனப்படுவர். சிவம், சதாசிவம், மகேசுவரம் ஆகிய மூன்றுக்கும் சத்திகளின் தொழில் வேறுபாட்டால் பேதங்களுண்டென உபசாரமாகச் சொல்லினும், இவற்றுட் பேதமில்லை. இவ்வாறு இறைவனின் திருவருட்சக்திகள் இவ்வைந்து சிவதத்துவங்களையும் கூடித் தொழிற்படும்போது சொற், பொருட் பிரபஞ்சம் தோன்றும். (இச்சிவதத்துவங்கள் பற்றி மேலும் தெளிவதற்கு சி. சித்தியார் 85 "ஞானமேயானபோது", சிவப் பிரகாசம் செய்.21 "உன்னலரும்", செய். 14. "நீடுபராசக்தி", உண்மை விளக்கம் செய். 21 "சுத்தவித்தைஞான" முதலானவற்றைப் பார்க்க)

<u>குறிப்பு : -</u>

| | |
|---|---|
| இலயசிவன் : | சிவன் ஞானசக்தியைப் பொருந்தி நிற்கின்ற அருவத் திருமேனி நிலை. இந்நிலையிற் சிவம் எனப்படுவர் |
| போகசிவன் : | சிவன் ஞானசக்தியையும், கிரியா சக்தியையும் பொருந்தி அவ்வுருவத்திருமேனியாக நிற்கும் நிலை. இந்நிலையிற் சதாசிவர் எனப்படுவர். |
| அதிகாரசிவன் : | சிவன் ஞானசக்தி குறைந்தும், கிரியாசக்தி மிகுந்தும் நிற்கும் நிலை. இவ்வுருவத்திருமேனி நிலையில் மகேசுவரர் எனப்படுவர். (சிவன் ஒருவரே சக்திகளின் தொழில் வேறுபாட்டாற் பேதங்களுண்டென உபசார மாகச் சொல்லப்படுகின்றது |
| புருடன் | தத்துவச் சேர்க்கையாலான உடம்போடு பொருந்திய நிலையில் உயிர் புருடன் எனப் பட்டது |

(உயிர்த்தத்துவம்)

இவ்வாறு மேற்குறிப்பிட்ட சிவதத்துவங்கள் ஐந்து, கலை முதலான வித்தியாதத்துவங்கள் ஏழும் விரிவதனால் இச்சா, ஞானக் கிரியைகள் விளங்கப் பெற்ற உயிர் போகங்களை அறியத்தக்க வல்லமை பெறும் நிலையில் உயிர்த்தத்துவம் எனப் பெயர்பெறும். (சி.சி.செய். "விச்சையினராகந்"). மேற்கூறிய கலையிற் ஸ்ரீகண்டருத்திரர் அதிட்டிப் பதனாற் தோன்றி மூலப்பகுதி (பிரகிருதி) வெளிப் படாத குணவடிவாகி நின்று உயிர்களையும், தத்துவங் களையும் கலந்து நிற்கும். (சி.சி. 147 "வருங்குண வடிவாய்")

குணதத்துவம் 24
(இதிலிருந்தே புத்தி முதல் பூமியீறாகிய உயிர்த்தத்துவங்கள் இருபத்து நான்கும் விரிவனவாம்)




சிவப். செய் 27 "மன்னிய கன்மேந்திரிய", சி.சி. செய் 152 "வாக்கொடு பாதம்", 153 "வாயாதி", 154 "ஓசை" நற்" 155 "சாற்றியபஞ்ச" (ஒடுக்கத்தில் இத்தத்துவங்கள் யாவும் விரிந்த முறையே ஒடுங்குவனவாம்)

# ஆசிரியரது பிற வெளியீடுகளும், ஆய்வுக் கட்டுரைகளும்



1. இலங்கையிற் தொல்லியலாய்வுகளும், திராவிடக் கலாசாரமும்: முதற்பதிப்பு, கத்தோலிக்க அச்சகம், மட்டக்களப்பு, 1988; இரண்டாம் பதிப்பு, மணிமேகலைப் பிரசுரம், சென்னை – 17, 2001. இந்நூலில், தமிழகத்திலிருந்து ஈழம் (ஏழ்பனை நாட்டுப்பிரிவு) கடல்கோளினால் துண்டிக்கப்பட்டு, தனிநாடாகியபின் அங்கு தொடர்ந்தும் வாழ்ந்தவர்கள் ஆதிதிராவிடக் குடிகளே (சேரர், சோழர், பாண்டியர்) என்பதனை தொல்லியல் ஆதாரங்கள் கொண்டு நிறுவியுள்ளார். அதனால் இலங்கையின் பூர்வீக வரலாறானது ஆதிதிராவிடர் வரலாற்றினால் நிரப்பவேண்டிய அவசியத்தையும் வலியுறுத்துகின்றார். இன்று உலகெங்கும் பரவிவாழும் தமிழர்கள் தம் இன வரலாற்றினைப் பின்னோக்கிப் பார்த்திட இது ஒரு சிறந்த ஆய்வு நூலாகும்.

2. வங்க இளவரசர் விஜயன் வரலாறும், இலங்கையிற் சிங்கள இன, மொழி, எழுத்துத் தோற்ற, வளர்ச்சி நிலைகளும் (மீளாய்வு): கத்தோலிக்க அச்சகம், மட்டக்களப்பு, 1989. இந்நூலில் விஜயன் இன, மொழி, சிங்கள எழுத்து உருவாக்கம் முதலானவற்றின் வரலாறுகளை மீளாய்வு செய்வதுடன், எவ்வாறு குடியேற்றவாசிகளாக இலங்கையையடைந்த விஜயனும், தோழரும் தமக்கென ஒரு அரசாட்சியை ஏற்படுத்திக் கொண்டு, ஆக்ரமிப்பாளராக தமிழர் பிரதேசங்களைத் தமதாக்கினர் என்ற வரலாற்றினையும் சுருக்கமாக ஆராய்ந்துள்ளார்.

3. மட்டக்களப்பு மான்மிய ஆராய்ச்சி: கத்தோலிக்க அச்சகம், மட்டக்களப்பு, 1993. இந்நூலில் கிழக்கிலங்கையின் ஆதிவரலாற்றில் இராவணன் அரசாட்சி, அயோத்தி நாகர் தொடர்புகள் என்பவற்றைச் சுட்டிக்காட்டி, பின் கி.மு. 3ஆம் நூற்றாண்டளவில் தமிழ்மூவேந்தர் தலைமையை ஏற்றுக்கொண்ட கலிங்கத் தமிழரசுகளால் உருவாக்கி கட்டிக் காக்கப்பட்ட ''மட்டக்களப்புத் தமிழரசுகள்'' எவ்வாறு சைவத்தையும், தமிழையும் பேணி வளர்த்தனர் என்பதனை 'மட்டக்களப்பு மான்மியம்' எனும் கைநூலின் துணைக்கொண்டு ஆராய்ந்துள்ளார்.

4. மேற்குறிப்பிட்ட ஆய்வு நூல்கள் தவிர, வேறுபல சமய, தத்துவக் கட்டுரைகளையும் எழுதியுள்ளார். இவை பற்றிய விபரங்களை கொழும்புத் தமிழ்ச் சங்கத்தின் ஈழத்து எழுத்தாளர் விபரக்கொத்தில் காணலாம்.

மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.